3 குழைந்த மகாதேவர் கோயிலில் தேவகன்மிக்கும் ஸ்ரீ மாஹேஸ்வர கண்காணி செய்வார்களுக்கும் ஸ்ரீகாரியம் செய்வானுக்கும் இத்தேவர்களுக்கு வேண்டும் நிவந்தங்க

4 ளுக்கு இறுப்பதாக இக்கோட்டத்து பள்ளடிப்பாக்கம் இத்தேவர்க்கு தேவ காணி நிலம் முப்பத்திரண்டாவது பசான முதல் இடக்கடவதாக கைக்கொண்டு நிவந்தம் செலுத்தப் பண்ணுக எழுதினான் திருமந்திர ஓலை சோழ முவேந்த வேளான் எழுத்து இவை வாணாதிராயன் எழுத்து இவை தொண்டையமான் எழுத்து இவை சிங்கள

5 ராயர் எழுத்து இவை கேரளராயன் எழுத்து

# 20. ஒழுகையூர் கல்வெட்டு

சு. இராசவேலு, சென்னை.

**இடம் :** வேலூர் மாவட்டம், வாலாஜாபேட்டை வட்டம், ஒழுகையூர் சிவன் கோவிலிலுள்ள தூண்.

**காலம்:** சகம் 1117, (கி.பி.1195)

**செய்தி:** உத்தமன் தொண்டைமான் என்பவர் திருமண்டபம், படிக்கட்டு அமைத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 சகரயாண்
3 டு 1117 இத்தி
4 ரு மண்டபமு
5 ம் சோபானமு
6 ம் செய்தான்
7 உத்தமன் தொ
8 ண்டைமான்

# 21. வேலூர் கல்வெட்டுகள்

*ம. காந்தி, வேலூர்.*

***21:1***

***இடம் :*** *வேலூர் நகரின் ஒரு பகுதியான கொணவட்டம் என்ற இடத்திலுள்ள பள்ளிவாசல் குளத்திற்குக் கட்டப்பட்டுள்ள கருங்கல் படிகளில் தரைமட்டத்து முதல் படி.*

***காலம்:*** *கி.பி.12 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *தேவதானம் பற்றி குறிப்பிடும் இக்கல்வெட்டு காணப்படும் படி பழைய கோயிலின் முப்பட்டை குமுதமாகும்.*

1 ங்களூர் தென்கோட்டில் பல தளி நீக்கி [12] ஆடி மாத முதல் வெள்ளரிச்வரமுடைய நாயனார் தேவதானத்துக்கு கிழக்கு
2 டி பள்ளக்காலுக்கு மேற்கு பள்ளக்காலுக்கு தெற்கு வஞ்சிப்பூட்டைச் செறுவுக்கு வடக்கு இதுக்கு உட்பட்ட நிலம் நா
3 க காணிக்கை திருவாசல் வினியோகம் சந்திவிக்ரஹம் நாட்டு வரி ஊற் கணக்கர் ஆசு பொதுமக்கள்
4 ம் நாலுவேலியும் சர்வ மானியமாக தேவதானமாக குடுத்தோம் இப்படிக்குக் கல்லிலும் செம்பிலும் வெ.

***21:2***

***இடம் :*** *வேலூர் நகருக்குக் குடிநீர் அளிக்கும் ஓட்டேரியின் பழைய மேற்குக் கலிங்கில் உள்ள கல்வெட்டு.*

***காலம்:*** *கி.பி.1772*

***செய்தி:*** *கலிங்கு கட்டியமை.*

1 நந்தன
2 வருஷம் ஆவ
3 ணி மாதம் 20
4 தேதி அசரது
5 ம்மது பா
6 கூற் சா
7 யபு க
8 ட்டி வச்ச
9 கலிங்
10 கில்

# 22. கங்கை கொண்ட மாராயன் நடுகல் கல்வெட்டு

ப. வெங்கடேசன், வாலாஜாபேட்டை.
ம. காந்தி, வேலூர்.

**இடம் :** வேலூர் மாவட்டம், குடியாத்தம் வட்டம், பேரணாம்பட்டிற்கு அருகிலுள்ள சின்னதாமல்செறு என்ற இடத்திலுள்ள நடுகல்லின் கீழ்ப்பகுதி.

**காலம்:** கி.பி. 12ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** 2 அடி அகலம் 3½ அடி உயரம் கொண்ட நடுகல்லில் வீரன் ஒருவன் வாள் கேடயத்துடன் முன் நோக்கிச் செல்லுவதுபோல் காட்டப்பட்டுள்ளது.

1 (தெ)கங்கை கொண்ட மாராயன் ம . . .
2 [கவளத] ஆவரதாழிய் உயி . . .
3 ர் கொன்று குதி கொள எய் . . .



# 23. மூன்றாம் விக்கிரம பாண்டியன் கல்வெட்டு

க. பன்னீர்செல்வம், மைசூர்.

**இடம் :** திருநெல்வேலி மாவட்டம், பாளையங்கோட்டை, இராசகோபாலசுவாமி கோயிலின் கருவறையின் வெளிப்புற வடக்குச் சுவரிலுள்ள கல்வெட்டுகளில் ஒன்று.

**காலம்:** மூன்றாம் விக்கிரம பாண்டியன், யா.11 (கி.பி.1227)

**செய்தி:** கோயிலில் இரண்டு சந்தி விளக்கு எரிப்பதற்காக ஸ்ரீவல்லபமங்கலத்து வடபிடாகை சுந்தரபாண்டியநல்லூரில் நிற்கும் படையில் பணியாற்றிய திருநெல்லி அரியாளன் என்பவன் பதின்மூன்று ஆடுகள் கொடுத்தமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ கோமாரபன்மரான திரிபு$_4$வனச்சக்கரவத்திகள் ஸ்ரீவிக்கிரம பாண்டிய தேவர்
2 கு யாண்டு 11வது கீழ்களக்கூற்றத்து ப்$_3$ரஹ்(ம)தே$_3$யம் ஸ்ரீவல்லப மங்கலத்துத்திரு
3 மேற்கோயில் ஸ்ரீவல்லப விண்ணகராள்வார்க்கு நித்தஞ் சந்தியாதீபம் இரண்டுக்கு இவ்
4 வூர் வடபிடாகை சுந்தரபாண்டியநல்லூர் நிற்கும் படையில் திருநெல்லி அரியாளேன் விட்ட ஆடு
5 பதின்மூன்று இவ்வாடு பதிமூன்றுஞ் சாவா மூவா பேராடாய் சந்தியாதீபம் இரண்டுஞ் சந்திரா
6 தித்தவற் செல்வதாக.

# 24. வெண்பாவூர்க் கல்வெட்டுகள்

இல. தியாகராஜன், அரியலூர்.

பெரம்பலூர் மாவட்டம் வேப்பந்தட்டை வட்டத்தில் வெண்பாவூர் அமைந்துள்ளது. வெள்ளாற்றின் கிளை நதியான கல்லாற்றின் தென்கரையில் உள்ள இவ்வூரில் கி.மு.5ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த வட இந்திய மகதப் பேரரசுகள் வெளியிட்ட வெள்ளி முத்திரைக் காசுகள் கிடைத்துள்ளன. இதனால் இவ்வூர் வணிக முக்கியத்துவம் மிக்க இடங்களில் ஒன்றாக இருந்தது என அறியலாம். பிற்காலச் சோழர் காலத்திலும் இவ்வூர் ஒரு வணிக நகரமாக தொடர்ந்து சிறப்புற்றிருந்தது. பதினெண்விஷயத்தார், நானாதேசிகள், மலைமண்டலத்து வணிகர்கள் ஆகியோர் இங்கு தங்கி வணிகம் செய்துள்ளனர். இவ்வூர் வணிகர்களைப் பாதுகாக்கும் படைத் தளமாக "சூரதளம்" எனும் பெயருடன் விளங்கியது. இங்குள்ள சொர்ணபூரீஸ்வரர், வரதராஜப்பெருமாள் என்னும் இரண்டு கோயில்களும் மூன்றாம் இராஜராஜ சோழன் (1216-1257) கீழ் சிற்றரசராக இருந்து இப்பகுதியை ஆட்சி செய்த ஆறகளூர் வாணகோவரையர் வம்சத்து மன்னர் செம்பை இராஜராஜ மகதனான வாணகோவரையன் என்பவர் காலத்தில் இவை கட்டப்பட்டுள்ளன. இக்கோயில்களை இவர் தனக்குமுன் புகழுடன் ஆட்சிசெய்த மகதேசன் பொன்பரப்பின வாணகோவரையன் (கி.பி.1172 -1216), தாயிலும் நல்லபெருமாளான குலோத்துங்க சோழ வாணகோ வரையன் (1181-1220) ஆகியோரின் பெயர்களில் கட்டியுள்ளார். இவ்வூரைப் பற்றிக் குறிப்பிடும் மூன்று கல்வெட்டுகள் இவ்வூருக்கு அருகிலுள்ள திருமாந்துறைச் சிவன்கோயிலிலிருந்து கிடைத்துள்ளன.

**24:1**

**இடம்:** சொர்ணபுரீஸ்வரர் கோயில் கருவறை மேற்குச் சுவர் முப்படைக் குமுதம்.

**காலம்:** மூன்றாம் இராஜராஜ சோழன், யா.12, (கி.பி.1228).

**செய்தி:** வாணகோவரையன் என்ற சிற்றரசர் பொன்பரப்பின ஈஸ்வரமுடைய நாயனார்க் கோயில் பூஜைக்கும், திருப்பணிக்கும் என நன்செய் நிலம் அரையும், புன்செய் நிலம் 14 வேலியும் இறையிலியாக வழங்கியமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இராச[ரா]ஜ சோழ தேவற்க்கு யாண்டு பன்னிரண்டாவது வ[ா]ணவதரையன் ஓலை வெம்

2 பார் ஊரவரும் தானத்தாரும் கண்டு தங்கள்ளூர் உடையார் பொன்பரப்பின ஈசுவரமுடைய நாயனார்க்கு பூசைக்கு திரு

3 ப்பணிக்கு இறையிலியாக இட்ட நன்செய் நிலம் அரையும் புன்செய் நிலம் பதினாலு வேலியும் இட்டே[ன்] வ[ா] ணகோவரை[ய] னேன் இது திருமுக
4 ப்படி

## 24:2

**இடம் :** *கருவறை மேற்கு, தெற்குச் சுவர் முப்பட்டைக் குமுதம்.*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜ சோழன், யா.14, (கி.பி.1230).*

**செய்தி:** *மேற்படி கோயில் நிவந்தங்களுக்கும், திருப்பணிக்கும் என 1 1/2 நன்செய் நிலமும், 10 வேலி புன்செய் நிலமும் இறையிலியாக வழங்கியமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீரிஇராசராச சோழ தேவற்க்கி யாண்டு 14வது உடையார் பொன்பரப்பின ஈசுவர
2 முடைய நாயநார் தேவதான நன்செ நிலத்தில் பலபடி நிமந்தத்துக்கும் திருப்பணிக்கும் இறையிலியாக விட்ட நன்செய் நில
3 ம் ஒன்றரையும் புன்செய் நிலம் பத்து வேலியும் திருமுகப்படி
4 பின்பு 25வது காமைய சாகாணி சிங்கயனேன் இறையிலியாக இட்ட புன்செ நிலம் ஒரு வேலியும்

## 24:3

**இடம் :** *அர்த்த மண்டபத் தெற்குச் சுவர்.*

**காலம்:** *மூன்றாம் இராஜராஜ சோழன், யா.20, (கி.பி.1236).*

**செய்தி:** *இவ்வூரில் மிளகு விற்பனை மற்றும் தரகு ஆகியவற்றால் வரும் ஆயத்தில் இரண்டு பங்குத் தொகையை பொன்பரப்பின ஈஸ்வரமுடைய நாயனார் கோயில் திருப்பணிக்கும், ஒரு பங்கை இவ்வூரில் உள்ள தாயிலும்நல்ல விண்ணகர ஆழ்வார் திருப்பணிக்கும் தரும்படி அதிகாரியாக விளங்கிய யாதவராயன் வெம்பார் ஊர்ச் சபையாருக்கும் இவ்வூர் நகரத்தார்களுக்கும் உத்தரவிட்டுள்ளதைக் கூறுகிறது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ இரா
2 ச ராச தேவற்க்கு யாண்டு 20வது இயா
3 தவராயன் ஒலை வெம்பாரூரவரும் நகரத்
4 தாரும் கண்டு தங்களூர் மிளகு தரகு ஆயம் உடை
5 டயார் பொன்பரப்பின ஈசுவரமுடைய னா
6 யனார் திருப்பணிக் கிருகூறும் தாயிலு நல்ல விண்
7 ணகர ஆழ்வார் திருப்பணிக் கொரு கூறும்
8 குடுத்தேன் இப்படிக்கிவை யாதவராயந் எ
9 ழுத்து இவ்வோலை எழுத்து சோழ பாண்
10 டிய வேளான்

## 24:4

**இடம் :** *இராஜ கோபுர உட்புறம் இடப்பக்கச் சுவர்.*

**காலம்:** *கி.பி.15-16ஆம் நூற்றாண்டு.*

**செய்தி:** *வெண்ம்பார் பொன்பரப்பின சுவாமி கோயில் திருச்சுற்று மாளிம்மை (மாளிகை) ஸ்ரீ லட்சம ரெட்டியார் என்பவர் தருமமாகக் கட்டியுள்ளார்.*

1 பிறை யொப்ப வருஷம் தையி மாத
2 ம் நாள் 5 வெண்ம்பார் பொன்
3 பரப்பினாத சுவாமி திருசுத்து
4 மாளிம்மை ஸ்ரீலஷ்ஷம ரட்டியார்
5 இட்ட தர்மம்

## 24:5

**இடம் :** *இராஜ கோபுர உட்புறம் இடப்பக்கச் சுவர்.*

**காலம்:** *15-16ஆம் நூற்றாண்டு.*

**செய்தி:** *பெண்ணை ஆறு பாய்கின்ற பகுதியில் உள்ள ஏமப்பேர் என்ற ஊரைச் சேர்ந்த வினைதீத்தா பிள்ளை என்பவர் இக்கோயில் உச்சிக்கால பூஜைக் கட்டளைக்கு இவ்வூர்ப் பெரிய ஏரிப் பகுதியில் 500 குழி நஞ்சை நிலமும், 200 குழி புஞ்சை நிலமும், திருவிளக்கு கட்டளைக்கென 300 குழி நஞ்சை நிலமும், 200 குழி புஞ்சை நிலமும் தானமாகக் கொடுத்துள்ளமை.*

1 பெண்ணை சீர்மையில் ஏமப்பேறு
2 வினை தீத்தா பிள்ளை குமாரன் வினை தீத்தா
3 பிள்ளை உச்சிக்கால கட்டளைக்கு பெரி ஏரி பிற
4 கரையில் விட்ட நிலம் நஞ்சை குருளு புஞ்சை
5 விரை கு உள திருவிளக்கு உபையம் நஞ்சை கு 300
6 புஞ்சை விரை கு 200 இந்த தற்மம் வருஷாந்
7 திரமாக சந்திர சூரியாள் உள்ள வரை நடக்க
8 கடவேராகவும் இதுக்கு யா
9 தாமொருவர் அழிவு தேடினவன்
10 கெங்கை கரையிலே காராம் பசுவை கொண்
11 ண பாவத்திலே போக கடவே னாகவும்

## 24:6

**இடம் :** *மகாமண்டப வடக்குச் சுவரில் பொருத்தப்பட்டுள்ள கல்.*

*காலம்:* கி.பி. 17-18 ஆம் நூற்றாண்டு.

*செய்தி:* வெண்பாரில் இருந்த ஞானியர் என்பவரின் மகன் சொறிய முத்திரியன் என்பவர் பொன்பரப்பினாதற்கு திருமஞ்சனம் செய்ய (அபிஷேகம்) கிணறு அமைத்துள்ளமை.

1 சவுமிய வருஷம்
2 சித்திரை மாதம் 30 தேதி
3 வெண்பாரி லிரு
4 ந்த ஞானியர் மகன்
5 சொறிய முத்திரியன்
6 பொன்பரப்பி னாதற்கு
7 திருமஞ்சனம் யுண்டா
8 க்கின பலன் சதா சேருவை

## 24:7

*இடம் :* மகாமண்டப நுழைவாயில் சோபான நிலைப்படி.

*காலம்:* மேலது.

*செய்தி:* சில கொடையாளர் பெயர்கள்.

1 குப்ப
2 த்தா
3 சதா சே
4 ர்வை
5 சங்கர நாறன
6 ய்யன் முதலியார்
7 சதா சேறுவை
8 சின்னிய்ய
9 முதலியார் சதா
10 சேறுவை

## 24:8

*இடம் :* வரதராஜப் பெருமாள் கோயில் வளாகத்தில் கிடக்கும் தனிக் கற்பலகை.

*காலம்:* கி.பி.12-13ஆம் நூற்றாண்டு.

*செய்தி:* சித்திரமேழி வணிகக்குழு பற்றியது. இக்கல்வெட்டில் குறிப்பிடப் படும் "தாயிலும்நல்ல பெருமாள்" என்ற பெயர் இவ்வூர்ச் சிவன்கோயிலில் உள்ள மூன்றாம் இராஜராஜனின் 20-ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டில் "தாயிலும் நல்ல விண்ணகர ஆழ்வார்" என்று குறிப்பிடுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ சித்தி
2 ரமேழி மலை மண்டல
3 த் தேசி விண்ணகர்
4 தாயிலு நல்ல பெ
5 ருமாள்.

## 24:9

*இடம் :* திருமாந்துறை, கல்யாண ஜோதீஸ்வரர் கோயில் கோபுரம் தெற்குச்சுவர் பீடம்.

*காலம்:* மூன்றாம் குலோத்துங்கன் (1178-1218), யா.20, (கி.பி.1198).

*செய்தி:* *இங்குள்ள உம்பர் நாயகர் கோயில் பூஜைக்கும், திருப்பணிக்கும் என வெம்பார் வணிகர் தெருவில் கிடைக்கும் தரகு வருமானத் தொகையைக் கொடுத்தது பற்றியது. இதிலிருந்து திருமாந்துறையிலும் வெண்பாலூர் வணிகர்கள் வந்து வியாபாரம் செய்துள்ளதை அறியலாம்.*

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழதேவர்க்கு யாண்டு
2 25 ஆவது உடையார் உம்பர் நாயகர்க்கு வெம்பார் வணிகர் தெருவில் தரகு பூசை
3 க்குத் திருப்பணிக்கும் ஆகக் குடுத்தோம்

***24:10***

*இடம் :* *மேலது, வடக்குச்சுவர் பீடம்.*

*காலம்:* *மூன்றாம் குலோத்துங்கன், யா.28, (கி.பி.1206).*

*செய்தி:* *வெம்பாரிலிருந்த பதினெண்விஷையத்து நாட்டு வாணிக நகரத்தார்கள் தாங்கள் வியாபாரம் செய்யும் பொருட்களுக்கு ஏற்ப அதில் ஒரு தொகையை மகமை ஆக ஏற்படுத்தி இக்கோயிலுக்குக் கொடுத்தமை. மேலும் வெம்பார் வணிகர் தெருவில் இருக்கும் சூரதளத்தார் செய்யும் காவல் பணிக்காக வசூலிக்கப்படும் வரித்தொகையையும் இக்கோயிலுக்கு வழங்கியமை.*

***துண்டுக் கல்வெட்டு : 1***

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவற்கி யாண்டு 28ஆவது உடையார் உம்பர் நா
2 யகர் திருக்கோயில் திருக்கற்றளியுந் திருமேனிக்கு பரிகல பரிச் சின்னங்களும் மற்று எப்பேறபட்ட

***துண்டுக் கல்வெட்டு : 2***

1 எருத்துப் பொதிக்கு ஒரு காசுந் தலைச் சுமைக்கு அரைக்காசும் நாட்டில் வாணிகர் அழிபிழைக்கு நாம் பட்டணப் பகுதி வைச்சுக் குடுத்தபடி

***துண்டுக் கல்வெட்டு : 3***

1 யத்து வாணிகர் தன்மமாதலால் நாம் நாயநாற் பூசை திருப்பணிக்கும் -
2 டு திருப்பணிக்கு இடக்கடவோம் பதினெண் விஷையத்து நாட்டு வாணிக நகரத்தோம் -
3 விஷையத்து நாட்டு வாணிக நகரத்தோம் வெம்பார் வணிகர் தெருவில் சூரதளத்தார் பேறுள்ளது சீபண்டாரம் . . . நாங்கள் மற்று எற் . . .

# 25. மருங்கூர் கல்வெட்டுகள்

சி. லெட்சுமணன், சிங்கம்புணரி.

## 25:1

**இடம் :** திருச்சி மாவட்டம், துவரங்குறிச்சிக்கு மேற்கே, நத்தம் செல்லும் வழியில் 3 கிமீ தூரத்தில் பழையபாளையம், வடக்குப்பட்டிக்கு நடுவில் சிதைவுற்ற நிலையிலுள்ள கோவிலின் நுழைவாயில் குமுதப்படை.

**காலம்:** சோணாடு வழங்கியருளிய சுந்தரபாண்டியன், யா. 17, (கி.பி.1233-34)

**செய்தி:** கோயிலுக்குக் கொடை வழங்கியமை.

1 ஸ்வஸதி ஸ்ரீ கோமாரபன்மரான சக்ரவர்த்திகள் சோணாடு கொண்டு முடிகொண்ட சோழபுரத்து . . . அருளிய சுந்தபாண்டிய தேவற்கு யாண்டு 17ஆவது எதிர் எண்பத்தேழாம் நாள் மருங்கூர் நாட்டு மருங்கூரா[ன] செயங்கொ
2 ண்ட சோழபுரத்து உடையார் அகத்தீஸ்வரமுடைய நாயனார்க்கு . . . கருமாணிக்க . . . தேவந் . . . பேரேரியில் திருநாகச்சன் தேவன் உள்ளிட்டார் நாயநானார்க்கு விலையாலும் தாநத்தாலும் குடுத்த நிலம் ஒரு மா முந்திரிகையும் . . .
3 நிலத்துக்கு . . . கருமாணிக்கப்பட்டந் மேலெ ஆண்டார் . . . தொகையில் கடமை . . . முள்ளது கொண்டு சொக்க நாயனார் திருமேனிக்கு . .
4 . . . நாள் முதல் நித்தம் உதம்மாக நாள் ஒன்றுக்கு நானாழி அரிசி அமுதுபடி செய்யக்கடவதாகவும் நாயனார் நடையிட்டி நடபடிகள் வெட்டிக் கொண்டமைக்கு இது பன்மாகே.

## 25:2

**இடம் :** மேற்படி கோயிலின் வடக்குச்சுவர்.

**காலம்:** எம்மண்டலமும் கொண்டருளிய குலசேகரபாண்டியன், யா. 39, (கி.பி.1305)

**செய்தி:** கோயிலுக்கு வழங்கிய திருநாமத்துக்காணி (நிலக்கொடை) பற்றியது.

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 கோமாறபன்மனான திரிபுவ

3 ந சக்ரவர்த்திகள் எம்
4 மண்டலமும் கொ
5 ண்டருளிய கொலசேகர தேவ
6 ற்கு யாண்டு 39 - மீன
7 நாயற்று அமரபக்ஷத்து . . .
8 வியாழக் கிழமையும் பெற்ற பூசத்
9 து நாள் மருங்கூர் நாட்டு ஊர் மன்னு
10 குறிச்சி உடையார் திருவகத்தீசுவரமுடையந
11 ாயனர் கோயிற் ஸ்ரீ ருத்ரமாஹேச்வர தேவகன்மி
12 . . .
13 . . . பிரமாணம் பண்ணிக்
14 குடுத்த பரிசாவது இந்நாயனார் திருநாமத்துக்காணி பாதிரிக்குள
15 த்து வடகடையடுத்து அமரகள் சுந்தரநேரிக்கு பெருனான்
16 கெல்லையாவது கீழ்பார்க் கெல்லை செய்யக
17 ங்கன் குளத்துக்கு வடகடையில் நிற்கிற திருச்சூழைக் கல்லுக்கு
18 மேற்கும் தென்பாற்கெல்லை பாதரிவயலில் வட வயலில் நிற்கி
19 ற திருச்சூழைக் கல்லுக்கு வடக்கும் மேல்பாற் கெல்லை புளியம் பூ
20 ல மலை . . . துக்கு கிழக்கும் வடபாற் கெல்லை . . .
21 த்து நீர் கோள் உவகைக்குத் தெற்கும் ஆக இசைந்த பெருநான்கெல்
22 லைக்குட் பட்ட குளமும் வயலும் உடை குளப் படுமரக் காடாக கி
23 டக்கையில் குளம் உடைப்பும் அடைத்துக் காடும் வெட்டி வய
24 லும் திருத்தி பயிற் செய்வாராகவும் பயிரை செய்யுமிடத்து தவ
25 ணை முதலாக ஸ்ரீபண்டாரத்தில் ஒடுக்கிந பணம் 20 குளத்தில் இட்டு
26 க் குழிவெட்டி . . . ள்ளது காட்டும் பணம் 3ம்
27 ஆக பணம் . . . இ. ப்பணம் . . ரும் இவர்கப்படியே ... ருத்து இவாண்டு முதல் ... இக்கல்
28 காண்டு பயிற்செய்து ஸ்ரீ பண்டாரத்தார்க்குடன் கண்காணித்து முக
29 வா . . . னாயநார் கும் மேல் வாரமாக் கடவோம்

***25:3***

***இடம் :*** *மேற்படி கோயிலின் நுழைவுவாயிலின் தென்புறச்சுவர்.*

***காலம்:*** *நாயக்கர் காலம்.*

***செய்தி:*** *கோயில் பணியாளருக்கு மருங்கூர் நாட்டு முடனூரையும் அதன் குளம் மற்றும் சிலவரி வருவாயையும் அனுபவிக்க வழங்கியமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ மகாமண்ட லேசுவர விபாகன பாஷைக்குத் தப்புவரான . . .
2 ண்டு கொண்ட நாடு கொடாதான் . . .

3 தாவுக்களில் கம்பய நாயக்க உடையார் . . . சாதிகாரம் பண்ணி அருளாநின்ற சகா ப்தம் . . .

4 . . . செல்லா நின்ற . . . வருஷம் . . . பக்ஷத்து துளாராசியும் திங்கட் ழமையும் பெற்ற தருண . . . நாள் உடையார் காரி

5 யத்துக்கு கட . வா . . திரு மலைநாட்டு திருக்கொடுங்குன்ற ஈஸ்வரமுடையார் திருக்கொடுங்குன்ற முடைய

6 நாயனார் கோயிலி ஸ்ரீ காரியம் செய்வார் நல்லமங்கைபாகர் குன்ற நம்பியாருக்கு தண்டிறையில் மானிபமா

7 கக் குடுத்த மருங்கூர் நாட்டு முடனூரும் முடனூர் குளமும் இவ்வூர் நான்கெல்லைக்குட்பட்ட நத்தமும் நன்

8 செய் புஞ்செயு பாசிப்பாட்டமும் கடமைகாணி . . . பல உபாக்கங்களும் அனுபவித்துப் போதக் கடவார்

9 . . . காணி . . . நாயினார் திருஅகத்தீசுவரமுடைய . . .

10 . . . மரக்கால் மரக்கால் பதக் . . . தண்டறையிலிமா . . . வரையும்

11 சறுவமானியமாக கல்லிலும் செம்பிலும் வெட்டிக் கொள்வ . .

12 இத்தன்மத்துக்கு அத்தமஞ் சொன்னவர்கள் கெங்கை

13 கரையில் . . . புகக் கடவார்கள் இப்படிக்கு காங்கைய நாட்டு கரணபுரத்து

14 நாதர்கையெழுத்து இப்படிக்கு காணிக்கும் திருமலைநாதனெழுத்து . . . லஸ்ரீ ருத்ரமாஹேசுவரரும்மருங்கூர் நாட்டாரும் இவ . . .

# 26. அயன்பேரையூர்க் கல்வெட்டுகள்

இல. தியாகராசன், அரியலூர்.

**26:1**

**இடம் :** பெரம்பலூர் மாவட்டம், வேப்பந்தட்டை வட்டம் அயன்பேரையூர் என்னும் சிற்றூரில் உள்ள சிவன் (முக்குட்டீஸ்வரர்) கோயிலின் கருவறைத் தென்புறச் சுவர்.

**காலம்:** மூன்றாம் இராஜராஜன், யா.25, (கி.பி.1241).

**செய்தி:** வெள்ளாறு, கல்லாறு, உப்பாறு ஆகிய மூன்று ஆறுகளும் ஒன்று சேரும் இடத்தில் இவ்வூரும் கோயிலும் அமைந்துள்ளதால் கோயிலுக்கு அக்காலத்தில் திருமுக்கூடலுடைய நாயனார் கோயில் என்ற பெயர் வழங்கியது. செம்பை இராஜராஜ தேவனான வாணகோவரையன் (கி.பி.1226-1244) பேரலூர் திருமுக்கூடலுடைய நாயனார் கோயிலுக்கு நன்செய், புன்செய் நிலங்களை தேவதான இறையிலியாக வழங்கியுள்ளார். அவர் வழங்கியபடியே அதை போசள மன்னரின் தளபதி மகாபிரதானி குமர தேவண்ண தண்டநாயக்கர் என்பவரும் கொடுத்துள்ளார் என்று இக்கல்வெட்டு கூறுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீ
2 இராஜராஜ தேவற்கு யாண்டு 25வது ஸ நூ
3 று அபர பக்ஷத்துப் புதன் கிழமையும் பெற்ற திருவே
4 ாணத்து நாள் ஸ்வஸ்திஸ்ரீமநு மஹாப்ரதாநி
5 குமரதேவண்ண தண்ட நாயக்கநேன் வ
6 ன்னாட்டு பேரலூருடையார் திருமுக்கூடலு
7 டைய நாயனார் தேவதாநம் நன்சை புன்
8 சை [செம்பை இராஜராஜ தேவனான] வாண கோவரையன்
9 . . . விட்டப
10 டியே 25ஆவது ஆனிமாதம் முதல் சந்
11 திராதித்தவரையும் செல்லக் கடவிதாக
12 இறைஇலியாக விட்டோம் இந்தச் சிவகா
13 ரியத்துக்கு விக்நம் நிறைத்தாருண்டாகி
14 ல் சிவத்து ரோகியும் நாட்டுத்துரோகியு
15 மாய் என் குதிரைக்குப் புல்லிடும் பறைய
16 னுக்குத் தன் மினாட்டியை குடுப்பான்
17 இப்படிக்கு . . .
18 தேவதானம் கல்வட்டிக் குடுத்தே
19 ன் குமார தேவண்ண தெண்டநாயக்

20 க நேன் உ இது ஸ்ரீமாஹேஸ்வர ரக்ஷைஷ உ
21 சிவ மஸ்து உ அறஞ் செய்தான் செய்தா
22 ன் அறங்காத்தான் பாதடி திறம்பாம
23 ல் சென்னிமேல் வைத்து உ ஸிவமஸ்து உ

**26:2**

**இடம் :** மேலது, மகா மண்டபக் கிழக்குச் சுவர்.

**காலம்:** மூன்றாம் இராஜராஜன், யா.30, (கி.பி.1246).

**செய்தி:** வாணகோவரையன் உகளூர்க் கூற்றத்தைச் சேர்ந்த கீரைனூர் (இன்றைய கீரனூர்) என்ற கிராமத்தை இறையிலியாகத் திருமுக்கூடலுடைய நாயனார்க் கோயிலுக்குக் கொடுத்துள்ளமை.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச்சக்கரவத்திகள் ஸ்ரீஇராஜராஜ தேவற்கு யா
2 30 ஆவது வடகரை கரிகால கன்ன வள நாட்டு வன்
3 னாட்டுப் பேரவூருடைய னாயநார் திருமுக்கூடலுடைய னா
4 யநார்க்கு துலா நாயற்று பூர்வ பக்ஷத்து நாயற்றுக் கி
5 ழமையும் ஸப்தமியும் பெற்ற மூலத்து நாள் செம்பை இ
6 ராரா தேவனான வாணகோவரையநேன் உகளூ
7 கூற்றத்துக் கீரைநூர் தேவதான இறைஇலியாகக்
8 கீழ் வாரக் காசுட்பட ஸர்வ்வ சிற்றாயங்களும் மிழந்து இன்னாய
9 நாற்குச் சந்திராதித்தவரையுஞ் செல்லக் கடவதாக உதக
10 ம் பண்ணிக் கீரைநூர் நான்கெல்லையுமுட்பட ஊரடங்கலு
11 ம் தேவதான இறை இலியாகக் குடுத்தோம் உ பேரவூரிலும்
12 இன்னாயநாற்கு முன்பிலாண்டுகள் தேவதானங்களூ இறை இலியா
13 வருகிறபடியே நன்செய் புன்செய் உட்பட நிலங்களும் கீழ்
14 வாரக் காசுட்பட்ட ஸர்வ சிற்றாயங்களும் இழந்து நாம் இ
15 ந்த உள்ளூற் தேவதானங்களும் இறைஇலியாகக் குடுத்தோ
16 ம் இப்படி இத்தேவதானங்கள் கல்வெட்டிக் குடுத்தே
17 ன் செம்பை இரார தேவநான வாணகோவரைய வே
18 நன் உ ஸிவமஸ்து இது பன்மா ஹேஸ்வர ரக்ஷை உ ஸிவமஸ்து

**26:3**

**இடம் :** மேலது.

**காலம்:** மூன்றாம் இராஜராஜன், யா.30, (கி.பி.1246).

**செய்தி:** போசளர் தளபதி மகாப்பிரதானி இரதீப பதுமாத்தி அக்கன் கீரைனூரை இறையிலியாக மேற்படி கோயிலுக்கு வழங்கியுள்ளான். இக்கல்வெட்டிலிருந்து வாணர்குல சிற்றரசரும் போசளரும் இணைந்து இப்பகுதியை மூன்றாம் இராஜராஜ சோழன் காலத்தில் ஆட்சி செய்துள்ளனர் என அறியமுடிகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்திகள் ஸ்ரீஇராச
2 ராச தேவற்கு யாண்டு 30 தாவது கரிகாலகன்ன
3 வளநாட்டு வன்னாட்டுப் பேரவூருடையார் திரு முக்கூ
4 டலுடைய நாயநாற்க்கு துலா நாயற்று அபர பக்ஷத்
5 துத் திங்கள் கிழமையும் பஞ்சமியும் பெற்ற மிருக சீரி
6 ஷத்து நாள் ஸ்வஸ்திஸ்ரீ மநு மஹாப்ரதாநி இரதீப பது
7 மாத்தி அக்கநேன் உகளூர் கூற்றத்துக் கீரைநூர் இன்னாய
8 னாற்க்குத் தேவதாந இறையிலியாகக் கீழ் வாரக் காசுள்பட்ட
9 ஸர்வ்வ சிற்றாயங்களும் இழந்து உதகம் பண்ணிக் குடுத்தோ
10 ம் இந்தக் கீரைநூர் தேவதாந இறைஇலியாக ஊரடங்கலும் விட்ட
11 படிக்குத் திருமுக்கூடலுடைய நாயனார் தேவாலயத்தே சந்திராதித்த
12 வரையும் செல்லக் கடவதாக கல்வெட்டிக் குடுத்தேன் (இரதீப பது
13 மாத்தி அக்க) நேன் இந்தத் தேவதாநத்துக்கு யாதாமொருவர் அகிதம் நினை
14 த்தாருண்டாகில் இராசத் துரோகி நாட்டுத் துரோகி சிவத்துரோகிகளு
15 மாய்த் தன்னுடைய தாய்க்கு தாநே அகமுடையாநுமாய்க் கெங்கை
16 கரையில்க் கோடிகுரால்பசுவைக் கொன்றான் பாவமுங் கெ
17 ாண்டு இருபதெட்டுக் கோடி னரகத்திலே சந்திராதித்தருள்ளவரை
18 யும் புழுவாய் செனித்து ஆதியோரமென்கிற னரகத்திலே கீட்பட்ட
19 ான் உ பண்டே அறஞ் செய்தான் செய்தான் அறங்காத்தான் பாத திற
20 ம்பாமல்ச் சென்நி மேல் வைத்து உ ஸிவமஸ்து உ இது பன்மாஹேஸ்வர ரக்ஷை

***26:4***

***இடம் :*** *மகா மண்டபக் கிழக்கு, வடக்குச் சுவர் குமுதப் படை.*

***காலம்:*** *மூன்றாம் இராஜராஜன், யா.36, (கி.பி.1252).*

***செய்தி:*** *பேரவூர் ஊரவர் கோயிலுக்கு அமுது படைக்கவும் ஒரு நொந்தா விளக்கு ஏற்றவும் இறையிலியாக நிலம் கொடுக்கப்பட்டது. அதேபோல அரசன் தென்னவராயர், வங்காரமுத்தரையரின் மகன் கொல்லத்தரையர் ஆகிய இருவரும் சேர்ந்து நான்கு நந்தா விளக்குகள் எரிக்க இறையிலியாக நிலம் வழங்கினர். அந் நிலங்களை இக்கோயில் முப்பதுவட்டத்துக் காணி உடைய சிவப் பிராமணர்கள் பெற்றுக்கொண்டு விளக்கு எரிக்கவும் நாள்தோறும் திருவமுது படைக்கவும் ஒப்புக்கொண்டமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ பேரவூருடையார் திருமுக்கூடலுடைய நாயநார் கோ
2 யில் முப்பது வட்டங்காணி உடைய சிவப்பிராமணர் முன்னாளி
3 ல் பேரவூரவர் பக்கல் கொண்ட உபயம் இன் னாயனாற்கு அமுதுபடிக்கு நெல்லுக் குறு

4 ணியும் திரிநுந்தா விளக்கு ஒன்றும் அரசன் தென்னவராயரும் வங்கார முத்த
5 ரையர் மகநார் கொல்லத்தரையரும் இன்னாயநார் தேவதான இறைஇலி யி
6 னுக்கு இவர்கள் விட்ட நிலம் உபயமாகக் கொண்டு எரிக்கும் திரிநுந்தா விளக்கு நாலு ஆக விள
7 இராஜராஜ தேவற்கு யாண்டு 36 றாவது வரையும் இந்த ஐஞ்சு திரிநுந்தா விளக்
8 கும் எரித்து நெல்லுக் குறுணிக்கு அரிசி முன்னாழி உரியும் இந்த சிவப்பிராமணர் செ
9 சலுத்திப் போதுகிறபடியைச் சந்திராதித்த வரையும் செல்வதாக மகர நாயற்
10 று பூர்வ பக்ஷத்து தெசமியும் புதன் கிழமையும் பெற்ற புணர் பூசத்து நா
11 ள் கல்வெட்டிவித்தோம் நிலங்கலந்த ஸ்ரீ ருத்ர ஸ்ரீமாஹேஸ்வரரோம் ஸிவமஸ்து//-

***26:5***

***இடம் :*** *மகா மண்டபக் கிழக்குச் சுவர்.*

***காலம்:*** *மூன்றாம் இராஜராஜன், கி.பி.1216-1257.*

***செய்தி:*** *இக்கல்வெட்டு எழுதப்பெற்றுள்ள சுவரில் கல்வெட்டின் கீழ் விநாயகர், முருகன், நடராஜர் ஆகிய சிற்பங்கள் செதுக்கப் பெற்றுள்ளன. அவற்றை அரசன் தென்னவராயன் என்பவருக்கு நன்மை உண்டாகவேண்டும் என்று அற்புதக்கூத்தன் என்பவர் எழுந்தருளிவித்ததாக இக்கல்வெட்டு கூறுகிறது. அத்துடன் இக்கோயில் திருவாசலில் பெரியதேவர் (மூன்றாம் குலோத்துங்கன்) சிற்பமும் எழுந்தருளிவிக்கப்பட்டதாக இக்கல்வெட்டால் அறிய முடிகிறது.*

1 அரசந் தெந்நவராயந்
2 நுக்கு நன்றாக இப்பிள்ளை
3 கள் மூவரையும் எழுந்த
4 ருளிவித்தார் அற்புதக் கூத்
5 தந் பலவிலைக்கறி உ திருவ
6 ாசலில் பெரிய தேவரும்.

***26:6***

***இடம் :*** *மகா மண்டப தென்புறச் சுவர் நுழைவாயில் இடதுபுறம்.*

***காலம்:*** *ஐந்தாம் மாறவர்மன் விக்ரமபாண்டியன், யா.4, (கி.பி.1327).*

***செய்தி:*** *அரசன் பெயரில் இராசாக்கள்நாயன் சந்தி என்னும் கட்டளையை நிறுவி பூஜை நடத்தவும் ஆடி மாதத்தில் இவர் பிறந்த நட்சத்திரமான அத்தத்தில் இராசாக்கள்நாயன் திருநாள் என்னும் திருவிழா*

*நடத்தவும் அன்றைய நாள் இறைவன் தீர்த்தவாரி எழுந்தருளவும் ஆகும் செலவுகளுக்கென கீரனூர் என்ற ஊரை தேவதான இறையிலியாக வழங்கியுள்ளமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ திரிபுவனச் சக்கரவத்தி கோநேரின்மை கொண்டான் விக்ரம பாண்டிய தேவற்கு யாண்டு 4
2 வது வடகரை கரிகால கன்னவளனாட்டு வன்னாட்டுப் பேரவூர் உடையார் திருமுக்கூடலுடையனாயனார் கோயில் தானத்தா
3 ற்கும் வெம்பார் நாட்டு கீழ்கூற்று நாட்டவற்கும் மிதுந நாயற்று பூர்வபக்ஷத்து வியாழக்கிழமையும் பௌர்ண்ணயும் பெற்ற மூ
4 லத்து நாள் உகளூர் கூற்றத்து கீரனூர் யின்னாயனார் கோயில் முன்னாள் கல்வெட்டினபடியே நாமும் தேவதான இறை
5 யிலியாத ஸர்வ்வ சிற்றாயங்களும் யிழந்து தேவதான இறையிலியாக தந்தோம் இப்படிக்கு இவ்வோலை பிடிபாடாக
6 கொண்டு அனுபவித்து திருக்கற்றளியிலே கல்லும் வெட்டிவித்து இவ்வூர் மு
7 தல் கொண்டு இன்னாயனாற்கு பூசையும் திருப்பணியும் நடத்தி இராசாக்க ணாயன் சந்தியும் அமுது செய்தருள ப
8 ண்ணி இராசாக்கள் ணாயன் திருநாளும் ஆடி மாஸத்து நம் ஆட்டை பிறந்த நாள் அத்தத்திலே தீர்த்தம் ப்ரஸாதித்த
9 ருளும்படி எழுந்தருளப் பண்ணுக இப்படிக்கு இவை இரவிகுலமாணிக்க நல்லூர் உடையான் பழந்தீபராயன் எ
10 ழுத்து உ

***26:7***

**இடம் :** மேற்படி ஊரின் வடக்குத் தெருவில் நடப்பட்டுள்ள கல்

**காலம்:** கி.பி.13-14ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** *ஆறகளூர் அருகே உள்ள சிற்றேரி என்ற ஊர் (இன்றைய சித்தேரி) அக்காலத்தில் அகரம் இராசநாராயணச்சதுர்வேதிமங்கலம் என அழைக்கப்பட்டது. அவ்வூரில் இராசநாராயண ஈஸ்வரம், இராசநாராயண விண்ணகர எம்பெருமாள் என்னும் சிவன், விஷ்ணு கோயில்கள் உள்ளன. இக்கோயில்களில் உள்ள கடவுள்களுக்குத் திருவமுது படைக்க, சாத்துப்படி செய்ய, திருப்பணி நடத்த என அனைத்துச் செலவுகளுக்குமாக வெம்பார்நாட்டுக் கீழ்க்கூற்றில் இருக்கும் பேரவூர், களத்தூர் (இன்றைய வி.களத்தூர்) ஆகிய ஊர்கள் இறையிலியாக வழங்கப்பட்டமை.*

1 ஸ்வஸ்திஸ்ரீ திருபுவனச் சக்கரவத்தி கோநேரின்மை கொண்
2 டான் ஆறகளூர் சிற்றேரி அகரம் இராசநாரா
3 யண சதுர்வேதி மங்கலத்து உடையார் இராசநாரா

4 யண ஈஸ்வரம்முடையார் கோயில் தானத்தாற்கு
5 இந்நாயனாற்கு அமுதுபடி சாத்துப்படி உள்ளிட்ட
6 வேண்டுவனதுக்கு வெம்பார் நாட்டு கீழ்கூற்றில் பேரலூரும்
7 களத்தூர் யிந்நான்தெல்லைக்குள்பட்ட
8 நிலங்களும் ந த்தமும் உட்பட மூன்றாவது
9 வரையும் இறையிலியாக நடக்கும்படி
10 தானத்தாற்கு . . .
11 லும் இந்நிலத்தால் வ(ந்த கீழ்வாரக் காசு)
12 உட்பட்ட அனைத்தாயமும்
13 . . . தட்டாரப் பாட்டம் மற்றும் . . .
14 நாலாவது மார்கழி மாதம் முதல் இராச
15 நாராயண விண்ணகர எம்பெருமாளுக்கு திருவ
16 ாராதனத்துக்கும் திருப்பணிக்கும் ஒன்று பாதியால் வந்த
17 முதல் நீக்கி நின்ற ஒன்று பாதியால் வந்த முதல்
18 இராஜநாராயண ஈஸ்வரமுடையார்
19 க்கு சந்திராதித்தவற் செல்ல (இறையிலியாக)
20 தந்தோம்

# 27. வீர ராசேந்திரன் காலக் கல்வெட்டு

*ச. இரவி, கோவை.*

**இடம் :** ஈரோடு மாவட்டம், விஜயமங்கலம் சந்திரபிரபாதீர்த்தங்கரர் கோயில் மகாமண்டபத்தின் வடக்கு வாயிலிலுள்ள நிலைக்காலில் உள்ள கல்வெட்டு.

**காலம்:** கொங்குச் சோழன் வீர ராசேந்திரன் யா.46, சகம் 1179, (கி.பி.1257)

**செய்தி:** குறுப்புநாட்டுப் பகுதியாகிய விஜயமங்கலத்தில் படைத்தலை வேளாளர் கூட்டத்தைச் சேர்ந்த திருவானைக்கா உடையான் சொக்கான் என்பவன் கோயில் நிலைக்காலைச் செய்து கொடுத்தமை.

1 ண்டு நாற் [பத்]
2 தாறாவது [சக]
3 ரை யாண் [டு]
4 ஆயிரத் தெ [த]
5 ாரு னூற் றெ [ழு]
6 பத் தொன் [ப]
7 தில் குறுப் [பு]
8 நாட்டு விஜெ [ச]
9 யன் மங்க [ல]
10 த்து வெள்ள [ா]
11 ளன் படை [த்]
12 தலை களி [ல்]
13 திரு வாணை [க்]
14 கா வுடை ய [ா]
15 ந் சொக்க [நே]
16 ந் திருந்நிலை [க்]
17 கால் செய் [வி]
18 த் தேந்

# 28. கவிநாட்டுக் கண்மாய்க் கல்வெட்டு

மு. ராஜேஷ், தஞ்சாவூர்.

**இடம் :** புதுக்கோட்டை வட்டம், கவிநாட்டுக் கண்மாயின் கிழக்குக் கலிங்கின் சுவரில் சேர்த்துக் கட்டப்பட்டுள்ள துண்டுக்கல்.

**காலம்:** கி.பி. 13ஆம் நூற்றாண்டு

**செய்தி:** பெருநற்கிள்ளிசோழப் பெரும்பள்ளியான அரசகண்டராமப் பெரும்பள்ளி அமைத்தது தொடர்பான செய்தியைக் கூறுகிறது. இது எல்லைக்கல்லாக இருக்கலாம். இப்பள்ளி புதுக்கோட்டை வட்டம், திருக்கோகர்ணத்திற்கு மேற்கே சடையப்பாறை எனும் குன்றின் மீதிருந்த சமணப்பள்ளியைக் குறிக்கும்.[1] அப்பள்ளி கி.பி.1251ஆம் ஆண்டில் ஆட்சிக்கு வந்த சடையவர்மன் சுந்தரபாண்டியன் காலத்தில் அரசகண்டராமப்பெரும்பள்ளி என்று பெயர் மாற்றம் பெற்றிருக்கிறது. அரசகண்டராமன் என்பது இம்மன்னனின் பட்டப்பெயர்களுள் ஒன்றாகும்.[2] கல்வெட்டின் அடிப்பகுதியில் பூர்ணகலசம் மற்றும் இரு விளக்கு உருவங்களும் உள்ளன.

1 கவிநாட்டுப் பெரு நற்கிள்[ளி]
2 சோழப் பெரும்பள்ளியாந
3 அரசகண்ட ராமப்பெரு
4 பள்ளி இத்தன்மம்



1. பு.க.530.
2. க.ஆ. 1940-43, ப.247.

# 29. ஒழுகமங்கலம் கல்வெட்டுகள்

*சி. லெட்சுமணன், சிங்கம்புணரி.*
*கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.*

**29:1**

**இடம் :** சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், ஒழுகமங்கலம் ஈசுவரன் கோவில் கருவறை வடபுறத்து வெளிச்சுவரிலுள்ளது.

**காலம்:** கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** தெந்நவன் மங்கலத்து சோழ நாராயண மங்கலாதராய உத்தமவாசக தட்டானுக்கு ஒழுமங்கலத்து வயலில் குளப்பட்டியாக ஊரார் நிலம் விட்டதைத் தெரிவிக்கிறது.

1 . குலைசேகர தேவற்கு யாண்டு 13
2 ஆவது எதிர் 14வது ஒழுமங்
3 கலத்து குளத்து சிறுமடையில்
4 வயக்கலும் தெக்கில் தடி இரண்
5 டும் குழி ஆறும் தெ. நெவன் மங்கலத்தான் . .
6 . . னு சோழ நாராயண மங்கலாதராய . .
7 அவை உத்தம வாசக தட்டானுக்கு நா
8 ங்களிவனுக்கு ம . கதடி லும்
9 குளபட்டியாக . . . வும் அந்த
10 ராயம் . . டித்து குளத்து
11 . . ல்ல . . வும் இப்படிக்கு . மத
12 . . . ங்கு . . டுத்தோம் ஊரா
13 ய் இயி . . ரோம் . உத்தம வாசக
14 தட்டா . . புர . வால்வதந்த
15 . . கட . . . வும் இப்படி சமதிது . . .
16 . . வெட்டி குடுத்தோம் ஊரா சைந்த ஊரோம் உதம்ம வாசக தட்டா
17 னுக்கு இவத . . . சொ . னுக்கு சோலை . . .

**29:2**

**இடம் :** மேலது, கோயிலின் அர்த்தமண்டபத்தின் தெற்கு வெளிப்புறச்சுவர்.

**காலம்:** கி.பி. 13ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** கேரளசிங்க வளநாட்டு மட்டியூர் சோழமூவேந்தவேளார் கோவில் அமுதுபடிக்கு ஆடுவிட்டமை. கல்வெட்டு சிதைந்துள்ளது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திருபுவன சக்கர வத்திக . . .
2 . . . [குலோத்து]ங்க சோழ தேவற்கு யாண் . . . த
3 [கேரளசிங்]கவளநாட்டு மட்டியூர் . .
4 . . . வாடுவிட்ட சோழ மூவேந்தவேளார்
5 . . .ா புரவரி ஈஸ்வர முடையார் கோயிலில் . . . வ . . .
6 . [நி]மந்தம் அமுதுபடிக்கு வபவந்ம' . . . ாசனும்
7 மங்கலாய ராயன் பக்கலும் ணாயன் ம . . .
8 மங்கலாயராயன் பக்கலும் . . .
9 . . . க்காண நாழி மூன்று மா முக்காணியு . . .
10 . . . ழமு[வே]ந்த வேளானேன்

*29:3*

*இடம் : மேலது, கோயிலின் அர்த்த மண்டபத்து தெற்கு வெளிப்புறச் சுவரில் சோபான மண்டபத்திற்கு மேற்கு.*

*காலம்: கி.பி. 13ஆம் நூற்றாண்டு.*

*செய்தி: கேரளசிங்க வளநாட்டைச் சேர்ந்த பாலையூருடையான் கோயிலுக்கு ஆடு, நிலம் விட்டமை.*

1 ஸ்வஸ்தி ஸ்ரீ திரிபுவநச் சக்கரவத்திகள் ஸ்ரீ விக்கிரம பாண்டிய தேவ . .
2 யாண்டு 1 ஆவதிந் எதிராமாண்டு கேரளசிங்க வ . . .
3 . . பெரி . . பாலைவூருடையாந் தேவந் ம . . .
4 . . . டைய நாயனார் கோயிலிலே
5 அம்பலக்கூத்தற்கு[ம்] நாச்சியாருக்குந் திருவமுதுபடிக்கு ஒழு[க]மங்கலத்து பிரகு . . .
6 முத . . தேவகந்மிகளு[ம்] ஸிமாஹேச்வரமிந்த நாயநா
7 ர்குந் திருப்படி மாற்றுக்கு [விட்ட] நிலமாவது இவ்வூர்க் குடிக்காடு அரசிராம நில . செம்பா
8 தியு மிச்செம்பாதியால் வந்தழைங்கள் வாய்த்தலையும் புஞ்சையும் மெந்செயு நாயநாற்கு .
9 நாச்சியாற்குந் திருவமுபடிக்கு அரசி யறுநாழியுந் நெ[ய்யமு]துங் கறியமுது மிச்செய் . . .
10 . . . ஸ்த்திலே செலுத்துவோம் நோம் [ஊராயி] சைந்த வூ ரோமு . . .
11 . . ங்கள் ஸ்ரீமாஹேச்வரந் ெரா . . . மாத . . . க்கு ஸ்ரீ மாஹேச்வர எ . . .

*29:4*

*இடம் : மேலது கோயிலின் முன் மண்டபத் தூண்கள்.*

*காலம்: கி.பி. 13ஆம் நூற்றாண்டு.*

*செய்தி:* *கோயில் மண்டபத்திலுள்ள தூண்களை செய்வித்தவர்களின் பெயர்கள்*

***4.1***

1 ஸ்வஸ்திஸ்ரீ இக்கா[ல்]
2 நாட்டிநன் கத்தன்
3 ன ணுக்கான்

***4.2***

1 ஸ்வஸ்தி ஸ்ரீ இ
2 க்கால் நாட்டிந
3 . . . டறவந் உமை
4 யாண்டி

***4.3***

1 இ
2 கால் நாட்
3 டி நான் சே
4 ட்டன்
5 சோலை

***4.4***

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 இக்கால் நா
3 ட்டிநான்
4 பூபன் பெ
5 ரியாநான
6 [திரு]

# 30. பாண்டிநாட்டு மடைக் கல்வெட்டுகள்

பொ. இராசேந்திரன், மதுரை.
வெ. வேதாசலம், மதுரை.
சொ. சாந்தலிங்கம், மதுரை.

*30:1*

**இடம் :** மதுரை மாவட்டம், மேலூர் வட்டம், திருவாதவூர் கண்மாயிலுள்ள மடைக் கல்.

**காலம்:** மூன்றாம் குலோத்துங்கன், யா.17, (கி.பி.13 ஆம் நூற்றாண்டு).

**செய்தி:** மடை செய்வித்தமை பற்றியது. கல்வெட்டு பாடல் வடிவில் உள்ளது.

1 சிரி கொலொ
2 த்துங்க சோழதே
3 வர்க்கு யாண்டு 17
4 ஸ்வஸ்திஸ்ரீ மங்க
5 லக் கோன் பாஞ்
6 சாலன் மாவேறிவ
7 ண்டலர்த் தொ
8 ங்கல் வழுதி தா
9 மெறித்துக் கொங்க
10 லர் தென் கூடல்
11 பாணராதி போர் தெந்
12 மன்னவரை வென்று
13 பாட்டுண்டான் சா
14 லப்பகோன்
15 இம்மடை பாஞ்
16 சால ராஜந்
17 இதுக்குப்ப
18 ணி செய்தார் கு
19 ச்சி கொண்ட
20 இளங்கிடா சே
21 னைகளம்.

*30:2*

**இடம் :** மேலது.

**காலம்:** முதலாம் மாறவர்ம ன் சுந்தரபாண்டியன், யா.9, (கி.பி.1225).

***செய்தி:*** *மடையின் பெயரும் மடையை எடுத்தவர் பெயரும் குறிப்பிடப் படுகிறது.*

1 ஸ்வஸ்திசிரி கோ
2 மாற பன்மரா
3 ன திரிபுவனச் ச
4 க்கரவத்திகள் சிரி
5 சோணாடு வழ
6 ங்கி யருளிய சிரி
7 சுந்தர பாண்
8 டிய தேவர்க்கு யாண்
9 டு ஒன்பதாவது
10 மாடக்குளக் கீழ் ம
11 துரையில் திருவி
12 ந்திக் காப்பு வேளா
13 ளர் கைக்கோளரில்
14 செயமுடையான் வி
15 ரதமுடிச்சானான பர
16 ாக்கிரம சிங்க தேவ
17 ன் படுத்த மடை
18 இம்மடையின் ே
19 பர் விக்கிரம சிங்
20 க தேவன்

## *30:3*

***இடம் :*** *சிவகங்கை மாவட்டம், திருப்புவனம் வட்டம், கழுவன்குளம் கிராமம் கண்மாய்க்கு உட்புறமுள்ள மடை நிலைக் கல்.*

***காலம்:*** *கி.பி.1801.*

***செய்தி:*** *மடை கட்டியமை*

1 உ சாலி வாகன
2 சகாற்த்தம்
3 1713 இன் மேல்
4 ச் செல்லா நின்ற
5 விரோதிகிறுது வருசம்
6 ஆனி மாதம் களுவங்
7 குளத்து நாட்டாண்மை
8 இருளக் கோ
9 ன் புத்திறன்
10 முத்துக்கறுப்ப

11 ன் சேருவை
12 காறன் கட்டி
13 வித்த மடை

### 30:4

***இடம் :*** *மேற்படி மாவட்டம், முத்துப்பட்டிக் கண்மாய் மடை.*

***காலம்:*** *சிவகங்கை அரசர், (கி.பி.1805).*

***செய்தி:*** *மடை தர்மம்.*

1 உ கலியஸ்த்தம் 4906 சாலிவாகன சகாப்தம் 1727
2 யிதின் மேல் செல்லாநின்ற குரோதன வருசம் அய்ப்பசி மாசம் 12 தேதி
3 சிவகங்கை சீமை மேல் பாரிசத்தில் உபைய மாற்க பாதையில் ஸ்ரீமது
4 அரசு நிலையிட்ட முத்துவிசயரெகுநாத கெவுரி வல்லபப் பெரிய
5 உடையாத் தேவரவர்கள் தற்மம்

### 30:5

***இடம் :*** *புதுக்கோட்டை மாவட்டம், இலுப்பூர் வட்டம், ஆலத்தூர் கண்மாய்.*

***காலம்:*** *கி.பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *ஆசிரியம் பற்றியது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 திரு ஞான சம்பந்த
3 அகமுடி கு
4 டுத்தார் ஆசி
5 ரியம் உ

### 30:6

***இடம் :*** *திண்டுக்கல் மாவட்டம், ஆத்தூரில் மையப்பகுதியில் நடப்பட்ட தனிக்கல்.*

***காலம்:*** *கி.பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *ஏரியின் பெயர் குறிப்பிடப்பட்டுள்ளது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ
2 இவ்வேரி ரா
3 ஜ ராஜன் அழ
4 கம் பெருமாள்
5 திருநாமம்

# 31. செங்கமங்கலம் குமிழிக் கல்வெட்டு

அ. சந்திரபோஸ், செங்கல்பட்டு.

**இடம் :** தஞ்சாவூர் மாவட்டம், பேராவூரணிக்கு அருகில் செங்கமங்கலம் கிராமம் கண்டிக்குளத்திலுள்ள பழைய குமிழி.

**காலம்:** கி.பி. 14ஆம் நூற்றாண்டு

**செய்தி:** கண்டியூர் குளத்தில் மடை எடுப்பித்தது.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 தும்மதி வருசம்
3 சித்திரை மாதம்
4 கண்டியூர் கு [ள]
5 த்தில் பெரிய மடை
6 இந்த . . . தெ
7 யில் . . .
8 . . .
9 . . வல . . தா[லஞ்]
10 [ச]ராயர் பண்ணு
11 வித்த மடை
12 இம்மதகு
13 இராசராசத
14 . . .

# 32. கொல்லங்கொண்டான் கண்மாய் மடைக்கல்வெட்டு

எம். வெங்கடேசன், இராசபாளையம்.

*இடம் :* *விருதுநகர் மாவட்டம், ஸ்ரீவில்லிப்புத்தூர் வட்டம், கொல்லங்கொண்டான் பெரியகண்மாய் மடைத்தூணில் உள்ள கல்வெட்டு.*

*காலம்:* *தென்காசிப் பாண்டியர், வென்று மாலையிட்ட பெருமாள் வீரபாண்டிய தேவர், யா.36, சகம் 1375, (கி.பி.1453).*

*செய்தி:* *மிழலைக்கூற்றத்து கருவூரிலிருந்த பொன்பற்றி உடையான் என்பவர் கொல்லங்கொண்டான் பெரியகுளம் பருமரக்காடாக இருந்ததை வயக்கி மடை அமைத்ததைத் தெரிவிக்கிறது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ ஜயமட
2 ந் தை யும் திருமட
3 ந்தையும் தி
4 ருப்புயங்களி
5 ல் இனிதிருப்ப
6 மாக்க [ ை]ல மடந்
7 தை வாக்கினி
8 ல் விளங்க ஸ்ரீ ே
9 காமாற வம்மறாந
10 திருபுவன சக்கரவத்திகள்
11 ஸ்ரீ வென்று மாலைஇட்ட
12 பெருமாள் வீரபாண்டிய
13 தேவற்கு யாண்டு
14 23 ன் எதிர் 13 க்கு
15 சகாத்தம் 1375
16 மேல் செல்லா நின்ற
17 சிம்ஹ நாயற்று அபர
18 பக்ஷத்து திரயோதசி
19 யும் பிரகஸ்பதி வாரமும்
20 பெற்ற புணர்பூசத்து நாள்
21 ஆண்மர் நாட்டுக் கொல்
22 லங் கொண்டான் பெரிய
23 குளத்தின் கீழே அத்துணை
24 யும் பருமரக்காடு வ[ா]ய்க்கிட
25 க்கைஇலே இப்பற்றுக்கு
26 வீரபாண்டியன் மடை
27 யும் வைத்து இம்மடை
28 போக்கில் 93 கலம் நெல் முதலுக்கு
29 காடும் வெட்டிப் ப
30 யிர் செய்யும் நிலத்துக்
31 குப் பயிர் செய்யும் ஆண்
32 டைக்கு நெல் கலம் 93 ஆகவு
33 ம் இதன் அடுத்த ஆண்
34 டு நெல்கலம் 95 ஆகவும்
35 இதன் அடுத்த ஆண்டு
36 நிலை அடை மரக்கால் 98
37 ஆகவும் கொள்ளும்படி
38 கற்பித்து கல்வெட்டி
39 க் குடுத்த அளவுக்கு இ
40 ம் மரியாதியிலே ஸந்த
41 திர பிரவேஸ்வர் மேல் செல்
42 லக் கல்வெட்டு பிற
43 மாணமே பயிற் செய்
44 து போதவும் பார்த்
45 து போதவும்
46 இவை கருவூர்ப் பொ
47 ன் பற்றி உடையான்
48 எழுத்து.

# 33. செஞ்சி வட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்

பெ. இலெனின், பாண்டிச்சேரி.

### 33:1

*இடம் :* விழுப்புரம் மாவட்டம், செஞ்சி வட்டம், மேலைச்சேரி மதளீஸ்வரர் கோயில் வடமேற்கே உள்ள பாறை.

*காலம்:* செவ்வப்ப நாயக்கர், சகம் 1507, (கி.பி.1585).

*செய்தி:* கல்வெட்டு முற்றிலும் சிதைந்துள்ளது. மேலைச்சேரி பெயர் காணப்படுகிறது.

1 ஸ்வஸ்திஸ்ரீ ஸ்திரீமந் மஹாமண்டலேசுவரந் . . . மாதிவ . . .ணியருளான . . . சகாத்தம் 1507 மேல் செல்லா நின்ற
2 விக்கிறம வருஷத்து மே நாயற் . . . மியும் . . . ஸ்ரீசோம வாரத்துனாள் மேலைச் செரி மத்தளி யாண்டாருக்கு
3 செவ்வப்ப நாயக்கர் அவர்களுக்கு . . . யமநா . . . ணம்மனாயக்கர் அவர்களுக்கு புண்ணியமாகத் தளியாண் . . .
4 க் குடு . .

### 33:2

*இடம் :* விழுப்புரம் வட்டம், செஞ்சி வட்டம், வேலாங்குளம் நாலுகால் மண்டபம் அருகில் உள்ள பாறை.

*காலம்:* சுமார் 15ஆம் நூற்றாண்டு.

*செய்தி:* ஸ்ரீ விருப்பராயன் சமுத்திரம் எனக் குறிக்கப்படுகிறது. கல்வெட்டின் முடிவில் இரு பாதகுறடுகளும் ஒரு குடையும் கோலும் கோட்டோவியமாக வரையப்பட்டுள்ளன.

1 ஸ்ரீ விருப்பரா
2 யன் சமுத்திரம்
3 எல்லை . . . ன
4 தெற்கு

### 33:3

*இடம் :* மேற்படி வட்டம், செஞ்சி அனந்தபுரம் சாலையில் அத்தியூரிலிருந்து 2 கிமீ மேற்கே உள்ள தச்சம்பட்டு சுப்பராயன், வீராசாமி, முத்துகிருஷ்ணன் நிலத்திலுள்ள பாறை.

*காலம்:* முத்துகிருஷ்ணப்ப நாயக்கர்

*செய்தி:* குடை மானியம் என வருவதால் இது வீரசைவ மடத்திற்கு அளிக்கப்பட்ட நிலக்கொடை எனலாம். இப்பாறை அருகில் உள்ள சிறு பாறையிலும் பாதக் குறடுகளும், குடையும் கோட்டோவியமாக வரையப்பட்டுள்ளன.

1 [துந்] துமி வருடம் ஆடி மாதம் 3 தேதி ஸ்ரீமது
2 முத்து கிஷ்ணப்ப நாயக்கர் அய்யன் [கா]
3 ரியத்துக்கு கற்தரான ராத தேவராய பந்திர
4 பம் படை யாண்டவர் செய நல்லூர் வன்னிய
5 ராண்ட முதலியாற்கு தச்சன்பட்டு ஏரி செ . . .
6 வாய் மறவடையம் நிலமும் கிணறு
7 ம் . . .ற்றைநாள் குடை மானியம் மாக
8 கட்டளை இட்ட குழி 250 இந்த
9 குழி இருநூற்று அன்பதும் சூ[ர்]ய சந்தி
10 ராதிவகள் வரைக்கும் அனுபோகத் . . .
11 கடைவராகவும் யிந்த மானியத்துக்கு
12 யாதாமொருவர் தடைமிடை பேசினால்
13 கங்கைக் கரையிலே காராம் பசுவை [கொ]
14 காண்ண பாவத்திலே போககடவராகவு[ம்]
15 தடை பணின பெண்டிரை . . .
16 . . . ப்பான்

# 34. வானூர் வட்டத்தில் சில புதிய கல்வெட்டுகள்

*கோ. விசய வேணுகோபால், பாண்டிச்சேரி*
*ஆ. துரைரங்கம், பாண்டிச்சேரி.*

***34:1***

***இடம் :*** விழுப்புரம் மாவட்டம், வானூர் வரதராசப் பெருமாள் கோயிலில் நடப்பட்டுள்ள கல்வெட்டுத்தூண்.

***காலம்:*** 3.8.1533.

***செய்தி:*** திருப்பதி திவந்தரத்தில் அச்சுதராய மஹாராயற்கு தர்மமாகக் கட்டுவித்த அச்சுதராய ஸமுத்ரம் என்னும் ஊரில் உள்ள அச்சுத பெருமாள் கோயிலின் பூசை காரியங்களுக்கு வானவநல்லூர், ஒட்டை, பிளிச்சப்பள்ளம், நென்மலி மற்றும் இராவுத்தன் குப்பம் ஆகிய ஐந்து ஊர்களின் நிலவருமானத்தை திருவேங்கடமுடையான் கோயில் ஸ்ரீ பண்டாரத்தார் மேற்பார்வையில் திருவாராதனம் நடத்த அச்சுததேவ மஹாராயர் கட்டளையிட்டமையைத் தெரிவிக்கிறது.

1 சுபமஸ்து ஸ்வஸ்தி ஸ்ரீமந் மஹா ராஜா
2 திராஜ பரமஸ்வர ஸ்ரீ வீர ப்ரதாப ஸ்ரீ
3 வீர அச்சுதராய மஹாராயர் பிறிதிவிராஜ்ய
4 ம் பண்ணியருளா நின்ற ஸகாப்தம் 14
5 55 க்கு மேற்செல்லா நின்ற விஜய ஸம்வட்ச
6 ரத்து ஸிம்ஹநாயற்று பூர்வபட்சத்து பவுற்னமை
7 யும் ஆதித்த வாரமும் பெற்ற அவட்டத்துனாள் திருவேங்கடமுடையான்
8 திருப்பதி தல வந்தரத்தில் அச்சுதராய மஹாராயற்கு தற்மமாகக் கட்டு
9 வித்த அச்சுதராய ஸமுத்ரத்தில் அச்சுத பெருமாளுக்கு னாள் வழி அ
10 முது செய்தருளும் திருபோநகம் 12 தெத்தியோதனம் 1 தி
11 ருவத்திசாமம் 1 திருக்கனாமண்டை 1 அப்பபடி 1 சந்தனம்
12 அடைக்காயி அமுது 50 இலை அமுது நூறு திருவிளக்கு எ
13 ண்ணை . . . திருனாள் திங்கள் திவசம் விசேஷதிவசம் னை
14 யி வேத்தியக் கட்டளைக்கும் திருவீதி எழுந்திருளுங்க
15 ட்டளைக்கும் அங்கரங்க வையிபோகத்துக்கும்
16 அச்சுதராய மஹாராயர் திருவேங்கடமுடையான் ஸ
17 ன்னதியில் பூற்வம்பண்ணி திருவேங்கடமுடைய
18 ான் திருக்கோயிலிலும் அச்சுத பெருமா
19 ள் திருக்கோயிலிலும் சிலாஸாஸநம் பண்
20 ணி திருவிளையாட்டமாக விட்ட ஒழுகறைப்பற்றில்
21 பிளிச்சைப்பள்ளம் கிராம 1 இதில் குப்பமான நென்மலி

21 கிராமம் 1 இராவுத்தங்குப்பம் கிராம 1 நகரைக்காட்டுப்பற்றில் ஒட்
22 டை கிராமம் ஒன்று வானவநல்லூர் கிராம ஒன்று ஆக கிராம
23 ம் அஞ்சு கிராமத்திலும் உண்டாந முத
24 ல் கொண்டு திருவேங்கடமுடையாந் திருக்கோயி
25 ல் ஸ்ரீ பண்டாரத்தார்கள் கண்டு கொண்டு அவர்களே
26 அச்சுதப் பெருமாள் திருவாராதனம் நடத்தக் கடவார்களாக
27 வும் இப்படிக்கு ஸந்தாந பரம்பரை சந்திறாதித்தவ
28 ரை நடத்த கடவராகவும் இதுக்கு யாதொருவன் அ
29 குதம் நினைத்தால் கங்கைக் கரையிலே
30 கோவைக் கொண்ண பாவத்தி
31 லே போகக் கடவராகவும்

### *34:2*

***இடம் :*** *வானூருக்குக் கிழக்கே ஐந்து கி.மீ. தொலைவில் உள்ள கடகம்பட்டு ஐயனார் கோயிலின் வடமேற்கில் உள்ள கல்வெட்டுத்தூண்.*

***காலம்:*** *கி.பி. 16ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *கடகம்பட்டு நிலவருமானத்தை திருவக்கரை மடத்திற்கு அளித்தமை.*

1 திருவ(க்)கரை மெ
2 ஞ்ஞான மாமுனியின்
3 பண்டாரத்தின் கில ம
4 டத்துக்கு எறம இரெட்டியா
5 ர் குமாரர் மும்மடி இரட்டி
6 யாரும் கடம்பிருண்
7 டயாரும் வானாதி இரா
8 யருள் ரெட்டியாரும் கடம்பபட்டு மடப்பி
9 றமா விட்டோமிது
10 சந்திராதிதவரை
11 யும் நடத்திக் குடு
12 க்க கடவோமாக
13 வும் இதுக்கு அகுத
14 ம் பண்ணினவர்க
15 ள் கெங்கைக் க
16 ரையில் காராம்
17 பசுவைக் கொ
18 ன்ற தோஷத்
19 தை யடை
20 க் கடவார்கள
21 ாகவும்

### 34:3

**இடம் :** வானூர் வட்டம், புதுப்பாக்கம் அருள்மிகு சந்திரசேகர சுவாமிகள் திருக்கோயில் மதிட்சுவர் அருகில் உள்ள கல்வெட்டுத்தூண்.

**காலம்:** சுமார் 17ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** புதுப்பாக்கமான துணையிருந்த நல்லூரை திருவக்கரை ஆளுடைய நாயனார் கோயிலுக்குத் தேவதானமாக விட்டமை.

1 உடையார் திருவக்
2 ரை ஆளுடைய நாய
3 னார் தேவதாநம் புது
4 ப்பாக்கமாந துணை
5 இருந்த நல்லூர்

### 34:4

**இடம் :** வானூருக்கு கிழக்கே உள்ள ஒட்டைத் தொடக்கப்பள்ளிக்குப் பின் உள்ள கல்வெட்டுத்தூண்.

**காலம்:** சுமார் 17ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** திருவக்கரைச் சின்னச்சிதம்பர மழவராயர் சிவஞானதேசிகர் மடத்துக்கு நிலம் விட்டமை.

1 விக்ரம வருடம் ஆடிமாதம் 2 ம் தேதி சிவ
2 ஞான தேசிகர் மடத்துக்கு திரு
3 வக்கரை சிதம்பர மழவராயர் க
4 ட்டளையிட்டது ஒட்டை நஞ்சை
5 ச குழி 80 புஞ்சை குழி . . 10
6 கட்டளையிட்
7 டோம் யிந்த தற்மத்துக்கு யாது
8 மொருவர் தடை பண்ணினா
9 ல் கெங்கைக் கரையிலே கார
10 ம் பசுவைக் கொண்ண தோ
11 ஷத்திலே போவார்கள் தாயத்
12 தகப்பனை கொன்ற தோஷத்திலே போவார்கள்

### 34:5

**இடம் :** வானூருக்குக் கிழக்கே 10 கி.மீ தொலைவில் உள்ள கொடுக்கூர் பெருமாள் கோயிலின் எதிரில் உள்ள கல்வெட்டுத்தூண்.

**காலம்:** 17ஆம் நூற்றாண்டு.

***செய்தி:*** *திருவக்கரைச் சந்திரசேகர சுவாமித் திருக்கோயில் தேனம்மைத் தாயாருக்கு கொடுக்கூர் நிலவருமானத்தை கொடையாக கிஷ்ணப்ப மழுவராயர் அளித்தமை.*

1 சுபானு வருஷம் ஆடி மாச
2 ம் ஸ்ரீமது துபா
3 குல கிருஷ்ணப்ப
4 னாயக்கர் அயிந்
5 சின்ன சிதம்பர
6 மழவராயர் குமார
7 ர் கிஷ்ணப்ப ம
8 ழவராயர் நயினா
9 ர் கட்டளை திருவக்
10 கரை சந்திர சேகர
11 சுவாமி தேனம்மை
12 ம தாயார்க்கு கொடு
13 கூர் கிராம சறுவ
14 உம்பிளிக்கை
15 யாக கட்டளை
16 யிட்டோம் யிந்
17 தற்மத்துக்கு ய
18 ாதம் ஒருவர் அ
19 குதம் பண்ணினா
20 ல் கெங்கைக் கு-
21 ரயிலே காராம் ப
22 சுவை கொன்ன
23 தோஷத்திலே போ
24 வார்கள்

# 35. பாண்டி நாட்டுப் புதிய கல்வெட்டுகள்

பொ. இராசேந்திரன், மதுரை.
வெ. வேதாசலம், மதுரை.
சொ. சாந்தலிங்கம், மதுரை.

**35:1**

**இடம்:** திண்டுக்கல் மாவட்டம், ஆத்தூர், காசிவிசுவநாதர் கோயில் பின்புறம் உள்ள தனிக்கல்.

**காலம்:** கி.பி.16 ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** பிராமணர் உணவுக்குச் சத்திரத்துக்கு நிலக்கொடை பற்றியது.

1 விளம்பி வருசம்
2 வைய்காசி மாதம்
3 ஸ்ரீ மது . . .
4 கிட்டிணப்ப
5 நாயக்கர் அய்யன்
6 புண்ணியமா
7 க நயினா தனாத
8 முதலியார் கட்டளை
9 யிட்டது சீவலச் சிற
10 கு சென்ன ராச
11 ப் பெருமாள் கோ
12 யிலிலே நெய் வே
13 வத்தியம் பண்
14 ணி பிராமணற்கு
15 சத்திரமியிட சொ
16 ல்லி கட்டளையிட்ட
17 து சித்தையன்
18 கோட்டையிலே
19 அழகர் திருவிளை
20 யாட்டத்துக்கு வட
21 க்கு ஆற்றூர் வாய்
22 க்காலுக்கு தெற்குபி
23 லாற்றுக்கு கிழக்கும் ஆ
24 ற்றூர் எல்லைக்கு மேற்கு
25 கட்டளையிட்ட நிலம் ஏழுமா
26 யிந்தப்படிக்கு பெருமா
27 ளுக்கு பூசை பண்ணி ச
28 த்திரம் நடத்திவர கட்ட
29 ளையிட்ட படியினாலே
30 சந்திராதித்தவ
31 ரையும் நடத்த
32 க்கடவதாகவும்.

**மறுபக்கம்**

33 இத்த
34 ன்மத்து
35 க்கு யாத
36 ா மொரு
37 வர் அகு
38 தம் பண்
39 ணினால்
40 கெங்கை
41 க் கரை
42 யிலே
43 மாதா பிதா
44 வையும் பிர
45 ாமணரை
46 யும் கொன்
47 ன தோ
48 ஷத்திலே
49 போவா
50 னாகவும்

***35:2***

***இடம் :*** *தூத்துக்குடி மாவட்டம், வானரமுட்டி, இராமலிங்க சுவாமி திருக்கோயில், கோமுகம்.*

***காலம்:*** *கி,பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *கோமுகை செய்வித்தமை.*

1 ஸ்ரீ குலசேகர தேவர்க்கு யாண்
2 டு 13 வது நெற்சுர நாட்டு
3 ஊற்றத்தூர் சொக்கன் புரு
4 ஷோத்தமனான தேசியர் சி
5 ரியத் தட்டான் செய்வித்
6 த கோமுகை

***35:3***

***இடம் :*** *மேற்படி கோயிலின் கருவறை அந்தராளம், வடக்குச் சுவர்.*

***காலம்:*** *கி.பி.1232.*

***செய்தி:*** *சென்மக்காணியும் குளமும் கோயிலுக்கு விற்கப்பட்டமை.*

1 திருவாக்கேள்விக்கு மேல் கோமாறபன்மரான திரிபுவன சக்கரவர்த்திகள் சிரி சோணாடு வழங்கியருளிய சுந்தர பாண்டிய தேவர்க்கு யாண்டு பதினைந்தாவதின் எதிராமாண்டு பாண்டி மண்டலத்து நெச்சுர நாட்டு ஊற்றத்தூரான சுந்தரபாண்டிய நல்லூர் ஊரோம் இவ்வூர் நாயனார் திருவிராமேச்சுர முடைய
2 நாயனாற்கு ஆதிசண்டேசுவர விலையாக விற்றுக் கொடுத்த எங்கள் சென்மம் இவ்வூர் மேல்பால் செங்குளத்துக்கு எல்லையாவது கீழெல்லை இன்னாயனார் தேவதானமான ஊர் குளத்துக் கரைக்கும், வயலுக்கும் மேற்கும், தென்னெல்லை இந் நாயனார் தேவதானத்து வயலுக்கு வடக்கும், மே லெல்லை குமார மங்கலத்தின் நன்னறுங் கொன்றைக் குளத்
3 தில் கரையில் ஏறின வழிக்கும் இக்குளத்தில் கரைக்கும் கிழக்கும் வட எல்லை அப்பன் கொற்றன் முழிக்குப் போகிற வழிக்குத் தெற்கும் இன்னான் கெல்லைக் குட்பட்ட குளமும் பூமியும் மேனோக்கின மரமும் கீனோக்கிய கிணறும் கிணறும் மற்றும் எப்பேர்ப்பட்டனவும் எம்மிலி சைந்த விலைப் பொருளுக்கு விலைக்கற விற்று விலைப் பொருளெல்லாம் விலையாவண
4 க்களத்தே காட்டி ஏற்றி கையறக் கொண்டு விற்று விலைப்பிரமாணம் பண்ணிக் குடுத்தோம் ஊற்றத்தூரான சுந்தரபாண்டிய நல்லூர் ஊராயிசைந்த ஊரோம் எங்கள் சென்மம் விக்கிற செங்குளமு மிக்குளத் துக்குப் பேசின

நான்[கு] எல்லைக்குட்பட்ட எப்பேர்ப்பட்டதும் உடையார் திருவிராமீசுவர முடைய நாயனார்க்கு ஆதி சண்டேசுவர விலையாக

5 இப்படி விற்று விலைப் பிரமாணம் பண்ணிக் குடுத்த இக்குளத்தாலும் பூமியாலும் வந்த இறை கடமை பஞ்சுபீலி சந்திவிக்கிரமபேறு மற்று மெப்பேர்ப் பட்டினவும் நாங்களே இறுத்துக் குடுப்போமாகவும் இப்படிக்கு இதுவே விலை பொருட்செலவோலை யாவதாகவும் இதுவல்லது வேறு விலைப் பிரமாணம் பொருளாக ஆதி பொருட்செல வோலை காட்டப் பெறார்களா

6 கவுங் கடவதன்றி ஒழிவதாக விலைக்கற விற்றுப் பொருளறக் கொண்டு விலைப் பிரமாணம் பண்ணிக் குடுத்தோம் - நெற்சுர நாட்டு ஊற்றத்தூரான சுந்தர பாண்டிய நல்லூர்ஊரோம் எங்கள் சென்[மம்] . . .

### 35:4

***இடம் :*** *திருநெல்வேலி மாவட்டம், சங்கரன்கோவில் வட்டம், கயத்தாறு, கோதண்டராமசாமி கோயில் துர்க்கை அம்மன் சந்நிதித்தூண்.*

***காலம்:*** *கி.பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *தூண் செய்து கொடுத்தமை.*

1 இத்தூண்
2 தனயன்
3 தம்பிக்கு
4 நல்லானா
5 ன தமிழ
6 தரையன்
7 தன்மம்

### 35:5

***இடம் :*** *மேற்படி ஊரிலுள்ள திருவேங்கட முடையான் கோயில் வடக்கு அதிட்டானம்.*

***காலம்:*** *கி.பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *கல்வெட்டு முழுமையாக இல்லை.*

1 குடுத்தோம் நரலோக சூரிய விண்ணகரெம் பெருமான் கோயிலில் . . .

### 35:6

***இடம் :*** *மேற்படி ஊரிலுள்ள கட்டபொம்மன் சிலைக்குப் பின்புறமுள்ள பாலம்.*

***காலம்:*** *கி.பி.13 ஆம் நூற்றாண்டு.*

***செய்தி: நிலதானம் பற்றிய துண்டுக் கல்வெட்டுகள்.***

1 க்கொண்ட பெ வித்து உ
2 ழ்வார் திருவிடையாட்டத்து வடகிழ
3 கும் பாணடிய சது[ர்] வேதி மங்க
4 . நிலம் ஒன்றரையே ஒரு மாவும்
5 விளைந்த நிலத்துக்குக் கடமை[ம]
6 ரகப் பெறும் வாசற் பேறு இறை இ
7 யு மற்றும் எப்பயிர்ப பட்டனவும்
8 [நீ]ரை இறைத்துக் குறுவை விளைந்
9 [விநா] யகப் பிள்ளையாருக்கு தண்டேசுவர
10 காலுக்குக் கிழக்கும இவ்வூர் திருநீல கணட விண்[ணகர்]
11 [திருவிடை] யாட்டத்துக்கு வடக்கு மேலெல்லை வென்று முடி
12 க்குத் தெற்கும் ஆக நான்கெலலைக்குட்பட்ட நஞ்
13 ணாறடிக் கோலால் நிலம் அளக்கப் [பாயுத்து
14 வெட்டிப் பாட்டமும் பஞ்சுபீலி சந்திவிக்கி
15 வரியும் பொன் வரியும் ஏரிவரியு மனைவரி
16 . . . இவ்வரிசையில் ஒன்று பாதியும்

# 36. தூக்கநாயக்கன் பாளையம் செப்பேடு

செ. இராசு, ஈரோடு.

**இடம் :** ஈரோடு மாவட்டம், கோபிசெட்டிபாளையம் வட்டம் தூக்க நாயக்கன் பாளையத்திலுள்ள பால்காரர் தோட்டம் உருக்குமணியம்மாள் வசம் உள்ளது. இவர் முன்பு இம்மாவட்டம், பவானி வட்டம், மயிலம்பாடியில் வசித்தவர்.

**காலம்:** விசயநகர மன்னன் வீரவெங்கடபதிராயர், (கி.பி.1615).

**செய்தி:** வடகரை நாட்டில் தாரமங்கலம் இம்முடி கட்டிமுதலியார் அதிகாரம் செய்யும்போது மயிலம்பாடி (அன்றைய வயிலம்பாடி) கொங்குச் செட்டியார்களின் ராசாஞ்செட்டி மகன் கஞ்சமலைச்செட்டி என்பவர் தன் பங்கு நிலத்தில் முக்கால் பங்கையும், வீட்டையும் பிள்ளை குலத்து வேளாளராகிய தேவராடிக்கவுண்டன் மகன் பெரியண கவுண்டன், அவனாசிக்கவுண்டன் மகன் பெரியணகவுண்டன், பெற்றாக்கவுண்டன் மகன் சாக்கண கவுண்டன் ஆகிய மூவருக்கும் திருவையாற்று நாகரம் 17 பொன், 1 பச்சவடம், 1 சேலை ஆகியன பெற்றுக் கொண்டு காணியாட்சி உரிமையை விற்பனை செய்துள்ளார். தனிப்பட்ட விற்பனை ஆயினும் மயிலம்பாடி பவானி சிவன் கோயிலான திருநண்ணாவுடையார் கோயில் மானிய ஊர் ஆகையால் செப்பேடு எழுத நேர்ந்துள்ளது. அரசு அலுவலர்கள் பலர் கையொப்பமிட்டுள்ளனர். அவர்களுள் தலத்துக் கரணிக்கம் அலுவலராகப் பூங்கோதை என்ற பெண் பெயர் குறிப்பிடப் பெறுவது முக்கியமானது. இவ்வம்மையார் தக்கைராமாயணம் பாடிய பத்தர்பாடி எம்பெருமான் கவிராயரின் மனைவியாவார். இவர் பவானிக் கோயில் திருப்பணி செய்துள்ளதை பவானிக் கல்வெட்டுக் கூறுகிறது. கட்டி முதலியார் மனைவி சின்னம்மையாருடன் சேர்ந்து 'கண்ணொளி கதிரொளி' என்ற அத்வைத நூலைப் பாடியுள்ளார். திருச்செங்கோட்டுக் குறவஞ்சியும் இவர் இயற்றியதேயாகும். இடைக்காலத்தில் நாம் அறிந்த இலக்கியம் பாடிய ஒரே பெண்பால் தமிழ்ப் புலவர் இவரே எனலாம். (கவுண்டு = அதிகாரம், வழவு = வீடு).

1 உ ஸ்வஸ்திஸ்ரீமந் மகாமணடலேச்$_0$வர ராஜாதிராச ராசபரமேச்$_0$வர ராசமார்த்தாண்டன் ஸ்ரீ வீரவெங்கிடபதிதேவ

2 மகாராயர் ப்ருத்விராஜ்யம் பண்ணி அருளாய்நின்ற சாலிவாகன சகாப்தம் 1537க்கு மேல் செல்லா

3 நின்ற ராக்ஷச வருஷம் தை மாதம் 28 தேதி கொங்குமண்டலத்து ராசராதாபுரத்து சாவடிக்கு செல்லும் வடகரை

4 நாடு இம்முடி கட்டிமுதலியா ரய்யனவர்கள் காலத்தில் மேற்படி நாட்டில் திருநண்ணாவுடைய தம்

5 பிரானார் திருவிளையாட்டமான வயிலம்பாடிக் காணியாளரில் கொங்கச் செட்டிகளின் ராசாஞ்செட்டி

6 மகன் கஞ்சமலைசெட்டியேன் பிள்ளை குலத்து வெள்ளாழரில் தேவராடிக் கவுண்டன் மகன் பெ

7 ரியணகவுணடனுக்கும் அவனாசிக்கவுண்டன் மகன் பெரியண வுண்டனுக்கும் பெற்றாக்கவுண்டன்

8 மகன் சாக்கணகவுண்டனுக்கும் இதிலுள்பட்ட அண்ணன் தம்பியளுக்கும் காணியாட்சிச் சாதனப்ப

9 ட்டையம் குடுத்தபடி வயிலம்பாடியில் என்னுட கவுண்டு காணியாட்சியில் அண்ணன் தம்பியள்

10 கூறென்னுங் கூறு பொத்தி என்னுட ஒரு பங்கில் முக்கால் பங்கு தங்களுக்கு கிறயமபண்ணிக் குடுத்தபடி

11 தங்கள் கையில் பற்றிக்கொண்ட திருவையாற்று நாகரம் பொன் 17 பச்சவிடம் 1 சேலை 1 இந்தப் பதினே

12 ழு பொன்னும் பச்சவிடமும் சேலையும் னான் பற்றிக் கொண்டபடியினாலே வயிலம்பாடியிலே என்னுட

13 பங்கு காணியாட்சிக்காடு மொண்டிகுளத்து யிட்டேரி வடபிறத்துக் காட்டில் காடொன்றும் கூடத்துக்கு

14 மேல்பிறத்துலே வேட்டுவச் சிறியாக்கவுண்டன் வழவுக்கு மேற்கே என்னுட காணியாடசி வழவு புத்திர

15 பவுத்திர பாரம்பரெ ஆசந்திராற்க ஸ்தாதியாக யிந்தக் காணியாட்சியும் கவுண்டிக்கையும் தாங்கள் அனுபவித்து

16 க்கொண்டு சுகத்திலே யிருக்கவும் யிந்தக் காணியாட்சிக்கு அண்ணன் தம்பி தாயாதி பாயாதி முன்னோற்றி பி

17 ன்னோற்றிக்காரரியாதொருவர் துடந்தாலும் துடிசி நீக்கிச் செலுத்திக் குடுக்கக் கூட

18 வேனாகவும் இப்படிச் சம்மதித்து காணியாட்சி சாதனம் குடுத்தேன் தேவராடிப் பெ

19 ரியணனுள்ளிட்டாற்கும் அவனாசிப் பெரியனுள்ளிட்டாற்கும் பெற்றராசாக்

20 கண்ணுள்ளிட்டாற்கும் கஞ்சமலைச் செட்டியேன் இந்தச் சாதனமெழுதினமைக்கு

21 வடகரை நாட்டுத் தலத்துக் கரணிக்கம் சிக்கணய்யன் மகன் வெங்கட்டய்யனெழுத்து

22 பெருமாள் தீக்ஷதரெழுத்து அரமனைக்கணக்கு செல்லப்பனெழுத்து

23 சாட்சி நல்லபெருமாள் வயிலம்பாடி நல்லதம்பிக் கணக்கப்பிள்ளை எழுத்து வெற்றிவே

24 ல் தாசன் நாவிதபண்டிதன் தானத்து பேருக்கு நல்லா பிள்ளை எழுத்து பெருங்கருணைப் பி

25 ள்ளை எழுத்து நல்லாபிள்ளை எழுத்து தலத்துக் கரணிக்கம் பூங்கோதை எழுத்து.

[இறுதியில் சில குறியீடுகள் பொறிக்கப்பட்டுள்ளன].



# 37. சிதம்பரம் மராத்தியர் கல்வெட்டு

ச. கிருஷ்ணமூர்த்தி, சென்னை.

**இடம் :** சிதம்பரம் காசுக் கடைத் தெரு நெல்லுக்கடை விநாயகர் கோவில் சுவர்.

**காலம்:** கி.பி.1689

**செய்தி:** சிதம்பரம் நாட்டு கலியுகராமராயபிள்ளை என்பவர் சில பொருட்களுக்கு வரி விலக்கு அளிக்குமாறு வேண்டிக் கொண்டதற்கு மராத்திய அதிகாரி ரகுவோஜி பண்டிதரும் வரிவிலக்கு அளிக்கக் கட்டளையிட்டமை. இவர் செஞ்சிப் பகுதியில் மராத்திய அதிகாரியாக விளங்கிய ரகுநாத் பந்த் ஹனுமந்தே ஆவார்.

1 ஸ்வஸ்திஸ்ரீ சகாப்தம் 1611 இ
2 தன்மேல் செல்லாநின்ற சுக்கில ஆண்டு மாசி
3 மாதம் 3 செவ்வாய்க் கிழமை உத்திரட்
4 டாதி நட்சத்திரமும் சுபயோகமும் ப
5 வகரணமும் பெற்ற தினத்திலே ராய
6 மானியராய ரவர்கள் ரகுவோசி பண்டிதர
7 ய்யரவர்கள் சிதம்பரத்துக்கு வந்து சீமை
8 யும் கோட்டையும் கட்டிக்கொண்டு நூத்
9 துக்கால் மண்டபத்தி லிருக்க சிதம்பரத்
10 தலம் பூலோக கயிலாய ராசதானிக்
11 கடுத்த தலம் படை [வீட்டில்] சேருகிறதுக்கு
12 அடுப்பு வரி சுங்கான் வரி மாங்காய் நெ
13 ல்லிக்காய்க் கட்டாயம் நந்தவனத்து ஆள்
14 பிடியும் மன்னிச்சுக் கட்டளையிட வேணும்மெ
15 ன்று நாட்டுக் கலியுகராயப் பிரமராய பிள்ளை
16 கேட்டுக் கொண்டார் அந்தபடிக்கு ராயமா
17 னியராய ஸ்ரீ மகாராய சாய்பு அவர்களுக்
18 குப் புண்ணியமாக ராய ஸ்ரீ ரெகுவோசி பண்
19 டித ரய்யனவர்கள் கட்டளையிட்ட படியினாலே
20 யிந்தத் தற்மம் சந்திராதித்தவரையும நடந்து வ

21 ரக் கடவதாகவும் யிந்தத் தற்மத்தைப் பரிபால

22 னம் பண்ணின பேர் சிதம்பரத்திலே அர்த்த யா

23 மத் தெரிசனம் பண்ணின பலன் பெறு

24 வர் யிந்தத் தற்மத்துக்கு அகுதம் பண்

25 ணிய பேர் சிதம்பரத் தலத்திலே

26 தீயிட்ட தோஷத்திலேயும் சனத்துடே

27 ராகம் பண்ணின தோஷத்திலேயும்

28 மக்கம் மசிதியிலே பண்ணியை

29 க்கொண்ண தோஷத்திலேயும்

30 போகக் கடவராகவும்

# 38. கன்னியாகுமரி மாவட்டக் கல்வெட்டுகள்

தே. கோபாலன், நாகர்கோவில்.
செந்தீ நடராசன், நாகர்கோவில்.

***38:1***

***இடம் :*** *அகஸ்தீஸ்வரம் வட்டம், சரலூர் கிராமம் மாடன் கோயிலருகே உள்ள தனிக் கல்.*

***காலம்:*** *கொல்லம் 872, (கி.பி.1696).*

***செய்தி:*** *வேணாட்டரசன் வீரகேரளவர்மன் அரசாணை (கல்ப்பினை)யின்படி ஒருவனுக்கு 'குலசேகரனாடான்' என்ற பெயர் கொடுத்து ஆறில் பாதி கிரையம், கரைப்பணம் போன்ற அரசு வருவாயையும் கொடுத்தமை.*

***முன்பக்கம்***

1 கொல்லம் 872 வருஷம்
2 மாருகழி மாதம் 6ம் தேதி நாகர்கோ
3 வில் சரலூர் இல மூத்த திருவடி
4 வீரகேரளவர்ம்மர் சிறவாமூ
5 த்த தம்பிரன் கல்ப்பினைப்படி . .
6 ட்டுப் . . பெயரு வை
7 கக்கு . . . அம்ப
8 லத்துக்கு . . . குளத்துக்
9 கு தெ . வாய்காலு
10 க்கும் வக பேரு உட்பட குளத்தி
11 னட்டான் கண்ணன் கரை கி
12 ராமம் குலப் பேருப் போய்க்
13 குலசேகர னாடான் பற்றி கொ
14 ளவாராகவும் கல்ப்பினைப்படி
15 கல்லும் வெட்டி னாட்டிக் கொடுத்த
16 இடத்தறை தேவனான தேவன் இ
17 ளம்பயில் மாத்தாண்ட மா
18 த்தாண்ட வர்மர் உ

***மறுபக்கம்***

19 வீரகேரளவர்ம்மர்
20 சிறவா மூத்த தம்பிரான்,

21 கல்பினைப்படி குலசே
22 கர னாடானென்று ே
23 பரும் கொடுத்து 6 பாதி[கி]
24 றயமும் கொளு வெ
25 த்திலையும் சமத்து பிராத்தி
26 யும் கரைபணமும் க
27 ல்பினைபடி வாங்கிக்
28 கொள்ளுமாறும்
29 இப்படிக்கு கல்பினை[ளுப்]
30 பம்படி கல்லு வெ
31 ட்டி நாட்டி கொடுத்த வ
32 ரிசையாவிது இயி
33 துக்கு அகிதம் பண்
34 ணினவன் கெங்கை
35 கக் கரையில் காராம்
36 பசுவை கொன்ன ப
37 ாவம் கெட்டிக் கொள்
38 ளுவாராகவும் இதுக்கு
39 ஆக்கம் செத
40 வன் ஆசின படுவாரா
41 கவும்.

***38:2***

***இடம் :*** *மேற்படி வட்டம், பறக்கை அக்கரை மகாதேவர் கோவில் அருகே உள்ள எல்கைத்தூண்.*

***காலம்:*** *கி.பி.15-16ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *பிராமணர் குடியிருப்புகள் உள்ள அகரத்தினுள் எல்கை தாண்டி கீழ் சாதியார் வரக்கூடாது எனத் தெரிவிக்கிறது.*

1 இது கங்
2 அகத்து
3 கீள் சா
4 திக்கு வர
5 படாது

***38:3***

***இடம் :*** *மேற்படி வட்டம், கோட்டாறு ஏகாலியர் மடவளாகத்திலுள்ள சுமைதாங்கிக் கல்.*

***காலம்:*** *கொல்லமாண்டு 990 (கி.பி.1814).*

***செய்தி:*** *பெருமாள் பட்டங்கட்டி என்பவர் அகால மரணமடைந்ததன் நினைவாக நிறுவப்பட்ட சுமைதாங்கிக் கல் இது.*

1 990 வருஷம்
2 அல்ப்பசி மாதம்
3 10 தேதி கோட்டா
4 று கடைசன்
5 பூமி பட்ட கெட்டி
6 மகன் பெரு
7 மாள் பட்ட கெ
8 ட்டிக்கு
9 குமரன் துணை

### *38:4*

***இடம் :*** *தோவாளை வட்டம், குறத்தியறை கிராமம், குறவன் தட்டுப் பாறை என்ற இடத்தில் உள்ள பாறை.*

***காலம்:*** *கி.பி.10ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *சாத்தன் சிராவணன் என்பவன் பொன் கொடையளித்தது குறித்த வட்டெழுத்துக் கல்வெட்டு.*

1 ஸ்வஸ்திஸ்ரீ கொப்பரகெசரி பன்மர்க்கு யாண்டு
2 31 இவ்யாண்டு நாஞ்சி நாட்டு முன்
3 னூரிரவி நியமது வண்டூற வீற்றிருந்த
4 ருளின எம்பெருமாற்கு இவ்வூர் குன்றப் பள்ளி
5 இப்பிக் கவிசியன் சாத்தஞ் சிராவ
6 [ணன்] மலமாடுது கல்லால் வைத்த
7 . . . பது . . றய
8 . . ம் ரிவ்வண்டுறைதவன்
9 . . . ஏற்றின இறை [7] பொன்
10 குன்றப்பள்ளி இப்பிக் கவிச்செயன்
11 தன் நிறை கல்லால் நியமத்துக்கு நிறுத்த குளி [கை]
12 பொன் . . இவ்வூருடை ஸ்ரீ வைஸ்ரவணன்
13 கையிலருப்பனிச்சு விட்டது

### *38:5*

***இடம் :*** *மேற்படி வட்டம், தென்பாறைக் குன்றம் சிவன்கோயில் பலிக்கல்.*

***காலம்:*** *கி.பி.13ஆம் நூற்றாண்டு.*

***செய்தி:*** *சிவன்கோயிலுக்கு பலிக்கல் உபயமாக செய்தளித்தது.*

1 ஸ்வஸ்திஸ்ரீ வடபாறை குன்றம் வெடங்கன் ை
2 வயக்கனாயர் சமயச் சவை உபயம்

### 38:6

***இடம் :*** *கல்குளம் வட்டம், கழுவன்திட்டுவிளை கிராமம் சாலையருகே உள்ள தூண்.*

***காலம்:*** *கொல்லமாண்டு 670, (கி.பி.1494).*

***செய்தி:*** *கருப்புக்கட்டி தானமளித்ததைக் குறிக்கிறது.*

1 670 வருஷம்
2 அருளி செய்த ப
3 டி ஆவிது மூப் [ப]
4 ன் வகையும் சிறவ
5 [ா] ய் வகையற்
6 உட்பட்ட [மேற்] ப
7 டியார் திருவூதி
8 தியார்கள்
9 ப [ன்] னை [யர்] பல
10 வகைய [ற்] உள
11 கருப்புகட்டி
12 யும் பண்டா
13 கருப்பு கட்
14 டியும் ஒழிஞீம்
15
16 வமை தம்
17 [வகைக்]கு [பல] வ
18 கையர் 200 க
19 ருப்பு கட்டியும்
20 பண்டா கரு
21 புக் கட்டியும
22 ஒழிந்து கல்
23 லு வெட்டி
24 யும்

### 38:7

***இடம் :*** *மேற்படி வட்டம், கண்டன்விளை கிராமம் கத்தோலிக்க தேவாலயத்திற்கு அருகே நாகர்கோவில் திங்கள்சந்தை சாலையின் இடப்புறமுள்ள கல்லறை.*

***காலம்:*** *கொல்லமாண்டு 1053, (கி.பி.1877).*

***செய்தி:*** *மிராசுதார் சவரிமுத்து நாடான் மகன் அருளப்பன் மரணமடைந்ததைத் தெரிவிக்கிறது.*

1 1877 வருஷம் சவுட்டம் ப
2 ரு 13 தேதி 1053 ஆவ
3 ணி மாதம் 16 தேதி ஞாயிற்றுக் கிழமை
4 ம காலை 10 மணிக்கு நான்கூடே
5 னரி தாலுகா அச்சன்பா
6 டு மிராசு சவேரிமுத்து நா
7 டான் மகன் அருளப்பன் மர
8 ணம் இவனாற்றுமத்துக்காக
9 வேண்டிக் கொள்ளவும்

# 39. எலவனூர் தொட்டிய நாயக்கர் செப்பேடுகள்

நாக. கணேசன், கரூர்.

*39:1*

**இடம் :** கரூர் மாவட்டம், அரவக்குறிச்சி வட்டம், எலவனூர் கிராமத்தைச் சேர்ந்த பொம்மு நாயக்கர் என்பவரிடம் உள்ளது.

**காலம்:** கி.பி.1733.

**செய்தி:** இச்செப்பேடு 27.5 செமீ, நீளம் 6.5 செமீ அகலம் 82 கிராம் 230 மிகி எடை கொண்டது. முதல் பக்கத்தில் 13 வரிகளும், மறுபக்கத்தில் 11 வரிகளும் உள்ளன. இறுதியில் எழுத்துக்கள் தேய்ந்துள்ளன. மணலூர் நாட்டு தொட்டிய நாயக்கர் சமூகத்தைச் சேர்ந்த பூசாரி காமுநாயக்கர் மகன் கொண்டம நாயக்கருக்கு வழங்கப்பட்ட பாடிகாவல் பற்றிய பட்டயமாகும்.

## முதல் பக்கம்

தெண்ணிலி கூடலூர் நாடந்தை கொடந[ல்]லூர்
1 பரிதாவி வருடம் மாருகளி மாதம் 16ஆம் தேதி மணலூர் நா
2 ட்டு நாட்டவர்கள் மொள மொள வார்த் தொட்டியரில்
3 பூசாரி காமு நாயக்கர் மகன் கொண்டமணாயக்கருக்கு
4 பாடிகாவல் பட்டையம் குடுத்தோம் மாணிபகாறர்
5 பேர் குடியானபன் அன்னி சன்னி சேவுகன் கட்டு
6 கலபன் பாப்பார் இவர்கள் உள்பட்டாரும் வீட்டுக்
7 கு ஒரு பணமும் செய்க்கு ஒரு கட்டு செய்க்கு குறுணி நெ
8 ல்லும் நால்வரும் கூடி கட்டளையிட்டோம். இந்த
9 ப்படிக்கு அநுபபிச்சுக் கொண்டு நாட்டிலே களவு
10 கன்னம் பழி குலை நாட்டோ[ர்] ஒன்றாக நடந்து கொ
11 ள்ளக் கடவே[ா]றாகவும் இப்படிக்கு சம்மதித்துப்பட்டை
12 யம் குடுத்தோம் கல்லுங் காவேரியும் புல்லும் பூமியும்.
13 உள்ள வரைக்கு சூரியர் சந்திரர் உள



**இரண்டாம் பக்கம்**

14 வரைக்கும் கட்டளையிட்டோம் இதுவும் இலங்கன்று
15 சொன்னால் கெங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்
16 ற பாவத்திலே போவான் சாங்கத்திலேய் திருவிளவும் மானை
17 கொண்ண பாவத்திலே போவான் பாப்பாரைக் கொன்
18 ற பாவத்திலே போவான் யிதுக்கு சாட்சி வேங்கடவூர்
19 கிஷ்ஷன் செட்டி, காரையூர் வெம்பாண்டாக் கவுண்டன், சக்
20 கரைக் கவுண்டர் ஊழியம் கும்பிட்டாரு மன்னது
21 க்கு சாட்சி இப்பட்டையம் எழுதினமைமைக்கு குமாரசு
22 வாமி எழுத்து பசுதிஸ்சுரர் சி . . . ம் வேணும் . . .
23 . . .
24 . . .

***39:2***

**இடம் :** மேலது.

**காலம்:** கி.பி.1772.

**செய்தி:** *இச்செப்பேடு 27.5 செமீ நீளம், 6.5 செமீ அகலம் 82 கிராம் 690 மிகி எடை கொண்டது. முதல் பக்கத்தில் 10 வரிகளும் மறுபக்கத்தில் 8 வரிகளும் உள்ளன. மணலூர் நாட்டு நாட்டார்கள் தொட்டிய நாயக்கர் சமூகத்தைச் சேர்ந்த முத்தைய நாயக்கர் மகன் கொண்டம நாயக்கருக்கு முன்னோர் கொடுத்ததைப் போன்று பாடிகாவலுக்காக வழங்கப்பட்ட பட்டையமாக இது இருக்கலாம்.*

**முதல் பக்கம்**

தெண்ணிலி கூடலூர் நாடந்தை கொடலூர்
1 கர வருடம் சித்திரை மாதம் முதல் தேதி மணலூர் நாட்டு நாட்டார்
2 கள் மொளவார் தொட்டியரில் முத்தைய நாயக்கர் மகன்
3 கொண்டம நாயக்கருக்கு மேலோர் வலி குடுத்தபடி இவருக்
4 குக் கதிரை குடை உம்பிளிக்கை வருஷம் இருபது பொ
5 ன் ஊருக்குமஞ்சு பொன் கடாவிள் விட்டோம்.
6 பத்துப் பேருக்கு கரிமொனயமும் பத்து
7 ப்பேக்குக் கைச் சம்பளமும் அவர்களு
8 க்கு மாசம் நாலு பணமும் வருசம்
9 நாற்பது பொன்னும் கட்டளையிட்
10 டோம் எலவநூரோடே சேந்த கரையார்



**இரண்டாம் பக்கம்**

11 கட்டளையிட்டோம் இந்தப்படி
12 கது அனுபவுச்சுக் கொண்டு சுகத்தி
13 லேயிருக்கவும் இதுகது சாட்சிவெ
14 ங்கல நாட்டார் கிளங்கு நாட்டார்வெ
15 ஞ்சமாக் கூடலூரார இந்தப்ப
16 ட்டையம் எழுதின னன்மைக்கு கயி
17 லெறி எழுத்து தெண்ணலி கூடலூர் நடந்தை கொ
18 டந்தூர் நாட்டார் கையியெழுத்து

**39:3**

**இடம் :** மேலது.

**காலம்:** *கி.பி.1733.*

**செய்தி:** *இச்செப்பேடு 27.5 செமீ நீளம், 6.5 செமீ அகலம் 109 கிராம் 670 மிகி எடை கொண்டது. முதல் பக்கத்தின் இடபுறம் நான்கு ஊர் பெயர்களுடன் 11 வரிகளும் மறுபக்கத்தில் 15 வரிகளும் உள்ளன. மணலூர் நாட்டவர்கள் தொட்டிய நாயக்கர் சமூகத்தைச் சேர்ந்த பிச்சை நாயக்கர் மகன் தம்மக்க நாயக்கருக்கு எலவனூரில் காணியாட்சியும், குதிரைக் குடையும் கொடுத்தமை. காணியாட்சி பெற்ற தம்மக்க நாயக்கர் கோயிலுக்கு மாதம் 30 பணமாக வருடமொன்றுக்கு 36 பொன்னும், குதிரைக்காரன், குடைக்காரன், தம்பட்டக்காரன் ஆகியோருக்கு 34 பொன்னும் கொடுத்தது போக எஞ்சியவற்றைக் காணியாட்சியாக அனுபவித்துக் கொள்ள பட்டையம் அளித்தமை.*

**முதல் பக்கம்**

தெண்ணிலி கூடலூர் நாடந்தை கொடநதூர்
1 பரிதாவி வருடம் மாருகளி மாதம் 18 தேதி மண
2 லூர் நாட்டு நாட்டவர்கள் மொளவார்
3 தொட்டியரில் பெரிய பிச்சை னாயக்கர் மகன்
4 தம்மகக னாயக்கர் எலவனூர் காணி
5 யாசசிகது ஒத்த குதிரை குடையும குடு
6 த்தோம கோயிலுக்கு மாசம முப்பது ப
7 ணமாக வருட ஒன்றுக்கு முப்பத்தாறு பொ
8 ன கோயிலுக்கு குடுக்கவும முப்பத்து னாலு
9 பொன்னும் குதிரைக் காறன் குடைக் காறன த
10 ம்பட்டக்காறன் இவர்களுக்கும் போக இவரு
11 க்கு கோயிலு க காணியா

***இரண்டாம் பக்கம்***

12 இதுவெல்லாம் அனுபவுச்சுக் கொள்ளக் கடவேறா
13 கவும் இப்படியனுபவுச்சுக் கொண்டு நாட்டுக்கு ஒரு
14 பலிகுயூ நாலூ ரோடெ அஞ்சாக நடந்து கொள்ளவும் யி
15 ப்படி சம்மதிச்சு காணியாட்சிப் பட்டையம் குடுத்தோம் கீ
16 ழ் போக்கிய கிணறும் மேல் நோக்கிய மரமும் கல்லும் காவேரியும்
17 புல்லும் பூமியும் சூரியர் சந்திரர் உள்ள[ள]வும் அனுபவுச்சுக் கொ
18 ள்ளக் கடவேறாகவும் இதுக்குப் பிசகு பிசகு சொன்னால் கங்க
19 கரையில் காராம் பசுவைக் கொன்ன பாவத்திலே போவான்.
20 சாங்கத்திலேயும் திருவிளம்மானைக் கொன்ற பா[வ]த்தி[லே] போவான்.
21 பாப்பானைக் கொன்ற பாவத்திலே போவான் இதுக்கு சாட்
22 சி வெங்கம்பூர் கிஷன் செட்டியார் காரையூர் பிரமாண்டக்
23 கவுண்டன் சக்கரைக் கவுண்ட[ர்] ஊளியம் கும் பாட்டு ராமன் சாட்சி
24 எழுதினெ ன்மைக்கு நாட்டுக் கணக்கு குமாரசுவாமி எழுத்து
25 தெண்ணிலி கூடலூர் நடந்தை கொடந்தூர் மண்லூர் நாட்டார்
26 கை எழுத்

# 40. சிவகிரி கண்மாய் தூண் கல்வெட்டு

எம் . வெங்கடேசன், இராசபாளையம்.

*இடம் :* திருநெல்வேலி மாவட்டம், சிவகிரி தாலுகா சிவகிரிக்குத் தெற்கில் உள்ள ராசிங்கப்பேரி என்ற கண்மாய்க்குள் பெரிய மடையின் அருகில் நடப்பட்டுள்ள தூண் கல்வெட்டு.

*காலம்:* *சகம் 1676, (கி.பி.1754)*

*செய்தி:* சிவகிரிப் பாளையக்காரர் வரகுணராம சங்கரபாண்டி வன்னியனார் சிவகிரிப் பிடாகையில் ராசிங்கப்பேரி என்ற ஏரி, கால், புரவு, புன்குளம், பண்ணை உம்பளம் முதலானவற்றை ஏற்படுத்தியமை.

1 கலி யில
2 சகாத்தம 1
3 676 ன்
4 மேல் சிலா சா
5 தன மெளு
6 தினபடி பவ
7 வருஷம் காற்த்தி
8 கை மீ 8 வ
9 வரகுணரா
10 ம சங்கர பா
11 ணடிய வன
12 னியனாரவாக
13 ள் சிவகிரிப்
14 பிடாகையி
15 ல் ராசிங்கப
16 பேரி முதலா
17 ன குழங்கா
18 ல புரவு புன்
19 குழததிலு
20 ம் பண்ணை
21 யுணபளம
22 தெய்வதா
23 யம் பிரமதா
24 யம

# 41. திருப்பத்தூர் பெரிய கண்மாய் கலிங்குக் கல்வெட்டு

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

**இடம் :** சிவகங்கை மாவட்டம், திருப்பத்தூர் வட்டம், திருப்பத்தூர் பெரிய கண்மாயின் வடக்குக் கலிங்கில் நடப்பட்டுள்ள தூண்.

**காலம்:** கி.பி.1763

**செய்தி:** சிவகங்கை மன்னர் முத்துவடுகநாதப் பெரிய உடையாத்தேவர் ஆட்சியில் அவரது அமைச்சர் தாண்டவராயப்பிள்ளை மேற்படி கண்மாய்க்கு கலிங்கு கட்டியமை.

1<br>
2 விசைய இரகு<br>
3 னாத முத்து வ<br>
4 டுகனாதப் பெரி<br>
5 ய உடையாத் தே<br>
6 வரவர்கள்<br>
7 பிரிதிவிராச்<br>
8 சிய பரிபாலி<br>
9 னம் பண்ணி<br>
10 அருளா நின்<br>
11 ற சுபானு<br>
12 அடி . 10<br>
13 உ .<br>
14 பிரகாணியார்<br>
15 . .<br>
16 . தாண்ட<br>
17 வராயபிள்<br>
18 ளையவர்கள்<br>
19 அதிகாரத்தி<br>
20 ல் திருப்புத்<br>
21 தூர்ப் பெரிய<br>
22 கண்மாயி<br>
23 க்கு கலிங்கு<br>
24 கட்டி முகிந்<br>
25 த படியினாலே<br>
26 ல வருஷா<br>
27 வருஷம் வ<br>
28 யிரவமூர்தி<br>
29 கிருபையி<br>
30 னாலே வீர<br>
31 போகமா<br>
32 யி விளைந்து<br>
33 குடிபடை<br>
34 யும சுகமே<br>
35 இருக்க வே<br>
36 ண்டியது

# 42. மாடக்குளம் மடைத்தூண் கல்வெட்டு

கரு. இராசேந்திரன், மேலப்பனையூர்.

**இடம் :** மதுரை, பழங்காநத்தத்திற்கு மேற்கிலுள்ள மாடக்குளம் என்ற ஊரின் குளத்தின் வடக்கு மடைத்தூண்.

**காலம்:** கி.பி.18ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** மேற்படி குளத்தில் திருவாலைவாயன் என்ற மடைக்கல் சாய்ந்து கிடந்ததைத் திரும்பவும் எடுத்து நாட்டியதைத் தெரிவிக்கிறது.

1 விறோதி வருஷம்
2 ஆவணி மா
3 தம் 29 தேதி திருவா
4 லைவாயன் ம
5 டைக் கல்லு
6 எடுத்து நாட்டி
7 வித்தான் திரு
8 வாலை வாச்சி
9 அதிகாரி மகன்
10 ஆரியர் புத்திர
11 கணக்கு நாய
12 ன் பிள்ளை

# 43. குருங்குளம் கல்வெட்டு

மா. பவானி, தஞ்சாவூர்.

**இடம் :** தஞ்சாவூர் மாவட்டம், குருங்குளம், செஞ்சடேசுவரர்கோயில் கருவறையின் உத்திரத்தில் உள்ள கல்.

**காலம்:** கி.பி.18ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** திருகுடுமியப்பர் என்பவர் அளித்த தானம் பற்றியது.

1 . . .
2 சுர தை
3 . . . [ஸ்ரீ]
4 . . . னாய
5 க்கர் அ
6 ய்யன்
7 தன்ம
8 மாக.
9 . . .
10 ான கிண
11 று திரு குடு
12 மியப்பர் த
13 ன்மம் இது
14 . . .



# 44. குருசாமிபாளையம் தொட்டிக் கல்வெட்டு

ப. காசிலிங்கம், கரூர்.

**இடம் :** நாமக்கல் மாவட்டம், ராசிபுரம் வட்டம், குருசாமிபாளையம் மேற்குரத வீதியில் (தற்போதைய நெசவாளர் கூட்டுறவு சங்கம் இருக்குமிடம்) உள்ள பிள்ளையார் கோயில் அருகில் உள்ளது.

**காலம்:** *கலி 4931, (கி.பி.1830).*

**செய்தி:** தொட்டிக்கல் என்று அழைக்கப்படும் கல்லின் நான்கு புறமும் எழுத்துகள் உள்ளன. (இத்தொட்டியை தற்சமயம் நூல் தட்டுவதற்குப் பயன்படுத்தி வருகிறார்கள்). இத்தொட்டியின் உயரம், சுற்றளவு ஆகியன முறையே *3* அடியாகும். இவ்வூரைச் சேர்ந்த குமாரசாமி பிள்ளை தாகம் தீர்க்க தண்ணீர்க் கிணறு ஒன்று, பசு மாடு நீர் அருந்துவதற்கு நீர்த் தொட்டி ஒன்று, துவைப்பதற்கு கல் ஒன்று ஆகியவற்றை அளித்தார்.

1 குருசாமி சகாயம் கலியுக சகாப்தம் 4931 விக்ருதி வருடம் வையாசி மாதம்
2 குருசாமி பாழையத்திலிருக்கும் சீர் கருணீகரில் கணக்கு குமாறசாமி பிள்ளை செய்த
3 தாபம் தண்ணீர் கிணரு - நீர்த்தொட்டி பசு உரிஞ்சி கல், துவயகல் சலவக்கல் உபயம்





# 45. கடம்பூர் மடைக் கல்வெட்டு

*கொடுமுடி சண்முகன், சென்னை.*

**இடம் :** திருநெல்வேலி மாவட்டத்தில் பாஞ்சாலங்குறிச்சியிலிருந்து கயத்தாறு செல்லும் வழியில் கடம்பூர் தாண்டி ஒரு கிமீ தூரத்தில் கயத்தாற்றிற்கு முன்னால் 8 கிமீ தொலைவில் உள்ள சிற்றேரியின் மடைத் தூண்.

**காலம்:** *(தமிழ் ஆண்டு) 1049, (கி.பி.1874)*

**செய்தி:** மடை அமைத்தவர் பெயராக இருக்கலாம்.

1 உ 1000 4 9 வரு வை
2 காசி மாதம் 4 தேதி
3 திரும
4 வாபுர
5 ம் சங்
6 கரப்ப
7 நாயக
8 கறவர்
9 கள் வ
10 கைய
11 றா தெ
12 ா ன் கூ
13 ஷ உ

# 46. மியான்மர் கணக்கு ஏடு

சு. இராசகோபால், சென்னை.

இரண்டாம் உலகப்போர் வரை இந்தியர்களால் வளப்படுத்தப்பட்டு, இந்தியர்கள் வளமாக வாழ உதவிய நாடு மியான்மர் (பர்மா) நாடாகும். நாட்டுக்கோட்டை நகரத்தார்கள் 19ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதியில் பர்மாவிற்குத் தனவணிகர்களாகச் சென்று பெரும் பொருளீட்டினர். அன்றைய அரசு வருமான வரிவிதிப்பு நெறிகளில் நிறுவன வரவு செலவுக் கணக்கு ஏடுகளை இன்றியமையாத ஆவணங்களாகக் கவனித்ததால் கணக்கு ஏடுகளில் அடித்தல் திருத்தல், பிழை, இடைச்செருகல், நம்பிக்கை மீறல்கள் ஏதும் நிகழாதவாறு பராமரித்தனர். பிழையின்றித் தெளிவாக எழுதுபவர்களே கணக்கெழுத அமர்த்தப்பட்டனர். நாள் வரிசையில் எழுதப்பட்ட ஏடுகள் 'குறிப்பேடு' என்றும் வகைபிரித்தெழுதப்பட்ட ஏடுகள் 'பேரேடு' என்றும் அழைக்கப்பட்டன. பேரேடுகள் மேலும் 'இனத்துப் பேரேடு' (வாழ்க்கையாளர் பேரேடு), 'செட்டிய வீட்டுப் பேரேடு' (நிறுவனத்தார் பேரேடு) என்று வகை பெற்றன.

இங்கு ஒரு பேரேட்டின் அமைப்பும், கணக்குகளின் தன்மையும் எடுத்துச் சொல்லப்படுகிறது.[1] இப்பேரேடு 25X38 செமீ அளவுடையது. பக்கங்கள் கருப்பு மையால் 1 முதல் 276 முடிய முத்திரை முறையில் எண்ணிடப்பட்டுள்ளன. படுக்கைக் கோடுகள் நீல நிறத்திலும், பட்டியல் தலைப்பு மற்றும் உயரக் கோடுகள் சிவப்பு மையிலும் அச்சிடப்பட்டுள்ளன. கூடுதலாகத் தேவைப்படும் பட்டியல் கோடுகள் உருளைக்கோல் (ruler) கொண்டு பிசிறில்லாமல் இரட்டைக்கோடுகளாக அச்சுக்கோடுகள் போலவே சிவப்பு மையால் தீட்டப்பட்டுள்ளன. கணக்குகளின் இறுதிக் கூட்டுத் தொகைகளும், குறுக்காக எழுதப்படும் கணக்குத் தீர்வுகளும் சிவப்பு மையால் எழுதப்பட்டுள்ளன. தாள்கள் பழுத்திருந்தாலும் கடந்த நூறு ஆண்டுகளில் விரைத்து உடைந்துவிடாது நல்ல நிலையில் உள்ளன. 'காலிகோ' துணியில் கட்டமைப்பு செய்யப்பட்ட இவ்வேட்டிற்கு கனத்த பருத்தித் துணியினால் உறை தைத்துச் சேர்க்கப்பட்டுள்ளது.

கணக்கு ஏட்டுப் பக்க எண்கள் இன்றைய எண்களிலும் கணக்குத் தொகை எண்கள் தமிழ் எண்களிலும் உள்ளன. ஓலைச்சுவடியிலிருந்து காகிதத்திற்கு மாறிய நிலையில் ஓலைச்சுவடிப் பழக்கமே பின்பற்றப் பட்டதை இது காட்டுகிறது. வரவு, பற்று, மாதம், வருடம், தேதி, நாளது,

---

1. இவ்வேடு சிவகங்கை மாவட்டம் ஆத்தங்குடி பெ.மு.சுப. இல்லத்தில் உள்ளது.

வசம், மேற்படி, முதல், 'க்கு' போன்று அடிக்கடிப் பயன்படுத்தப்படுபவை குறியீடுகளாகவே உள்ளன.[2]

இப்பேரேட்டில் காணப்படும் கணக்குத் தலைப்புகள்: சுவாமிகள் வறவு, ஆதாய வறவு, வட்டிச் சிலவு, சில்லறைச்சிலவு, முதல் வறவு, ஊர்க்கடை பத்து வறவு, வயல் கொள்முதல் பத்து வறவு, நெலம் கொள்முதல் பத்து வறவு, வயல் சேவா பத்து, வறிப்பணப் பத்து வறவு, மேலவீட்டு தெண்டாயுதபாணி, பளைய கணக்கு, யென வட்டி குடுத்த யாதாஸ்து, பத்தறம் கொள்முதல் பத்து வறவு, குதாம்பூ கொள்முதல் பத்து வறவு, குதாம்பூ சேவா வறவு, பக்காவீடு கொள்முதல், வண்டிமாடு, குதிறை, பசுமாடு பத்து வறவு, சம்பள பத்து வறவு, நடப்பு பத்து வறவு, சாமான் கொள்முதல், சில்லறை கயிமாத்து, சமையல் கணக்கு, தவணை கணக்கு, நகை கொள்முதல், டிக்கிறி கொள்முதல், நெல்கொள் முதல் பத்து வறவு, துட்டியேடு, கோட்டு பத்து வறவு, சீட்டுக் காசு பத்து வறவு. இவை மூன்று ஆண்டுகள் ஒப்பந்தத்தில் ஒருவர் எழுதிய கணக்காகும். இதனில் பளைய கணக்கு, புதுக்கணக்கு என்று குறிப்புகள் வருகின்றன. இவை முன்பு பார்த்த பிரதிநிதி, பின்னால் பார்க்க இருக்கும் பிரதிநிதிக்கு ஒப்படைக்கும் கணக்கு என்று கருதலாம்.

சுவாமிகள் வறவு என்ற தலைப்பில் சித்தி விநாயகற், மீனாட்சி சுந்தரேஸ்பறற் , வெங்கிடாசலபதி ஆகிய ஆகம தெய்வங்களும் கருப்பையா என்ற குலதெய்வமும், தெண்டாயுதபாணி என்ற இஷ்டதெய்வமும் உள்ளன. ஆண்டுத் தொடக்கங்களில் இத்தெய்வங்களே பணம் தருவதாக இவற்றின் பேரில் கால் ரூபாய், அரைக்கால் ரூபாய் எனச் சிறிய தொகைகள் வரவு வைக்கப்பட்டுள்ளன. சித்திவிநாயகற் கணக்கில் கார்த்திகை, மார்கழி, தை மாதங்களில் 'திருவிளையாடல் புராணம் வாசிக்க', 'திருவிளையாடல் கல்யாணத்துக்கு', 'திருவளையாடல் புராணம் வாசித்து பட்டாபிஷேகத்துக்கு' என்றெழுதி அரைக்கால் (1/8) ரூபாய், மூன்று வீசம் (3/16) ரூபாய் வரவு வைக்கப்பட்டுள்ளது. கடல் கடந்து சென்றுள்ள இவர்கள் தாயகத் தெய்வப்பற்று விடுபட்டுவிடாதிருக்க ஒன்றுகூடி திருவிளையாடற்

---

2.

| குறியீடு | பொருள் | குறியீடு | பொருள் |
|---|---|---|---|
| [illegible] | வரவு | [illegible] | நாளது |
| [illegible] | பத்து | [illegible] | வசம் |
| மீ | மாதம் | ஷ்ரி | மேற்படி |
| ஸ்ரீ | வருடம் | [illegible] | முதல் |
| ௳ | தேதி | ௭ | க்கு |

புராணத்தை ஒருவர் வாசிக்க பிறர் கேட்டு தெய்வ(சைவ) பக்தியைப் புதுப்பித்துக் கொண்டே இருந்துள்ளனர் என்பது தெரிகிறது.

ஆதாய வறவு என்ற தலைப்பில் ஒரு பிரதிநிதி மூன்று ஆண்டுகளில் ஈட்டித் தந்த இலாபம் காணப்படுகிறது. இது சுமார் 89,000 ரூபாயாகும். இந்த இலாபத் தொகை ரொக்கமாக இல்லாது வயல், நிலம், வீடு, கால்நடைகள், வண்டிகள், குதாம்பூ(குடோன் = கிடங்கு) ஆகிய அசையும் மற்றும் அசையாச் சொத்துக்களாக உள்ளன. வயல் கொள்முதலில் சுமார் ஆறு முறைகளில் 32 ஏக்கர் வரை ரூ 3100க்கு கிரயம் செய்துள்ளனர். வயல்கள் தவுங்கோம்யுவா, சேனையுவா, தைகய்யின்குயின்யுவா, வெண்டாதை முதலிய ஊர்களில் வாங்கப்பட்டுள்ளன. விற்பனையாளர்களாக பர்மியர்(?) களின் பெயர்கள் கொச்சாச்சி, கோசான்யான், கொப்போவூவென், கொசுவையுவே, கொப்போ என்று காணப்படுகின்றன. நெலம் கொள்முதல் கணக்கில் வீடு தோட்டம், மரங்கள் சார்ந்த இடங்கள் சொல்லப்படுகின்றன. விலைக்கு வாங்கியவையும், ஏலத்தில் வாங்கியவையும் (அடிச்சது) சொல்லப்பட்டுள்ளன. சுமார் ரூபாய் 20,000 வரை இந்நிலங்களுக்காகக் கொடுக்கப்பட்டுள்ளது. நிலங்கள் சிலவற்றின் பரப்பு ஏக்கரில் சொல்லப்பட்டபோதிலும் பல பரப்பளவு சொல்லப்படாமலே உள்ளன. குதாம்பூ என்பது 21 கால்கள் 24 களல்கள் அளவில் சொல்லப்படுவதும், தகறம் வேய்ந்தது என்று சொல்லப்படுவதும் வால்நிலம் (tail land) என்று சொல்லப்படுவதும் அவை கூரை வேயப்பட்ட பண்டகசாலைக் கிடங்குகள் என்று ஊகிக்கத் தோன்றுகிறது. அவை வாடகைக்கு (சேவா) விடப்பட்டு அதன் மூலம் வருவாய் ஈட்டப்பட்டுள்ளது என்றும் தெரிகிறது. வண்டிமாடு, குதிறை, பசுமாடு கணக்கில் மாடுகள் வாங்குவதும் விற்பதும் காணப்படுகின்றன. பசுமாடு சொல்லும்போது அதோடு காளம் கண்ணு, கிடாரி கண்ணு, கண்ணுக்குட்டி என்று குறிப்பிட்டுக் கன்றுகள் வாங்கியமையும் சொல்லப்படுகிறது. 'கொம்மிஞ்சொம்யுவா கொம்பியாசான் வசம் நடுவற் முன்னுக்கு கிறையம் வயித்து வாங்கியது' என்று வரும் சொற்றொடர் நியாயமான விலையில் அல்லது தரகர் மூலம் வாங்கியது என்று கருதத் தோன்றுகிறது. வண்டி மாடுகள் ஏலத்திலும் எடுக்கப்பட்டுள்ளன. வண்டி மாடுகள் வாடகைக்குக் கொடுத்தும் பணம் பெறப்பட்டுள்ளது. வண்டிகள் 'ரேக்ளா வண்டி' என்றும் 'வண்டி' என்றும் குறிக்கப்பட்டுள்ளன. ஒரு வண்டிக்கு வேண்டிய பாகங்களைத் தனித்தனியாக வாங்கி பின்பு ஒன்று சேர்த்து வண்டி தயார் செய்துள்ளனர்.

> *"20ஸ பத்து சக்கரம் 2க்கு ரூ.28½ம் ஷொளகு சீலைக்கு ரூ.1½ம் மூங்கிப் பாயிக்கி ரூ1ம் கயறுக்கு ரூ1 1/8 ம் உள்றெட்டுக்கு ரூ ¾ ம் பிறம்பூவளைக்கி ரூ7ம் மறத்துக்கு ரூ9ம் சில்லறை ஆணிக்கி ரூ இரண்டு வீசமும் யிரும்பூச் சாமான் அச்சு பூட்டு உள்பட ரூ 14 5/8ஆசாரிக்கி சம்பளம் ரூ18ம் ஆக பத்து வண்டிக்கு ரூ86 வீசம் அரைக்காணி'*

என்று விவரமாகக் கணக்குள்ளமை அன்றைய பொருளாதார நிலையை நாம் அறிந்து கொள்ள வசதியாக உள்ளது. பயணங்கள் வண்டி, காடி (பேருந்து/சிற்றுந்து), றயில், கப்பல் ஆகியவற்றின் மூலம் நிகழ்ந்துள்ளன.

றயில்ச்சாறிசு, காடிக்கூலி, வண்டி வாடகை, றயில்க் கேள்வு, கப்பல் கேள்வு ஆகிய சொற்கள் கட்டணங்களைக் குறித்து நிற்கின்றன. இரண்டு நபர்கள் தமிழகத்திலிருந்து பர்மா செல்ல "வண்டி வாடகை றயில் கேள்வு, கப்பல் கேள்வு சாப்பாட்டுச்சிலவு சில்லறைச்சிலவு" அணைத்தும் சேர்ந்து 65 3/16 ரூபாய் என்று கணக்கெழுதப்பட்டுள்ளது. ஒப்பந்த முறையில் பிரதிநிதியாகச் சென்றவர் மூன்றாண்டுகளுக்கு ரூபாய் 6750 நிச்சயித்துக்கொண்டு இதனில் 2 ஆண்டுகளுக்கான சம்பளம் ரூபாய் 4500 'முன் சம்பளம் யெடுத்துக்' கொண்டுள்ளார். இவருக்கான வேட்டி, மெத்தை, தலையணை, சமுக்காளம், சட்டை அனைத்திற்கும் செலவு எழுதப்பட்டுள்ளன.

'வறிப்பணக் கணக்கில்' வயல்களுக்கு வரி கட்டியமை காட்டப் பட்டுள்ளது. ஒரு ஆண்டில் அதிகப்பட்சம் ரூபாய் 1030 வரை வரி கட்டியுள்ளனர். இந்தப் பேரேட்டிலிருந்து பல்வேறு பொருளாதாரச் செய்திகளையும், சமுதாயச் செய்திகளையும், வாழ்க்கை முறைகளையும் நாம் அறிய முடியும். இந்திய நாடும், பர்மிய நாடும் ஆங்கிலேய அரசின் கீழ் ஒரு சேர இருந்தமையே இவ்வளவு எளிதான நடைமுறைகளுக்கு வசதியாக இருந்தது. மொழி வேறுபாடு தவிர பிற சில நடைமுறை வேறுபாடுகளும் கலாச்சார வேறுபாடுகளும் மட்டுமே இருந்தன. தமிழகத்திலிருந்து சென்ற தனவணிகர்களில் (சுமார் 300-400க்கும் மேற்பட்டோர்) இப்பேரேடு ஒருவர் பற்றியதே. இரண்டாம் உலகப் போர் முடிந்த பிறகு இவர்களில் பலர் தங்களது உடமைகள் அனைத்தையும் விட்டு விட்டுக் கால்நடையாகத் தமிழகம் வந்துவிட்டனர். இவர்களது நிலங்களும் சொத்துக்களும் அரசுடமையாகி விட்டன. எனினும் இன்னும் பலரது இல்லங்களில் இதுபோன்ற பேரேடுகள் உள்ளன. இவற்றிலிருந்து இன்னும் பலவகையான செய்திகளைப் பெறமுடியும்.

# 47. பெருமாள்பட்டுச் சிற்பங்கள்

அர. வசந்தகல்யாணி, சென்னை.

திருவள்ளூர் மாவட்டத்தில் வேப்பம்பட்டு என்ற ஊரின் அருகே உள்ள பகுதியே பெருமாள்பட்டு என்று அழைக்கப்படுகின்றது. இவ்வூரைச் சுற்றிலும் பல்லவர் காலத்துச் சிற்பங்கள் பல காணப்படுகின்றன. இவ்வூரின் காளஹஸ்தீஸ்வரர் கோயிலுக்கு நேர் எதிரே கிழக்குப் பார்த்த சிறிய தற்காலக் கட்டடத்தினுள் செல்லியம்மன் என்ற பெயரில் வழிபடு தெய்வமாக ஜேஷ்டாதேவி சிற்பம் காணப்படுகிறது. பீடத்தின் மீது இரண்டு கால்களையும் சற்று மடித்துத் தொங்கவிட்ட நிலையிலுள்ள இச்சிற்பத்தில் கணுக்கால் வரை நீண்ட தடித்த ஆடை, தலையில் தடித்த கண்ணியுடன் கூடிய கரண்டமகுடம், காதுகளில் பத்ரகுண்டலங்கள், கழுத்தில் பூவேலைப்பாடுகளுடன் கூடிய சவடி, வலக்கை மீது தவழ்ந்து செல்லும் உருட்டையான புரிநூல் ஆகியன காணப்படுகின்றன. மார்பில் கச்சு காணப்படவில்லை. காதளவு ஓடிய கண்டகளை உடையவளாய்ப் புன்னகை ததும்பும் முகத்துடன் அமர்ந்திருக்க, அவளுடைய வலது தோளின் மேல் காக்கை காட்டப்பட்டுள்ளது. இடப்புறத் தோளின்மேல் அரிவாளைப் போன்று அரைவட்டமாய்த் துடைப்பமும் அதற்கு அருகில் ஒரு நீண்ட வேலைப்பாடமைந்த தண்டும் காட்டப்பட்டுள்ளது. ஜேஷ்டாவின் வலப்புறம் நந்திதேவர் வலக்கரத்தில் நீண்ட தண்டை ஏந்தி, இடக்கரம் அஞ்சலிப்பது போல். காட்சியளிக்கின்றார். இடப்புறம் அக்கினிமாதா வலதுகாலை மடித்து இடதுகாலைத் தொங்கவிட்டுப் பீடத்தில் அமர்ந்திருக்கிறாள். வலதுகை மலர் தாங்கியும் இடது கை நித்ரா ஹஸ்தத்திலும் காணப்படுகின்றன. இடையில் வரிவரியான ஆடைக்கட்டு உள்ளது. இவளது பீடத்தின் மீது பெண்ணுருவம் வலக்கையைத் தொங்கவிட்டு இடக்கையைத் தலைமேலுள்ள சிறிய கூடையைத் தாங்கியும் காட்டப்பட்டுள்ளது. இச்சிற்பத் தொகுப்பில் உள்ள உருவ அமைதிகளைக் கொண்டும் ஆடை அணிகளின் அமைப்புக் கொண்டும் இதனை கி.பி.7-8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பல்லவர் காலச் சிற்பமெனக் கருதலாம்.



இங்குள்ள கங்கையம்மன் கோயிலில் பிற்காலப் பல்லவர் காலச் சப்தமாதர் குழுவைச் சார்ந்த வீரபத்திரர், மாகேஸ்வரி, கௌமாரி, சாமுண்டா, வாராகி ஆகிய சிற்பங்கள் உள்ளன. இச்சிற்பங்கள் யாவும் மார்பு வரை மட்டுமே தெரியும்படி அமைக்கப்பட்டுள்ளன.



முதலாவதாக உள்ள மாகேஸ்வரி சிற்பம் பெரிதும் சிதைந்தும் உடைந்தும் காணப்படாலும் தோற்றப்பொலிவு சிறிதும் சிதையாவண்ணம் உள்ளது. மேலிரு கரங்கள் மழுமான் ஏந்த, முன் வலக்கரம் அபயம் காட்டுகிறது. இடக்கரம் முழுதும் சிதைந்துள்ளது. இரண்டாவதாகக் காணப்படும் கௌமாரி சிற்பத்தின் கீழிரு கரங்களில் வலக்கரம் அபயம் காட்டி, இடக்கரம் சிதைந்தும், மேலிரு கரங்களில் அக்கமாலை, கெண்டி ஏந்தி, கண்ணியுடன் கூடிய கரண்டமகுடம் அணிந்து காணப்படுகிறாள். காதுகளில் தடித்த பத்ர குண்டலங்கள், கழுத்தில் மணிமாலை, சரப்பளி அணிந்து மார்பில் கச்சையுடன் காட்டப்பட்டிருக்கிறாள். அடுத்ததாகவுள்ள சாமுண்டா சிற்பத்தின் நடுவே மண்டையோட்டுடன் கூடிய பெரிய ஜடாபாரம் காட்டப்பட்டு உருண்டை விழிகளுடன் கூடிய உருண்டை முகத்துடன் வலக்காதில் பத்ர குண்டலமும் இடக்காதில் பிரேத குண்டலமும் அணிந்து காணப்படுகிறாள். மேல் வலக்கரத்தில் நீண்ட சூலமும் இடக்கரத்தில் பெரிய கபாலமும் ஏந்திக் கீழ் வலக்கரத்தில் துள்ளும் மான் காட்டப்பட, இடக்கரம் உடைந்து விட்டது. மார்பில் பாம்புக் கச்சை காணப்படுகிறது. கடைசியாகவுள்ள வாராகி பெரிதும் மழுங்கியுள்ளது.

காளஹஸ்தீஸ்வரர் கோயிலுக்குத் தெற்கே ஒரு சிறிய தென்னங்கீற்றுக் கொட்டகையினுள் அழகிய பல்லவர் கால துர்க்கை சிற்பம் காணப்படுகின்றது. சம்பங்கத்தில் நின்ற நிலையில் தலையில் கரண்டமகுடமும் காதுகளில் பத்ரகுண்டலங்களும் அணிந்து நான்கு கரங்களுடன் கணுக்காலுக்குக் கீழ் உடைந்த நிலையில் உள்ளது. மேலிரு

கரங்களில் முறையே சங்கு, சக்கரம் உள்ளன. சக்கரம் பிரயோகச் சக்கரமாக உள்ளது. முன்வலக்கரம் உடைந்தும், இடக்கரம் கட்யவலம்பிதத்திலும் காணப்படுகின்றன. கழுத்தில் சவடி, சரப்பளி, ஸ்தான சூத்ரம் உள்ளன. மார்பில் சிறிய பட்டையான கச்சை அணிந்து கைகளில் கேயூரம், கடகம் மூன்றடுக்கான முன்கை வளையல்கள் அணிந்து, இடையில் குறங்குசெறியும், இருபுறமும் ஆடைக்கட்டோடு கூடிய தொடை வரையிலான ஆடையும் காட்டப்பட்டுள்ளன.



நெடுங்குளம் என்றழைக்கப்படும் இடத்திற்கு அருகிலுள்ள மேட்டில் சோமாஸ்கந்தர் சிற்பத் தொகுதி இருந்ததற்கான கூறுகள் காணப்படுகின்றன. சிவனது பீடம் துண்டிக்கப்பட்ட நிலையில் மண்ணில் புதைந்திருந்தது. சற்றுத் தள்ளி உமை வலக்காலை மடித்து, இடதுகாலை எழிலாகத் தொங்கவிட்டு உள்ள பகுதி மட்டும் காணப்படுகிறது. இதிலும் இடைக்கு மேலுள்ள பகுதி உடைந்துள்ளது. இடக்கை பூஸ்பர்ஸ முத்திரையில் பீடத்தின் மீது எழிலாக வைத்துள்ளது. உமையின் அமர்ந்த தோற்றம் பல்லவர் காலத்தது என்பதைத் தெளிவாகக் காட்டுகிறது. மணற்கல்லால் இச்சிற்பம் செதுக்கப்பட்டுள்ளது.



# 48. இரட்டணை சிற்பங்களும் கல்வெட்டுகளும்

முத்து எத்திராசன், சென்னை.
வீரராகவன், விழுப்புரம்.

*48:1*

இடம் : திண்டிவனம் வட்டம், இரட்டணைக்குத் தென்மேற்கு சுமார் ½கிமீ தூரத்தில் உள்ள வயல்மேட்டில் உள்ள பலகைக்கல்.

காலம்: பல்லவர்

செய்தி: 5 அடி உயரம் 3 அடி அகலம் கொண்ட 'மகிஷாசுரமர்த்தினி புடைப்புச்சிற்பம். சங்கு, சக்கரம், போர்வாள், அம்பு, வில், கேடயம், மணியும் கொண்டு விளங்கும் இச்சிற்பம் இடக்கையைத் தொடையில் வைத்தபடி நிமிர்ந்த தோற்றமும் நேர்கொண்ட பார்வையும் கொண்டு விளங்குவது போர்வீரர்களை உற்சாகப்படுத்தும் வண்ணம் அமைந்துள்ளது. சடாமுடியுடனும் தொங்கும் காதுகளில் குழையும் குண்டலமும் பெற்றிருப்பது பல்லவர் பாணிக்கு உகந்ததாகும்.



**48:2**

**இடம் :** மேற்படி ஊரின் மையத் தெருவிலுள்ள பலகைக்கல்.

**காலம்:** பல்லவர். (?)

**செய்தி:** அமர்ந்த நிலையிலுள்ள பெண் உருவமான இச்சிற்பத்தின் தலையில் கரண்ட மகுடம், தொங்கும் காதுகளில் குழை, குண்டலம் இருப்பதைக் கொண்டு இச்சிற்பம் பல்லவர் காலமாக இருக்கலாம். இடக்காலை திண்டின் மேலும் வலக்காலை தொங்க விட்டபடியும் அமர்ந்ததோடு வலக்கையில் துடுப்பு (அகப்பை) இருப்பதைக் கொண்டு இச்சிற்பம் அன்னபூரணியாக இருக்க வேண்டும்.



**48:3**

**இடம் :** மேற்படி துர்க்கைக்குப் பின்புறம் உள்ள பலகைக்கல்.

**காலம்:** (?)

**செய்தி:** பொந்நிழிசு உமை என்பவள் நோன்பு இருந்ததைக் குறிக்கிறது. இவள் ஒரு சமணம் சார்ந்த பெண்ணாக இருக்கலாம்.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ
2 இந்நோன்
3 புநோற்றாள்
4 பொந்நிழிசு
5 உமை

*48:4*

*இடம் :* மேற்படி ஊரிலுள்ள ரெட்டியார் வயலிலுள்ள பலகைக்கல்.

*காலம்:* கி.பி.13-14ஆம் நூற்றாண்டு.

*செய்தி:* அழகியப் பல்லவன் என்பவன் துரவும் (தோப்பு) தொட்டியும் (நீர்த்தொட்டி) அமைத்தமை.

1 ஸ்வஸ்தி ஸ்ரீ இ
2 த்துரவுந் தெ
3 தாட்டியு
4 ம் அழகியப்ப
5 ல்லவன்



# 49. அரிய சூரியன் சிற்பம்

கி. ஸ்ரீதரன், சென்னை.

**இடம் :** கடலூர் மாவட்டம், பண்ருட்டி வட்டம், வீரப்பெருமாள் நல்லூர், வியாக்ரபுரீசுவரர் கோயில்.

**காலம்:** கி.பி.8-9ஆம் நூற்றாண்டு.

**செய்தி:** சூரியன் சிற்பங்களில் பொதுவாக தனது இரு கரங்களிலும் தாமரை மலர்களைத் தாங்கியிருப்பது போல காணப்படும். தலைக்குப் பின்னால் ஒளிவட்டம் இருக்கும். ஆனால் இக்கோயிலில் காணப்படும் சிற்பத்தில், சூரியன் தனது வலது கரத்தில் இரண்டு தாமரை மலர்களைத் தாங்கிய அரிய வடிவத்தைக் காணலாம்.



# 50. தஞ்சாவூரில் கண்டுபிடிக்கப்பட்ட சில நாணயங்கள்

ஆ. சீதாராமன், தஞ்சாவூர்.

50:1

இடம் : தஞ்சாவூர்.

காலம்: முதலாம் மகேந்திரவர்மன் (கி.பி.600-630).

செய்தி: கலப்பு உலோகத்தாலான இக்காசின் முன்பக்கத்தில் வலதுபக்கம் நிற்கும் காளையின் மேல் 'குணப[ர]' என்று தமிழ்-கிரந்த எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது. 'ர' என்ற எழுத்து விளிம்பிற்கு வெளியே சென்றிருக்க வேண்டும். இம்மன்னனின் விருதுப் பெயரான 'குணபரன்' என்பதற்கு 'நற்குணங்கள் நிறைந்தவன்' எனப் பொருள். காசின் பின்பக்கத்தில் நான்கு இதழ் கொண்ட பூவிதழ் காணப்படுகிறது. எடை : 2.7 கிராம்.



50:2

இடம் : தஞ்சாவூர்.

காலம்: இரகுநாத நாயக்கர் (கி.பி.1600-1645).

செய்தி: செப்புக்காசின் முன்பக்கத்தில் செங்குத்தாக சங்கு ஒன்று உள்ளது. பின்பக்கத்தில் 'ரகுணாத' என்று தெலுங்கு எழுத்துகளில் பெயர் பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 1.1 கிராம்.



**50:3**

**இடம் :** தஞ்சாவூர்.

**காலம்:** இரகுநாத நாயக்கர் (கி.பி.1600-1645).

**செய்தி:** செப்புக் காசின் முன்பக்கத்தில் ஆண்தெய்வம் அமர்ந்த நிலையில் காணப்படுகிறது. பின்பக்கத்தில் 'ரகுபண்டிதர்' என்று இரண்டு வரிகளில் தமிழில் பெயர் காணப்படுகிறது. தமிழகத்தில் கிடைத்த நாயக்கர் காசுகளில் இந்தக் காசில் மட்டும் 'ண்' என்ற எழுத்திற்கு புள்ளி வைத்து பொறிக்கப்பட்டுள்ளது. இரகுநாதன் சிறந்த போர் வீரனாகவும், சிறந்த ராமபக்தனாகவும், வட மொழியிலும், தெலுங்கு மொழியிலும் பல காவியங்களையும், பிரபந்தங்களையும் இயற்றி ஒரு மகாகவியாகவும், இசைக்கலையில் ஒரு மாமேதையாகவும் திகழ்ந்த காலத்தில் இந்தக் காசு ரகுநாத நாயக்கரால் வெளியிடப்பட்டிருக்க வேண்டும். எடை : 2.7 கிராம்.



**50:4**

**இடம் :** தஞ்சாவூர்.

**காலம்:** முகமது அலி (கி.பி.1754-95).

**செய்தி:** பொற்காசின் முன்பக்கத்தில் காளியின் உருவம் நின்ற நிலையில் கோடுகளால் பொறிக்கப்பட்டுள்ளது. பக்கத்தில் பிறைச் சந்திரன், சூரியன் உருவங்கள் காணப்படுகின்றன. பின்பக்கத்தில் கட்டடத்திற்குள் 'வாலா' என்று பாரசீக எழுத்துகளில் பெயர் உள்ளது. முகமது அலிக்கு 'வாலாஜா' என்று மற்றொரு பெயரும் உண்டு. இந்தப் பெயரே இந்தக் காசில் சுருக்கமாக 'வாலா' என்று பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 340 மில்லிகிராம்.



**50:5**

**இடம் :** தஞ்சாவூர்.

**காலம்:** முகமது அலி (கி.பி.1754-95).

**செய்தி:** செப்புக்காசின் முன்பக்கத்தில் செங்குத்தான கொடி ஒன்றும், கொடியின் உள்பக்கத்தில் பிறைச்சந்திரன், சூரியன் கொடியின் கீழ் 7 புள்ளிகளால் ஆன மலர் வடிவம் ஒன்றும் காணப்படுகின்றன. பின்பக்கத்தில் பாரசீக எழுத்துக்களில் 'வாலாஜ' என்று பொறிக்கப்பட்டுள்ளது. எடை : 2.1 கிராம். தஞ்சை மராட்டிய மன்னர் பிரதாப்சிங் கி.பி.1762ஆம் ஆண்டு உடன்படிக்கைப்படி கப்பம் கட்டவில்லை என்று குற்றஞ்சாட்டித் தஞ்சையைத் தாக்கினார் முகமது அலி. கி.பி.1771, 1773 ஆகிய இரண்டு ஆண்டுகளில் ஆர்க்காட்டின் ஆக்கிரமிப்பு தஞ்சையில் நிகழ்ந்தது. இதனைத் தொடர்ந்து 1773 முதல் 1776 வரை சுமார் இரண்டரை ஆண்டு காலத்துக்கு முகமதுஅலி தஞ்சையை ஆண்டார். அப்பொழுது இக்காசுகள் வெளியிடப்பட்டிருக்க வேண்டும்.



# 51. அழகன்குளம் பானை ஓட்டில் சிங்கள-பிராமி எழுத்துக்கள்

ஐராவதம் மகாதேவன், சென்னை.

அழகன்குளத்திலிருந்து அண்மையில் சிங்கள-பிராகிருத மொழியில் சிங்கள-பிராமி எழுத்துகளில் பொறித்த மேலும் ஒரு பானை ஓடு அகழ்ந்தெடுக்கப்பட்டுள்ளது (படம்). இதன் காலம் ஏறத்தாழ கி.மு.முதல் நூற்றாண்டு என்று எழுத்தமைதியிலிருந்து கொள்ளலாம். இதன் வாசகம் வருமாறு:

. . . ர கி த ச$_0$





இது ஒரு பெயரின் பிற்பகுதியாகும். இந்தியாவில் பல இடங்களில் கிடைத்துள்ள பிராகிருதக் கல்வெட்டுகளில் இத்தகைய பெயர்கள் மிகுதியாகக் காணப்படுகின்றன. (எ.டு) த$_4$மரகி$_3$த, புஸரகி$_3$த முதலியன. இப்பெயர்களின் முதற்பகுதியில் மதத் தொடர்புடைய சொற்களும், பிற்பகுதியில் ரகி$_3$த 'காக்கும்' என்ற விகுதியும் அமைந்திருக்கும். அழகன்குளத்தில் கிடைத்துள்ள பானை ஓட்டில் நாலே எழுத்துக்கள் எஞ்சியுள்ளபோதிலும் அவை இப்பெயர் சிங்கள-பிராகிருத மொழியிலும் சிங்கள-பிராமி எழுத்துகளிலும் உள்ளதை வருமாறு உறுதிப்படுத்துகின்றன.

1. இந்திய-பிராகிருத மொழியில் 'கி' என்ற ஒலி சிங்கள-பிராகிருதத்தில் 'கி' என்றாகி விடுகிறது. (பொதுவாக, இந்திய-பிராகிருதத்தின் இரண்டாவது, நாலாவது வர்க$_3$ எழுத்துகள் சிங்கள-பிராகிருதத்தில் மூச்சொலி இழந்து முறையே முதலாவது, மூன்றாவது வர்க$_3$ எழுத்துகளாக மாறி நிற்கின்றன.)

2. இந்திய-பிராகிருதத்தின் - ஸ என்ற ஆறாம் வேற்றுமை உருபு

   சிங்கள-பிராகிருதத்தில் - ச$_0$ என்றோ, ஹ என்றோ மாறிவிடுகிறது.

3. இந்திய-பிராகிருதக் கல்வெட்டுகளில் ச$_0$ என்ற ஒலியும் எழுத்தும் பெரும்பாலும் காணப்படுவதில்லை. பிற்கால சமஸ்கிருதக்

கல்வெட்டுகளில் இந்த எழுத்து குதிரை லாடம் போன்று வளைந்து காணப்படும். சிங்கள-பிராகிருதத்தில் ஸ என்ற ஒலி பெரும்பாலும் $ச_0$ என்று மாறிவிடும். இந்த எழுத்து இந்தியாவில் உள்ளதைப் போலல்லாது சிங்கள-பிராமியில் நேர்கோடுகளால் அமைகிறது.

தமிழகக் கடலோர ஆய்வுகளில் சிங்கள-பிராகிருத மொழியிலும் சிங்கள-பிராமி எழுத்துகளிலும் பொறித்த பானை ஓட்டுக் கீறல்கள் கிடைத்து வருகின்றன. இவற்றை அடையாளம் கண்டு சரியாகப் படித்துப் புரிந்துகொள்ள இளம் ஆய்வாளர்களுக்கு மேற்கண்ட குறிப்புகள் உதவும் என நம்புகிறேன்.

**அடிக்குறிப்புகள்**

1. Iravatham Mahadevan, "Old Sinhalese Inscriptions from Indian Ports", *Journal of the Institute of Asian Studies*, 14:1, pp.55-68, 1996.
2. Iravatham Mahadevan, *Early Tamil Epigraphy*, Harvard & Cre-A, Chennai, 2003, p.49.

# 52. அழகன்குளம் பானை ஓட்டில் எண் இலக்கங்கள்

ஐராவதம் மகாதேவன், சென்னை.

தமிழகத்தில் அகழ்வாய்வுகளில் கிடைத்துள்ள பானை ஓடுகளில் எண் இலக்கங்கள் பொறிக்கப்பட்டவை மிகவும் அரிதாகவே காணப்படுகின்றன. இதுவரை அரிக்கமேட்டில் மட்டுமே இவை கிடைத்துள்ளன. இந்நிலையில் அண்மையில் அழகன்குளத்தில் அகழ்வாய்வில் கிடைத்துள்ள ஒரு பானை ஓட்டுக் கீறல் மிகவும் முக்கியத்துவம் வாய்ந்தது ஆகும்.





இப்பானை ஓட்டில் மூன்று இலக்கங்கள் பெரிய அளவில் தெளிவாகக் கீறப்பட்டுள்ளன. பிராமி எழுத்தில் எண்களின் இலக்கங்களை வலமிருந்து இடம் நோக்கிப் படிக்க வேண்டும் என்பது விதியாகும். அதன்படி அழகன்குளத்துப் பானை ஓட்டில் உள்ள இலக்கங்கள் வருமாறு:

அ. வலப்புறம் முதல் இலக்கம் 4 ஆகும். சிலுவை உருவம் போன்ற இந்த இலக்கம் அசோகனின் கல்வெட்டுகளிலும் அரிக்கமேட்டில் ஒரு பானைக் கீறலிலும் காணப்படுகிறது.

ஆ. நடுவில் உள்ள இலக்கம் 100 ஆகும். இதன் உருவம் கோபராஜனின் ஈரான் தூண் கல்வெட்டில் காணப்படும் இலக்கத்தை ஏறத்தாழ ஒத்துள்ளது.

இ. சற்றே தள்ளி இடப்புறத்தில் காணப்படும் கடைசி இலக்கம் 8 ஆகும். இது இடம் வலமாக மாற்றிக் கீறப்பட்டுள்ளது. மற்றபடி இதன் உருவம் குஷாண மன்னர்கள் காலக் கல்வெட்டுக்களில் காணப்படும் இலக்கத்தை ஒத்துள்ளது.

முழு எண்ணையும் 4 x 100 + 8 = 408 என்று படிக்க வேண்டும். ஒரு பானை ஓட்டில் இவ்வளவு பெரிய எண் எதற்காகப் பொறிக்கப்பட்டுள்ளது என்று தெரிந்தகொள்ள சான்று எதுவுமில்லை. இதன் காலம் ஏறத்தாழ கி.பி.முதல் அல்லது இரண்டாவது நூற்றாண்டு என்று எண் இலக்கங்களின் உருவ அமைதியிலிருந்து ஒருவாறாகக் கணிக்கலாம்.

**குறிப்புகள்**

1. Shobhana Gokhale, *Indian Numerals,* Poona, 1966.
2. Iravatham Mahadevan, *Early Tamil Epigraphy*, Harvard & Cre-A, Chennai, 2003, (see p.205)

# 53. மணவூர் தீர்த்தங்கரர் சிற்பங்கள்

முத்து எத்திராசன், சென்னை.
வீரராகவன், விழுப்புரம்.
ப. பூபாலன், ராணிப்பேட்டை.
ப. வெங்கடேசன், வாலாஜாபேட்டை.

**53:1**

**இடம் :** சென்னையிலிருந்து அரக்கோணம் செல்லும் வழித் தடத்தில் அமைந்துள்ள மணவூர் சேக்கிழார் தெருவில் உள்ள பிள்ளையார் கோயில் முன்புறத்தின் இருபக்கங்களில்.

**காலம்:** *(?)*

**செய்தி:** புடைப்புச்சிற்பம். 90செமீ உயரம், 62 செமீ அகலம் கொண்ட குகையில் அம்ர்ந்து காணப்படும் தீர்த்தங்கரர் தலையின் மேல் மூன்று குடைகள் உள்ளன. தலைக்குப் பின்புறம் உள்ள வட்டம் (ஒளி மண்டிலம்) மூன்று காணப்படுகின்றன. அவை, ஆ. ஆலோகம் 2. பிரபாமூர்த்தி 3. கனப்பிரபா என்பன. இருபக்கங்களிலும் சாமரை ஏந்திய இயக்கர்கள் நின்ற வண்ணம் உள்ளனர். அமர்ந்திருக்கும் பீடத்தை சிம்மங்கள் சுமந்தபடி உள்ளன. நீலகேசி இவ்வடிவை ஆதிநாதர் என்றே கூறுகிறது.



53:2

இடம் : மேலது.

காலம்: (?)

செய்தி: அமைப்பில் மேற்சுட்டியதைப் போல இருந்தாலும் சிற்ப முறையில் வே+றுபாடு கொண்டுள்ளது. இத்தீர்த்தங்கரர் தாமரை மலர் பீடத்தில் அமர்ந்துள்ளதாகக் காட்டப்பட்டுள்ளது.

. . . . . . . . . . .

சேற லுள்ளமு மில்லையாய்த் திருமலர் மிசையடி யிடுதி
தேறுமாறென்னை நின்னைத் தேவர்ந்தேவர்க்குந் தேவா

என்று கூறப்பட்டுள்ள வரிகளில் ஆதிநாதர் தாமரை மலர் பீடத்தில் அமர்ந்துள்ளதாகக் கூறப்பட்டுள்ளதைக் காண்க. ஆகவே இவ்விரு சிற்பங்களும் நீலகேசியைப் பின்பற்றி அமைக்கப்பெற்றிருக்க வேண்டும் என்பது உறுதி.



# 54. தாண்டிக்குடி அகழாய்வு

கா. ராஜன், தஞ்சாவூர்.

தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை திண்டுக்கல் மாவட்டம், கொடைக்கானல் வட்டம், தாண்டிக்குடியில் 2004 மே மாதத்தில் அகழாய்வு மேற்கொண்டது. இந்தியத் தொல்லியல் அளவீட்டுத்துறை இவ்வகழாய்விற்கு நல்கை வழங்கியது.

இவ்வூர் மருத நதியின் இடது கரையில் கடல் மட்டத்திலிருந்து 4400 அடி உயரத்தில் அமைந்துள்ளது. கி.மு.5ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே இப்பகுதிகளில் பண்பாட்டுப் பரவல் நிகழ்ந்துள்ளதை இங்கு கிடைக்கும் தொல்லியல் எச்சங்கள் தெளிவுறுத்துகின்றன. இப்பகுதியானது சங்க காலத்தில் வாழ்ந்த குறுநில மன்னர்களான **தோன்றிக்கோன்** மற்றும் **கோடைப்பொருநன்** ஆகியோருடன் தொடர்புபடுத்தப்படுகிறது.

1928இல் மதுரை மாவட்ட ஆட்சியராக இருந்த ஆங்லேடு (Anglade) தாண்டிக்குடிப் பகுதியில் இருக்கும் சில சிதைவுற்ற கல்திட்டைகள் (dolmens) இருந்ததை ஆவணப்படுத்தியுள்ளார். கட்டுரையாசிரியர் இப்பகுதியில் மேற்கொண்ட கள ஆய்வின்போது தாண்டிக்குடியில் பாண்டிய மன்னன் குலசேகர பாண்டியனின் 12ஆம் ஆட்சியாண்டைச் (கி.பி1280) சேர்ந்த கல்வெட்டொன்று கண்டுபிடிக்கப்பட்டது. இதில் இவ்வூர் தான்றிக்குடி என்றே குறிப்பிடப்பட்டுள்ளது. "தான்றி" என்பது ஒரு மரவகையின் பெயர் (termenalia bellerica). இது இன்றும் இப்பகுதியில் அதிக அளவில் காணப்படுகின்றது. இக்கல்வெட்டு மணலூருக்கும் தாண்டிக்குடிக்கும் இடையே நிலவிய முன்பகையைத் தீர்த்து இவ்விரு ஊரார்களும் தங்களிடையே ஏற்படுத்திக்கொண்ட ஒப்பந்தத்தைப் பற்றிக் கூறுகிறது. இப்பகுதி மிளகு, ஏலக்காய் முதலியவற்றைப் பயிரிடவும் அவற்றை மேற்கத்திய நாடுகளுக்குக் குறிப்பாக ரோமநாட்டிற்கு ஏற்றுமதி செய்யவும் ஏதுவாக இருந்துள்ளது.

தாண்டிக்குடிக்கும் பொம்மகாட்டுக்கும் இடையே மருதநதியின் வலக்கரையில் 1000க்கும் மேற்பட்ட பெருங்கற்படைக்கால ஈமக்குழிகள் காணப்படுகின்றன. தாழி, பரல் உயர் பதுக்கை முறைகளை கவனத்தில் கொண்டு கல்லறைகளின் அமைப்பு, முக்கியத்துவம், காலம் இவற்றை அறிய நான்கு ஈமக்குழிகள் அகழப்பட்டன.

காப்பி வாரிய வளாகத்தின் வடக்குப் பகுதியில் உள்ள பரல் உயர் பதுக்கை அகழ்வில் வழிநடையுடன் (passage) கிழக்குப் பகுதியில் இடுதுளையும் காணப்படுகிறது. மூடுகல் (capstone) 3 டன் எடை கொண்டது. நீத்தோர் நினைவாக மேற்கொள்ளப்பட்ட சடங்குகள் பதுக்கையின் கீழ் வைக்கப்பட்ட கற்பலகையின் மேல் செய்யப்பட்டுள்ளது. 50க்கும் மேற்பட்ட

வட்ட வடிவத் தாங்கிகள், தட்டுகள், கிண்ணங்கள், நான்கு கால்களையுடைய சாடிகள் இக்குழியில் கிடைத்துள்ளன. இக்கல்லறையின் நான்கு மூலைகளிலும் நான்கு தாழிகள் புதைக்கப்பட்டிருந்தன. இத்தாழிகள் ஒன்றை ஒன்று நோக்குமாறு அமைக்கப்பட்டிருந்தன. மேற்குறிப்பிட்ட பொருட்கள் இத்தாழிகளுடன் கீழ்ப்பகுதி அல்லது பக்கவாட்டில் வைக்கப்பட்டுள்ளன. இதுபோன்று கல்லறைக்குள் நான்கு தாழிகள் வைத்து சடங்குகள் செய்யப்பட்ட முறை தமிழகத்தில் முதன்முறையாக இங்குதான் கண்டறியப்பட்டுள்ளது. வழக்கமாக வைக்கப்படும் ஈமப் பொருட்களுடன் இரும்பினாலான வாள்கள், கத்திகள் வைக்கப்பட்டிருந்தன. இவற்றுள் ஒரு வாள் இரண்டு வட்ட வடிவத் தாங்கி, ஒரு கிண்ணம் ஆகியவற்றின் மேல் வைக்கப்பட்டிருந்தது குறிப்பிடத்தக்க அம்சமாகும். இது ஏதோ ஒரு வகையில் இவ்வாளுக்கு முக்கியத்துவம் கொடுக்கப்பட்டிருப்பதைத் தெளிவுறுத்துகிறது. பொம்மகாட்டுப் பகுதியில் அகழப்பட்ட மற்றொரு ஈமக்குழியில் 350க்கும் மேற்பட்ட சூதுபவள மணிகளும், சில பளிங்குக்கல் மணிகளும் கிடைத்துள்ளன. அவை இங்கேயே தயாரிக்கப்பட்டதற்கான ஆதாரம் ஏதும் கிடைக்கப் பெறவில்லை. இதுவரை தமிழகத்தில் மேற்கொள்ளப்பட்ட அகழாய்வுகளிலேயே மிகவும் வனப்பான கட்டிடக்கலை அம்சத்தை இக்கல்லறை பெற்றுத் திகழ்வது சிறப்பானதாகும். அவ்வறைகள் அனைத்தும் வட்ட வடிவ இடுதுளைகள் மூலம் ஒன்றோடொன்று இணைக்கப்பட்டிருந்தன. சங்ககால வரலாற்றில் கீழ்ப்பழநி மலைப்பகுதி முக்கியத்துவம் பெற்றிருந்தமை இவ்வகழாய்வின் வாயிலாகத் தெரிய வருகிறது.



# 55. ஆறுமுகநேரி - ஒரு பழமையான ஊரிருக்கை

த.த. தவசிமுத்து, ஆறுமுகநேரி.

தூத்துக்குடி மாவட்டம், திருச்செந்தூர் வட்டம், ஆறுமுகநேரி மற்றும் காயல்பட்டினத்திற்கு வடக்கே உள்ள கொட்டமடைக்காடு, சிலாக்காடு ஆகிய பகுதிகளில் தொல்லெச்சங்கள் அறியப்பட்டுள்ளன. தாமிரபரணி ஆற்றின் சிறிய ஓடை ஒன்று கடலுடன் இப்பகுதியில் கலக்கிறது. இங்குள்ள மணல் மேடுகள் கடல் மட்டத்தைவிட 15 அடி உயரத்தில் காணப்பெறுகின்றன. கொட்டம், சிலாவம் (முத்துக்குளித்தல்) ஆகிய பழஞ்சொற்களில் பெயர்கள் இங்கு வழக்கிலுள்ளது குறிப்பிடத்தக்கதாகும்.

சோழர்காலக் கூரைகளில் பயன்படுத்தப்பெறும் ஓடுகள், உடைந்துபோன சுடுமண் பொம்மைகள், கூடுகள் சுமார் இரண்டு கிமீ தூரத்திற்கு மண்ணுள் பரவலாகப் புதையுண்டு கிடக்கின்றன. கோயில் மண்டபத்தில் பயன்படுத்தப்பெறும் கற்றூண்களும் உடைந்து காணப்படுகின்றன. இவ்விடத்தில் சோழர் காலத்தைச் சேர்ந்த ஐம்பொன்னாலான நடராஜர், சிவகாமி, வைஷ்ணவி சிலைகளும், பூஜைக்குரிய பொருட்களும் கிடைத்துள்ளன.

சிலாக்காடு பகுதியில் முதுமக்கள் தாழிகள், கருப்பு சிவப்பு பானை ஓடுகள், கிணறுகள், அறுக்கப்பட்ட சங்குகள், குவிந்து கிடக்கும் முத்துச் சிப்பிகள், வெளிநாட்டு பானை ஓடுகள் ஆகியவை கிடைக்கின்றன. வெளிநாட்டு மதுக்குவளையின் உடைந்த பகுதி ஒன்று குறியீட்டுடன் கண்டெடுக்கப்பட்டுள்ளது.





பாண்டி நாட்டு அரசர்களின் கயல் முத்திரை மூன்று அங்குலம் அகலம் உடைய வெள்ளைக் கல்லில் கோட்டுருவமாகக் காணப்படுகிறது. மீனின் வாய்ப்பகுதிக்கு சற்று மேலே நான்கு கோடுகள் உள்ளன. இக்கல் முத்திரையிடுவதற்குப் பயன்பட்ட கல்லாக இருக்கலாம்.



கொம்புத்துறை முதல் புன்னக்காயல் வரையுள்ள பகுதி உப்பளங்களாக இருப்பதால் இப்பகுதியில் வரலாற்றுத் தொன்மையுள்ள எந்த பொருளும் கிடைக்கவில்லை என்று கூறப்பெற்றதற்கு (*ஆவணம் : 13, பக்.143-144*) மாறாக தற்பொழுது இப்பகுதியில் மிகப்பெரிய ஊரிருக்கையின் எச்சங்கள் கிடைத்துள்ளமை குறிப்பிடத்தக்கதாகும்.

# 56. இலங்கைத் தமிழ்ச் சாசன ஆராய்ச்சியும் கந்தளாய்ச் சாசனமும்*

ப. புஷ்பரட்ணம், இலங்கை.

தமிழகத்தின் முதன்மைச் சாசனவியலாளர்களில் ஒருவராக இருந்த அமரர் தி.நா.சுப்பிரமணியம் அவர்களின் பெயரில் அமைந்துள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்துவதையிட்டு நான் மிக்க மகிழ்ச்சி அடைகிறேன். அந்த வாய்ப்பை எனக்களித்த தமிழகத் தொல்லியல் கழகத்தின் அனைத்து உறுப்பினர்களுக்கும் முதற்கண் என் நன்றிகள்.

தமிழகத்தின் பண்டைய வரலாற்றை மீள் கட்டமைப்பதில் கடந்த நூற்றாண்டில் பல்கலைக்கழகத்திற்கு வெளியேயுள்ள பல அறிஞர்கள் பாரிய பங்களிப்பை ஆற்றியுள்ளனர். அவர்களுள் தமிழகக் கல்வெட்டாராய்ச்சியில் தனக்கென முத்திரை பதித்தவர்களுள் அமரர் தி.நா.சுப்பிரமணியன் அவர்களுக்குத் தனியிடம் உண்டு. இவருக்கு ஐந்து ஆண்டுகளுக்கு முன்னரே ஏ.வி. பர்ணல் என்ற மேற்கு நாட்டவரும், து.அ. கோபிநாதராவ் என்ற தென்னிந்தியரும் தென்னக வரிவடிவம் பற்றி ஆங்கிலத்தில் இரு நூல்களை எழுதியுள்ளனர். ஆயினும் அமரரால் 1938இல் எழுதி வெளியிடப்பட்ட "பண்டைய தமிழ் எழுத்துக்கள்" என்னும் தமிழ் நூல் முன்னையவர்களின் நூல்களைக் காட்டிலும் பல காரணங்களுக்காக விதந்து குறிப்பிடத்தக்கது. இன்றும் தமிழகத்தில் தொல்வரிவடிவம் பற்றி ஆராய முற்படும் ஒருவருக்கு இவரின் நூலே அரிச்சுவடாக இருப்பது அதற்குரிய காரணங்களில் ஒன்றாகக் குறிப்பிடலாம். அந்த அளவிற்கு அந்நூலின் மூலம் அவர் தமிழியல் உலகைத் தமக்கு கடமைப்படுத்தி விட்டார் என்றே கூறவேண்டும்.

1930ஆம் ஆண்டளவில் தமிழகக் கல்வெட்டுகள் பற்றி எழுதத் தொடங்கிய அவர் தனது அறுபத்தெட்டாவது வயதில் (30.1.1972) அகால மரணத்தை தழுவும் வரை தன் ஆராய்ச்சியிலும், எழுத்திலும் அக்கால ஆய்வாளர்களை ஆட்டிப்படைத்த மனக்கிலேசங்களுக்கும், துவேசங்களுக்கும் அப்பாற்பட்டவராக நின்று தனது பணியைத் திறம்பட நடாத்திய பெருமைக்குரியவர். அத்தகைய பெருமகனாரை நினைவுபடுத்தித் தமிழகத்தின் இன்றைய முதன்மைக் கல்வெட்டாய்வாளர் ஐராவதம் மகாதேவன் அவர்கள் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவை நான் நிகழ்த்துவது எனக்குப் பெருமையளிக்கிறது.

---

*திரு. ஐராவதம் மகாதேவன், இ.ஆ.ப. (ஓய்வு) அவர்கள் நிறுவியுள்ள தி.நா.சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவு எண்.5, இடம்: வேலூர், நாள்:19.07.2003.

## அறிமுகம்

இந்தியாவைப் போல் இலங்கையிலும் கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து கல், பொன், செம்பு, மட்பாண்டம் போன்ற பொருட்களில் சாசனங்கள் பொறிக்கும் மரபு தோற்றம் பெற்றதற்குப் பல சான்றுகள் காணப்படுகின்றன. அவற்றுள் 2000க்கு மேற்பட்ட பிராமிச் சாசனங்கள் கி.பி.5ஆம் நூற்றாண்டுக்கு முற்பட்டவையாக அடையாளம் காணப்பட்டுள்ளன (Paranavitana 1970, 1983). இவ்வளவு எண்ணிக்கை உடைய சாசனங்கள் இலங்கையைத் தவிர தென்னாசியாவின் ஏனைய வட்டாரங்களில் இதுவரை கண்டுபிடிக்கப் பட்டதாகத் தெரியவில்லை. இச்சாசனங்கள் தமிழகம் தவிர சமகாலத் தென்னாசியச் சாசனங்களைப் போல் பிராகிருத மொழியில் எழுதப் பட்டாலும், அவற்றுள் பல சாசனங்களில் தமிழ்ப் பிராமி எழுத்தும், தமிழ்ப் பெயர்களும் காணப்படுகின்றன. இவை தமிழகத்தைப் போல் தமிழைத் தாய்மொழியாகக் கொண்ட மக்கள் பண்டு தொட்டு இலங்கையில் வாழ்ந்ததற்குச் சான்றாக அமைகின்றன. ஆயினும் தமிழகத்தைப் போல் முற்றும் தமிழ் மொழியில் எழுதப்பட்ட ஒரு பிராமிக் கற்சாசனம்தானும் இதுவரை கண்டுபிடிக்கப்படவில்லை.

இப்பிராமிச் சாசனங்களைத் தொடர்ந்து கி.பி.8-9ஆம் நூற்றாண்டுக்கு உரியதாகக் கருதக்கூடிய தமிழ், சிங்கள, சமஸ்கிருதச் சாசனங்கள் சில இலங்கையில் கிடைத்துள்ளன. ஆயினும் அவற்றின் எண்ணிக்கை மற்றைய காலப்பகுதிக்குரிய சாசனங்களுடன் ஒப்பிடுகையில் மிகக் குறைவாகும். கி.பி. 10ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழ், சிங்கள மன்னர்களின் ஆட்சி மாறி மாறி இலங்கையில் ஏற்பட்டதாலும், தமிழகத் தொடர்பும், செல்வாக்கும் முன்னரைக் காட்டிலும் அதிகரித்ததாலும் தமிழ்ச் சாசனங்கள் வகையிலும், தொகையிலும் அதிகரித்துக் காணப்படுகின்றன. கி.பி.16ஆம் நூற்றாண்டில் ஐரோப்பியர் ஆட்சி ஏற்பட்டதைத் தொடர்ந்து இவற்றின் எண்ணிக்கை படிப்படியாகக் குறைவடைந்து செல்கின்றன.

## தமிழ்ச் சாசன ஆராய்ச்சி

இலங்கையில் இதுவரை 200க்கு உட்பட்ட தமிழ்ச் சாசனங்களே கண்டுபிடிக்கப்பட்டுள்ளன. இந்த எண்ணிக்கை சமகாலத் தமிழகத்தோடு ஒப்பிடுகையில் மிக அரிது என்றே குறிப்பிடலாம். இதனால் பண்டைய தமிழக வரலாறு பற்றிய ஆய்வில் சாசனங்கள் பெற்று வருவது போன்ற முக்கியத்துவத்தை இலங்கைத் தமிழர் வரலாறு பற்றிய ஆய்வில் இதுவரை பெறத் தவறிவிட்டன எனக் கூறலாம். இதற்குத் தமிழகத்தோடு ஒப்பிட்டு இலங்கையில் தமிழ்ச் சாசனங்கள் அதிகம் வெளியிடப்படவில்லை என்ற கருத்தை ஆய்வாளர்கள் சிலர் முன்வைத்துள்ளனர். தமிழகத்தோடு ஒப்பிடுகையில் இலங்கையில் வெளியிடப்பட்ட தமிழ்ச் சாசனங்களின் எண்ணிக்கை குறைவாகவே இருக்கும் என்பதில் ஐயமில்லை. ஆயினும் பண்டைய நாளில் தமிழர்கள் வாழ்ந்த பல இடங்கள் இன்று மக்கள் நடமாற்றமற்ற காடுகளாகவும், பயன்படுத்த முடியாத நிலங்களாகவும்

உள்ளன. பிரித்தானியர் ஆட்சியில் இவ்விடங்களில் கடமையாற்றிய இராணுவ அதிகாரிகள், பண்டைய கால நீர்ப்பாசன முறை பற்றி ஆராய்ந்த பொறியியலாளர்கள் தமது கடமையின்போது பல கல்வெட்டுகளை, விக்கிரகங்களை, நாணயங்களைக் கண்டுபிடித்ததாகத் தமது அறிக்கைகளில் குறிப்பிட்டுள்ளனர் (Parker 1909, Lewis 1917). ஆயினும் அந்த இடங்கள் பிற்காலத்தில் அரச மட்டத்திலோ, அல்லது தனிப்பட்டவர்களாகவோ ஆய்வுக்கு உட்படுத்தியதாகத் தெரியவில்லை. அந்த இடங்களில் எல்லாம் திட்டமிட்டு ஆய்வுகள் மேற்கொள்ளப்படுமாயின் பல தமிழ்ச் சாசனங்களைக் கண்டுபிடிக்கலாம் என்ற நம்பிக்கை இப்போது ஏற்பட்டு வருகிறது.

ஒப்பீட்டடிப்படையில் இலங்கையில் கிடைத்த தமிழ்ச் சாசனங்கள் எண்ணிக்கையில் குறைவாக இருப்பினும் அவை பற்றிய ஆய்வு தமிழகத்திற்குச் சமனான காலத்தில் இருந்து மேற்கொள்ளபட்டு வந்துள்ளதை அவதானிக்க முடிகிறது. பதினாறாம் நூற்றாண்டிலிருந்து இலங்கை ஐரோப்பியர் ஆட்சிக்கு உட்பட்டபோது அவர்கள் கடைப்பிடித்த கலையழிவுக் கொள்கையால் இலங்கையில் இருந்த பல இந்து ஆலயங்கள் அழிக்கப்பட்டன. அவ்வாறு அழிக்கப்பட்ட ஆலயங்களில் பக்தி இயக்கத்தைத் தலைமை ஏற்று நடாத்திய நாயன்மாரால் போற்றிப் பாடப்பட்ட கிழக்கிலங்கையில் இருந்த திருக்கோணேஸ்வரமும் ஒன்றாகும். கடலினுள் மூழ்குண்டிருக்கும் அவ்வாலயத்தின் கட்டிடச் சிதைவுகளைப் பின்னர் ஆராய்ந்தபோது அவற்றினுள் சில தமிழ்க் கல்வெட்டுக்களும் காணப்பட்டன. அவற்றின் முக்கியத்துவத்தை உணர்ந்த அப்போதைய தளபதி கொன்ஸ்ரான் தீஸா நொரங்சே (Contantine De Saa Nornce) அவ்வூர் மக்களது உதவியோடு அச்சாசனங்களை ஓரளவிற்கு மொழிபெயர்த்து ஒல்லாந்து நாட்டுக்கு அனுப்பி வைத்தார். இம்முயற்சியே இலங்கைத் தமிழ்ச்சாசன ஆராய்ச்சியின் தொடக்ககாலம் எனக் கூறப்படுகிறது. இருப்பினும் அறிவியல் ரீதியான ஆய்வு 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் குறிப்பாக 1875ஆம் ஆண்டின் பின்னரே ஏற்பட்டதெனக் கூறலாம். இக்காலப் பகுதியில் இருந்து சிங்களச் சாசனங்களை ஆராய்ந்தறிவதில் அக்கறை காட்டிய பலரும் அவற்றோடு தமிழ்ச் சாசனங்களை ஆராய்வதிலும் அக்கறை காட்டினர். அவர்களுள் பிளாண்ட், வலூல், கியூச் நெவில், பெல், கிருஷ்ணசாஸ்திரி, கொட்றிங்ரன், முதலியார் இராசநாயகம் போன்றவர்களைக் குறிப்பிடலாம். இவர்களுள் இலங்கைத் தொல்லியற் திணைக்களப் பணிப்பாளராக இருந்த எச்.சி.பி. பெல்லின் (H.C.P.Bell) முயற்சி சிறப்பாகக் குறிப்பிடத்தக்கது. அவர் தென்னிந்தியச் சாசனவியிலாளரான கிருஷ்ண சாஸ்திரியுடன் ஏற்படுத்திக் கொண்ட தொடர்பின் காரணமாக அவர் உதவியால் இலங்கையில் கிடைத்த தமிழ்ச் சாசனங்களும் வாசித்தறியப்பட வாய்ப்பேற்பட்டது. குறிப்பாக 1911-12 காலப்பகுதியில் இலங்கையில் கண்டுபிடிக்கப்பட்ட நாற்பத்தெட்டு தமிழ்ச் சாசனங்கள் பற்றி இலங்கைத் தொல்லியற் திணைக்கள ஆய்வு அறிக்கையில் வெளிவருவதற்கு பெல்லின் இக்கூட்டு முயற்சி ஒரு முக்கிய காரணமாக இருந்தது (பத்மநாதன் 1971-72:14).

அத்துடன் அவற்றில் பதினெட்டுச் சாசனங்கள் பற்றி கிருஷ்ணசாஸ்திரி தென்னிந்தியக் கோயிற் சாசனங்கள் தொகுதி 4இல் பிரசுரித்திருந்தார்.

இலங்கைத் தமிழ்ச் சாசனங்களை அறிவியல் பூர்வமாக இலங்கை வரலாற்றைப் பின்னணியாகக் கொண்டு ஆராய முற்பட்டவராகப் பேராசிரியர் பரணவிதானா குறிப்பிடப்படுகிறார். ஏராளமான சிங்களச் சாசனங்களைப் பதிப்பித்த அவர் தமிழ்ச் சாசனங்களையும் பதிப்பிக்க முற்பட்டதன் மூலம் தமிழ்ச் சாசன ஆராய்ச்சியின் இரண்டாவது கட்டத்தை ஆரம்பித்து வைத்தார் என்ற சிறப்பு அவருக்கு உண்டு. 1980 களில் பேராசிரியர் கணபதிப்பிள்ளை மூன்று தமிழ்ச் சாசனங்களைப் பதிப்பித்ததன் மூலம் இத்துறையில் பிரவேசித்தார். இவரின் பணிகள் இத்துடன் நின்றுவிட்டாலும் பிற்காலத்தில் பலரும் இத்துறையில் ஆர்வம் காட்டுவதற்கு இவரது முயற்சி ஒரு காரணம் என்ற வகையில் இலங்கைத் தமிழ்ச் சாசன ஆராய்ச்சியில் அவருக்குத் தனியிடம் உண்டு.

1970களின் பின்னர் பேராதனை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகங்களின் வரலாறு, தமிழ்த் துறைகளில் கடமையாற்றிய கே. இந்திரபாலா, எ.வேலுப்பிள்ளை, சி. பத்மநாதன், குணசிங்கம் போன்றவர்கள் இலங்கைத் தமிழ்ச் சாசன ஆராய்ச்சியில் குறிப்பிடத்தக்க பங்களிப்பைச் செய்துள்ளனர் எனக் கூறலாம். இக்காலத்தில் இருந்தே இச்சாசனங்களை அடிப்படையாகக் கொண்ட விரிவான தனி நூல்களும் (Veluppillai, 1971; 1980, குணசிங்கம் 1973), கட்டுரைகளும் (இந்திரபாலா 1968-69, பத்மநாதன் 1971-72) வெளிவந்ததைக் காணமுடிகிறது. இவர்களில் சிலருக்குப் புதிய தமிழ்ச் சாசனங்களைக் கண்டுபிடித்த பெருமை இல்லாவிட்டாலும், பிறர் கண்டுபிடித்த சாசனங்களைச் சரியாக வாசித்து இலங்கை வரலாற்றுப் பின்புலத்தில் அச்சாசனங்களுக்குச் சரியான விளக்கம் கொடுத்தவர்கள் என்ற பெருமையுண்டு. இருப்பினும் 1997களின் பின்னர் தமிழ்ச் சாசனவியலில் புலமையுடைய தமிழகத்தை சேர்ந்த எ. சுப்பராயலு, ப. சண்முகம், யப்பான் நாட்டைச் சேர்ந்த நொபொரு கராசிமா, இலங்கையைச் சேர்ந்த சி.பத்மநாதன் போன்றோர் இணைந்து இலங்கையில் மேற்கொண்ட ஆய்வுகளில் புதிய சில தமிழ்ச் சாசனங்கள் இனங்காணப்பட்டிருப்பதுடன், முன்னைய காலங்களில் கண்டுபிடிக்கப்பட்டு விளக்கக் குறிப்புகளுடன் பதிப்பிக்கப்பட்ட சில தமிழ்ச் சாசனங்களின் காலம், கருத்து, வாசிப்பு, விளக்கம் என்பன மீள் வாசிப்புக்கு உட்படுத்தப்பட வேண்டும் என்ற ஆணித்தரமான கருத்துச் சூழலும் உருவாகியுள்ளது. இதுவே இலங்கைத் தமிழ்ச் சாசனவியல் பற்றிய ஆய்வின் இன்றைய நிலையாகும். இந்த அடிப்படையில் இவ் அறக்கட்டளைச் சொற்பொழிவுக்கு கந்தளாயில் இக்கட்டுரை ஆசிரியர் கண்டுபிடித்த தமிழ்க் கல்வெட்டு கருப்பொருளாக எடுத்துக் கொள்ளப்பட்டுள்ளது.

**கந்தளாயின் பூர்விகமும், தமிழ்ச் சாசனங்களும்**

கிழக்கிலங்கையில் தமிழர்கள் பாரம்பரியமாக வாழ்ந்து வரும் கிராமங்களில் கந்தளாயும் ஒன்றாகும். இக்கிராமம் திருகோணமலை நகருக்கு

தென்கிழக்கே எட்டு மைல் தொலைவில் உள்ள பேராறு என்ற இடத்தை அடுத்து அமைந்துள்ளது. 1950 அளவில் அரசாங்கத்தால் புதிய குடியேற்றத் திட்டம் ஏற்பட்டதைத் தொடர்ந்து தற்காலத்தில் இவ்வட்டாரத்தில் சிங்கள, முஸ்லீம் குடியிருப்புக்களின் எண்ணிக்கை அதிகரித்துக் காணப்படுகின்றன. ஆயினும் பண்டு தொட்டு தமிழ் மக்களே இங்கு பெரும்பான்மையாக வாழ்ந்து வருகின்றனர் என்பதை இக்கிராமம் தொடர்பாகக் கிடைத்து வரும் தொல்லியல், இலக்கியச் சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. அவற்றுள் தமிழ்ச் சாசனங்களுக்கு முக்கிய பங்குண்டு. அவற்றின் வரலாற்று முக்கியத்துவத்தை இவ்விடத்தில் எடுத்துக் கூறுவதற்கு முன்பாக இக்கிராமம் அமைந்துள்ள வட்டாரத்தின் பழமை பற்றிய சான்றுகள் சிலவற்றை எடுத்துக் கூறுவது பொருத்தமாகும்.

இலங்கையின் ஏனைய பல இடங்களைப் போல் கந்தளாய் அமைந்துள்ள வட்டாரத்தின் ஆரம்பகாலக் குடியிருப்புக்கள் பெருங் கற்காலப் பண்பாட்டுக்குரியவை என்பதை இலங்காத்துறை போன்ற இடங்களில் கண்டுபிடிக்கப்பட்டுள்ள சான்றுகள் உறுதிப்படுத்துகின்றன. இப்பண்பாட்டு வழிவந்த மக்களில் பெரும்பான்மையோர் தமிழைத் தாய் மொழியாகக் கொண்டிருந்தனர் என்பதை கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து இவ்வட்டாரத்தில் பயன்படுத்தப்பட்டு வந்த பிராமிக் கல்வெட்டுகள் உறுதிப்படுத்துகின்றன (Paranavitana 1970, 1983). இக்கல்வெட்டுக்களில் தமிழ்மொழிக்குரிய சிறப்பெழுத்துக்கள் பயன்படுத்தப்பட்டிருப்பதுடன், ஆய், வேள், பருமக (பெருமகன்), ஊதிய (உதியன்) போன்ற தமிழ்ப் பெயர்களும் பரவலாகப் பயன்படுத்தப்பட்டுள்ளன (புஷ்பரட்ணம் 2001). அவற்றுள் வேள், பருமகன் போன்ற பட்டப்பெயர்கள் பயன்படுத்தப் பட்டுள்ளமை கி.மு.3ஆம் நூற்றாண்டிலிருந்து தமிழரிடையே இனக்குழுத் தலைவர்கள் அல்லது சிற்றரசர்களின் ஆட்சி தோன்றியிருக்கலாம் என்பதைக் கோடிட்டுக் காட்டுகின்றன. சேருவில் என்ற இடத்தில் இருந்து கிடைத்த பிராமிக் கல்வெட்டில் சோழ (சுட) என்ற பெயருடன் தமிழ்ச் சோழ (தமிட சுட) என்ற பெயரும் இடம் பெற்றுள்ளதாக சுதர்சன் செனிவரட்னா குறிப்பிடுகிறார் (Seneviratne 1984). இந்த வேறுபாடு சோழ என்ற பெயருடன் இவ்வட்டாரத்தில் வாழ்ந்த தமிழரில் இருந்து தமிழ் நாட்டுச் சோழரை வேறுபடுத்திக் காட்டுவதற்காகப் பயன்படுத்தி இருக்கலாம்.

சோழர் ஆட்சியில் இராசராசப் பெரும்பள்ளி எனப் பெயர் மாற்றம் பெற்ற இவ்வட்டாரத்தில் இருந்த பௌத்த விகாரை பண்டைய நாளில் வெல்கம் விகாரை எனப் பெயர் பெற்றிருந்தது. இவ்விகாரையுடன் தொடர்புடைய கி.பி.முதல் நூற்றாண்டுக்குரிய பிராமிக் கல்வெட்டொன்று கிடைத்துள்ளது. அக்கல்வெட்டில் பிராகிருத மொழியில் எழுதப்பட வேண்டிய பல சொற்கள் தமிழ் மயப்படுத்தப்பட்டுள்ளதைக் காணமுடிகிறது. இதன் முக்கியத்துவத்தை ஆராய்ந்த பரணவிதான இக்கல்வெட்டை எழுதியவர் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டிருக்க வேண்டும் எனக் குறிப்பிடுகிறார் (Paranavitana 1983). இது பண்டைய நாளில் பௌத்த

மதத்திற்கும் தமிழருக்கும் உள்ள உறவுக்கு ஒரு சான்றாக அமைகிறது. பௌத்த மதத்தை முதன்மைப்படுத்திக் கூறும் மகாவம்சம் என்ற பாளி நூல் கி.பி.4ஆம் நூற்றாண்டில் அநுராதபுரத்தில் ஆட்சிபுரிந்த மகாசேனன் என்ற சிங்கள மன்னன் கிழக்கிலங்கையில் வழிபடப்பட்டு வந்த மூன்று சிவாலயங்களை இடித்து அவ்விடங்களில் பௌத்த விகாரை கட்டியதாகக் கூறுகிறது. அவ்வாறு அழிக்கப்பட்ட ஆலயங்களில் ஒன்று கந்தளாயில் அமைந்திருந்தது (Mahavamsa Ch.XXXVII:40-41).

பக்தி இயக்கத்தின் தோற்றத்தை தமிழகத்தில் ஏற்பட்ட அரசியல் மாறுதலும், வணிகக் கணங்களின் எழுச்சியும் சமகால இலங்கையைப் பல நிலையிலும் பாதித்ததை வரலாற்று ரீதியாகக் காணமுடிகிறது. இக்காலம் தொட்டு தமிழகத்திலிருந்து மேற்கொள்ளப்பட்ட படையெடுப்புக்களுக்கு எல்லாம் தமிழர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த இடங்களே முக்கிய தளங்களாக இருந்தன (Silwa 1981). அவற்றுள் கந்தளாய்க் கிராமம் அமைந்துள்ள வட்டாரமும் ஒன்றாகும். பக்தி இயக்கத்தைத் தலைமையேற்று நடாத்திய நாயன்மார்கள் தமிழகத்தை அடுத்து இலங்கையில் உள்ள இரு சிவாலயங்களையே பெரிதும் போற்றிப் பாடியுள்ளனர். அவற்றுள் ஒன்றான திருக்கோணேஸ்வரம் கந்தளாய் வட்டாரத்திற்குள்ளேயே அமைந்துள்ளது. இக்காலத்தில் தமிழக அரசியல், பண்பாட்டுச் செல்வாக்கு அதிகரித்து இருந்ததைச் சமகாலப் பாளி இலக்கியங்கள் மட்டுமன்றி பல்லவர் கால கிரந்தச் சாசனம், நாணயங்கள், இந்து விக்கிரகங்கள் என்பனவும் உறுதிப்படுத்துகின்றன (குணசிங்கம் 1973).

கி.பி.993இல் இலங்கை சோழரால் கைப்பற்றப்பட்டதைத் தொடர்ந்து பொலநறுவை சோழரின் தலைநகராக மாற்றப்பட்டது. ஆயினும் அவர்களின் அரசியல், இராணுவ, வர்த்தக நடவடிக்கைகளின் முக்கிய மையமாகக் கந்தளாய் அமைந்துள்ள திருகோணமலை மாவட்டமே விளங்கியது (Pathmanathan 1974). 1023இல் முதலாம் இராஜேந்திர சோழன் தென்கிழக்காசியாவில் உள்ள கடாரத்தின் மீது படையெடுத்தபோது அவனுக்குரிய படைப்பிரிவு ஒன்று திருகோணமலையில் இருந்தே சென்றிருக்க வேண்டும் என கே.ஏ. நீலகண்ட சாஸ்திரி கருதுகிறார். அந்த அளவிற்கு சோழர் ஆட்சியில் இவ்வட்டாரம் சிறப்புப் பெற்றிருந்தது. தமிழகத்தில் சோழர் பின்பற்றிய மண்டலம், வளநாடு, நாடு, பிரமதேயம், ஊர், சபை போன்ற நிர்வாக அலகுகள் சமகால இலங்கையிலும் பின்பற்றப்பட்டதென்பதற்கு இவ்வட்டாரத்தில் இருந்தே அதிக சான்றுகள் கிடைத்துள்ளன (Pathmanathan 1974). இலங்கையில் கிடைத்த150 தமிழ்ச் சாசனங்களில் பெரும்பாலானவை இவ்வட்டாரத்தில் இருந்தே கண்டு பிடிக்கப்பட்டுள்ளன. அவற்றுள் முப்பது சோழர் காலக் கல்வெட்டுகள் கந்தளாயிலும் அதைச் சுற்றியுள்ள இடங்களில் இருந்தும் கிடைத்துள்ளமை சிறப்பாகக் குறிப்பிடத்தக்கன. சோழர் ஆட்சி 1070 இல் முடிந்து சிங்கள மன்னர்களது ஆட்சி பொலநறுவையில் ஏற்பட்டபோதும் தமிழரின் செல்வாக்கு அரசியலிலும், வர்த்தகத்திலும், பண்பாட்டிலும் குறைய

வில்லை. சோழர் காலத்தில் செல்வாக்குப் பெற்றிருந்த வேளைக்காரப் படைப்பிரிவினரே தொடர்ந்தும் சிங்கள மன்னர் ஆட்சியில் நாட்டையும், பௌத்த சங்கத்தையும் பாதுகாக்கும் பொறுப்பை ஏற்றிருந்தனர். இதனால் விஜயபாகு, பராக்கிரமபாகு, விக்கிரம்பாகு, கஜபாகு போன்ற மன்னர்கள் சோழர் ஏற்படுத்திய இந்து ஆலயங்களைத் தொடர்ந்து பாதுகாத்து அதற்கு மானியங்கள் வழங்கியதுடன், தமிழர்கள் பெரும்பான்மையாக வாழ்ந்த இடங்களுடன் தமது அரசியல், வர்த்தகத் தொடர்புகளைத் தமிழிலேயே மேற்கொண்டிருந்தனர். இதற்கு அச்சிங்கள மன்னர்கள் பொறிப்பித்த தமிழ் கல்வெட்டுக்களே சிறந்த சான்றாகும். அவற்றுள் எண்ணிக்கையில் அதிக சாசனங்கள் கிடைத்த இடமாகக் கந்தளாய் விளங்குகிறது.

கி.பி.1215இன் பின்னர் தமிழருக்குச் சார்பான அரசு ஒன்று வட இலங்கையில் கலிங்கமாகன், சாகவன் தலைமையில் தோன்றியதை சமகால வரலாற்றைக் கூறும் சூளவம்சம் என்ற பாளி நூல் சூசகமாகத் தெரிவிக்கிறது. இந்த அரசின் தலைநகர் எது என்பதை அந்நூல் குறிப்பிடாவிட்டாலும் அந்த அரசுக்குரிய கோட்டைகள், இராணுவ மையங்கள் அமைந்திருந்த இடங்கள் பற்றி விரிவாகக் கூறுகிறது. அவற்றுள் கந்தளாயும், அவ்வட்டாரத்திற்குரிய திருகோணமலையும், பதவியாவையும் முக்கியப்படுத்திக் குறிப்பிடப் பட்டுள்ளன (Culavamasa Ch.82). இக்கூற்று முற்றிலும் உண்மை என்பதை தமிழ்நாட்டில் புதுக்கோட்டை மாவட்டத்தில் உள்ள பாண்டியரது 1262 ஆம் ஆண்டுக்குரிய குடுமியான்மலைச் சாசனம் உறுதிப்படுத்துகிறது. இச்சாசனத்தின்படி இக்காலத்தில் இலங்கையில் இரு அரசுகள் இருந்தமையும், சிங்கள மன்னனது வேண்டுதலின் பேரில் வட இலங்கையில் ஆட்சிபுரிந்த சாகவனைப் பாண்டியப் படை கொன்று அவன் மைந்தனை ஆட்சியில் அமர்த்தியமை தெரிகிறது (*IPS*:653). இச்சாசனத்தில் இருந்து அறியப்படும் இன்னொரு உண்மை இந்த அரசுக்குரிய முக்கிய தலைநகரங்களாக கந்தளாய் அமைந்துள்ள திருகோணமலையும், திரிகூடகிரியும் குறிப்பிடப்பட்டிருப்பதாகும். இவற்றில் இருந்து 13ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் யாழ்ப்பாணத்தில் நல்லூரைத் தலைநகராகக் கொண்ட தமிழ் அரசு தோன்றுவதற்கு முன்னர் கந்தளாய் உள்ளிட்ட திருகோணமலையில் ஒரு அரசு அல்லது அரசுக்குரிய முக்கிய தலைநகரங்கள் இருந்திருக்கலாம் என்பது உறுதியாகிறது.

இத்தகைய ஒரு வரலாற்றுப் பின்புலம்தான் இன்று கிராமம் என்ற பெயரில் அழைக்கப்படும் கந்தளாயில் இருந்து பண்டைய காலத்தைச் சேர்ந்த தமிழ்க் கல்வெட்டுக்கள் கண்டுபிடிக்கக் காரணமாகும். அவற்றுள் ஒன்று சோழர் காலத்திற்கு உரியது. அது சமகாலத் தமிழகச் சாசன மரபை ஒத்த நிலையில் தமிழிலும், கிரந்தத்திலும் எழுதப்பட்டுள்ளது. இரண்டு பாகங்களைக் கொண்ட இக்கல்வெட்டின் மேற்பாகம் தெளிவாக வாசிக்கப்பட்ட அளவிற்கு அதன் கீழ்ப்பாகம் இதுவரை வாசிக்கப்படவில்லை. கி.பி.11ஆம் நூற்றாண்டுக்குரிய இச்சாசனத்தின் திகதி "கோ ஸ்ரீ சங்கவர்மரான உடையார் சோழ இலங்கேசுவரத் தேவருடைய

பத்தாவது ஆட்சியாண்டு" என்று குறிப்பிடப்பட்டுள்ளதால் இந்த இலங்கேஸ்வரன் யார் என்பதும், அவனுக்கு எப்போது முடிசூட்டு விழா நடந்தது என்பது பற்றியும் அறியமுடியவில்லை. ஆனால் சோழரின் நேரடி ஆட்சி கி.பி.993க்கும் 1070க்கும் இடைப்பட்ட காலத்தில் நடந்ததால் அக்காலத்தில் சோழப்பிரதிநிதியாக அவன் இலங்கையில் ஆட்சி புரிந்திருக்கலாம் என்ற கருத்து முன்வைக்கப்பட்டுள்ளது (இந்திரபாலா 1974). இச்சாசனத்தில் அக்காலத்தில் கந்தளாயில் இயங்கிய சமூக நிறுவனம் பற்றிய செய்திகள் காணப்படுகின்றன. இச்சோழ இலங்கேச்வரன் ஆட்சி பற்றிய இன்னொரு சாசனம் இதே மாவட்டத்தில் மானாங்கேணி என்ற இடத்தில் இருந்தும் கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

இங்கு கிடைத்த இரண்டாவது தமிழ்ச் சாசனம் முதலாம் விஜயபாகுவின் (1079-1110) 42வது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டது. இச்சாசனத்தில் நங்கைச் சானி என்னும் விதவைப் பிராமணப் பெண் தனது கணவனின் புண்ணியத்திற்காக இங்குள்ள கோவிலுக்குத் தானம் வழங்கி, அதை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பை வலங்கை வேளைக்காரப் படையிடம் ஒப்படைத்ததையும் கூறிச் செல்கிறது (பத்மநாதன் 2003:28). மூன்றாவது சாசனம் பொலநறுவையில் ஆட்சிபுரிந்த கஜபாகு மன்னனின் ஆதரவை கந்தளாய் பிரதேசம் பெற்றிருந்ததை உறுதிப்படுத்துகின்றன.

**அண்மையில் கந்தளாயில் கண்டுபிடித்த தமிழ்ச் சாசனம்**

மேற்சுட்டிய சாசனங்கள் கண்டெடுக்கப்பட்ட பேராற்றை அடுத்துள்ள சிவன் ஆலயத்திற்குச் சென்றபோது முப்பது ஆண்டுகளுக்கு முன்னர் கண்டுபிடிக்கப்பட்ட சாசனங்கள் உரிய முறையில் பாதுக்காக்கப்படாது உடைந்த நிலையில் மரத்தின் கீழ் குவிக்கப்பட்ட கற்களோடு கற்களாகவே காணப்பட்டன. மேலும், இக்குவியலில் மண்ணுக்குள் புதையுண்ட நிலையில் சிவலிங்கமும், உடைந்த நிலையில் பல கற்சிலைகளும், கட்டிடத் தூண்களும் கலந்து காணப்பட்டன. இதுபோன்று பல இடங்களில் தொன்மைச் சான்றுகள் குவிந்து கிடந்ததைக் காணமுடிந்தது. இதில் விநாயகர், அம்மன், துர்க்கை, ஆவுடை, சிவலிங்கம் போன்ற சிலைகளும், கலை வேலைப்பாடுடன் கூடிய ஆலயத்தூண்களும் காணப்பட்டன. குவிக்கப்பட்ட கற்குவியலுக்குள் அச்சாசனங்கள் வெளியே தெரியுமாறு காணப்பட்டதால் அக்குவியலுக்கு அடியில் வேறு ஏதாவது சாசனங்கள் இருக்கலாம் என்ற நம்பிக்கையை ஏற்படுத்தியது. அதன் அடிப்படையில் ஏற்கெனவே வாசிக்கப்பட்ட கற்களைத் தனியொரு இடத்தில் எடுத்து வைத்துவிட்டு ஏனைய கற்களை ஒவ்வொன்றாகத் துப்புரவு செய்து பார்த்தோம். அப்போது கற்குவியலுக்கு அடியில் மண்ணுள் புதையுண்டு உடைந்த நிலையில் மேலும் பல கற்தூண்கள் காணப்பட்டன. அவற்றுள் இரண்டு துண்டுகளாக உடைந்த நிலையில் ஒரு புதிய கல்வெட்டு இருந்தமை கண்டுபிடிக்கப்பட்டது. இகல்வெட்டின் நீளம் ஐந்தடி; அகலம் இரண்டடி ஆகும். கல்வெட்டில் எழுத்துக்கள் பொறிக்கப்பட்ட பாகம் முழுமையான

தாகவும், எழுத்துக்கள் தெளிவானதாகவும் காணப்படுகின்றன. தமிழினையும் ஆங்காங்கே கிரந்த எழுத்துக்களையும் கொண்ட இச்சாசனம் எட்டு வரிகளில் எழுதப்பட்டுள்ளது. பொலநறுவையில் ஆட்சிபுரிந்த "ஜயபாகு" என்ற மன்னனது 35வது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்ட இச்சாசனம் விஜயராஜசதுர்வேதிமங்கலம் என்ற பெயரில் அழைக்கப்பட்ட கந்தளாயில் அமைக்கப்பட்டிருந்த விஜயராஜேச்ᵤவரம் என்ற ஆலயத்திற்கு அமுது படைப்பதற்காக 8000 காசுகள் தானமாகக் கொடுக்கப்பட்ட செய்தியைக் கூறுகிறது (புஷ்பரட்ணம் 19.01.2003).

1 ஸ்வஸ்தி ஸ்ரீ கோ அபய
2 சலாமேக பர்ம்மரான சக்ர
3 வத்தி ஸ்ரீ ஜயபாகு தேவற்கு யா
4 ண்டு 35ஆவது கந்தளாயாந விஜ
5 ய ராஜச் சதுர்வ்வேதி மங்கலத்து ஸ்ரீ கை
6 லாசமான விஜயராஜேச்ᵤவர முட
7 யார்க்குத் திருப்பள்ளியெழுச்சி மந்த்ர
8 போநகம் அமுதுக்கு காசு இட்டார் [8000]



இச்சாசனம் ஜயபாகுதேவரின் பட்டாபிஷேகம் முடிந்த 35வது ஆட்சியாண்டில் பொறிக்கப்பட்டதாகக் குறிப்பிடுகிறது. முதலாம் விஜயபாகுவுக்குப் பின்னர் அவனது தம்பியான ஜயபாகு கி.பி.1111 இல் பொலநறுவையில் ஆட்சிப் பொறுப்பை ஏற்றதாக சூளவம்சம் கூறுகிறது. விஜயபாகுவின் ஆட்சி கி.பி.1110ஆம் ஆண்டுடன் முடிவடைந்ததால் இச்சாசனம் பொறிக்கப்பட்ட காலம் கி.பி.1145ஆம் ஆண்டு என்பது தெரிகிறது. ஆனால் பொலநறுவையில் ஆட்சிபுரிந்த மன்னர்களின்

வரலாற்றைக் காலவரிசையில் வைத்து நோக்கும்போது இக்கல்வெட்டுப் பொறிக்கப்பட்ட காலமான கி.பி.1145ஆம் ஆண்டில் ஜயபாகு ஆட்சியில் இருந்ததற்கு எந்தச் சான்றுகளும் இல்லை. மாறாக கஜபாகு மன்னனே ஆட்சியில் இருந்துள்ளான். கி.பி.1145ஆம் ஆண்டு என்பது கஜபாகுவின் (கி.பி.1132-1153) 12வது ஆட்சி ஆண்டாகும். இதனால் இச்சாசனத்தை கஜபாகு மன்னனே தனக்கு முன்னர் ஆட்சி செய்த ஜயபாகு மன்னன் பெயரில் பொறிப்பித்துள்ளான் என்பது புலனாகிறது.

முதலாம் விஜயபாகுவின் மரணத்தைத் தொடர்ந்து சோழ வாரிசுரிமைக்குப் பதிலாக பாரம்பரிய சிங்கள வாரிசுரிமையைப் பின்பற்ற விரும்பிய பௌத்த சங்கத்தாரும், அரச பிரதானிகளும் ஒன்று கூடி விஜயபாகுவின் தம்பியான ஜயபாகுவை பொலநறுவையின் அடுத்த மன்னனாகத் தெரிவு செய்தனர். இக்கட்டத்தில் விஜயபாகுவின் மகனாகிய விக்கிரமபாகுவே இளவரசனாக நியமிக்கப்பட்டிருக்க வேண்டும். ஆனால் அரச குடும்பத்தில் ஏற்பட்ட தகராறு காரணமாக விஜயபாகுவின் மருமகனான மானாபரணன் இளவரசனாக நியமிக்கப்பட்டான். அந்நிலையில் உருகுணையின் ஆள்பதியாக இருந்த விக்கிரமபாகு பொலநறுவை மீது படையெடுத்து ஆட்சியில் இருந்த ஜயபாகுவையும், தனது மைத்துனரான மானாபரணனையும், தன் சகோதரர்களையும் அங்கிருந்து துரத்திவிட்டு பொலநறுவையின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றான். இவனுக்குப் பின் அவனது மகனாகிய கஜபாகு அவ்வாட்சிப் பொறுப்பை ஏற்று 21 வருடங்கள் (1132-1153) ஆட்சி புரிந்தான். இவர்கள் இருவரும் ஆட்சியைக் கைப்பற்றி அதிகாரத்தில் இருந்தபோதும் பாரம்பரிய சிங்கள அரசுரிமைக் கோட்பாட்டிற்கு அமைவாக முறைப்படி அபிடேகம் பெறத்தவறிவிட்டனர். அதனால் அவர்கள் தமது ஆட்சியில் பொறிக்கப்பட்ட கல்வெட்டுகளில் தம்பெயருக்குப் பதிலாக தமக்கு முன்னர் ஆட்சியில் இருந்த ஜயபாகுவின் பெயரையே பெரிதும் பயன்படுத்திக் கொண்டனர். இதற்கு இம்மன்னர்களின் பெயர்களில் பொறிக்கப்பட்ட 8ஆம், 23ஆம் , 24ஆம், 29ஆம், 38ஆம், 40ஆம், 42ஆம் ஆட்சியாண்டுக் கல்வெட்டுக்களைக் குறிப்பிடலாம். அவ்வாறே கந்தளாயில் கண்டுபிடிக்கப்பட்ட சாசனமும் ஜயபாகு பெயரில் கஜபாகு மன்னன் பொறிப்பித்த ஒரு சாசனமாக உள்ளது.

சோழமரபை ஒத்த நிலையில் எழுதப்பட்டுள்ள இச்சாசனத்தில் ஜயபாகு மன்னன் "கோ" என்றும் "சக்கரவர்த்தி" என்றும் வருணிக்கப் பட்டுள்ளமை ஒரு சிறப்பான அம்சமாகும். அதேபோல் இச்சாசனத்தில் வரும் "திருப்பள்ளியெழுச்சி", "திருப்போனகம்" போன்ற சொற்கள் ஈழத்து தமிழ்ச் சாசன வளர்ச்சியில் ஒரு புதிய அம்சத்தை சுட்டிக் காட்டுகிறது. ஏனெனில் இதற்கு முன்னர் இலங்கையில் கிடைத்த எந்த தமிழ்க் கல்வெட்டுக்களிலும் இச்சொற்கள் பயன்படுத்தியதற்கு ஆதாரங்கள் காணப்படவில்லை (பத்மநாதன் 18.01.2000). இச்சாசனத்தில் வரும் "கந்தளாயாந விஜயராஜ, சதுர்வேதிமங்கலம்", "ஸ்ரீகைலாசமான விஜயராஜேச்ஂவரம்" போன்ற

சொற்றொடர்களின் முக்கியத்துவத்தை சமகாலப் பொலநறுவை அரசின் பண்பாட்டுப் பின்புலத்தில் ஆராயப்பட வேண்டியதாக உள்ளது.

இலங்கை வரலாற்றில் சோழர் ஆட்சி கி.பி.1070இல் மறைந்ததைத் தொடர்ந்து பொலநறுவையைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த சிங்கள மன்னர்களில் பலர் பௌத்தர்களாக இருந்தபோதிலும் இந்து மதத்தையும் ஆதரித்தமையைக் காணமுடிகிறது. அவர்களது அரச சபைகளில் பிராமணிய மதத்தின் செல்வாக்கு முன்னரைக் காட்டிலும் அதிகரித்துக் காணப்பட்டதுடன் அச்சிங்கள மன்னர்களே இந்து மதத்தையும் ஆதரித்து அம்மதம் சார்ந்த ஆலயங்கள் பலவற்றிற்கு நிலத்தையும், பணத்தையும் மானியமாக வழங்கி அவை பற்றிய கல்வெட்டுகளைத் தமிழ் மொழியிலும் பொறிப்பித்தனர். அவர்களுள் விக்கிரமபாகுவும், அவன் மகனாகிய இரண்டாம் கஜபாகுவும் சிறப்பாகக் குறிப்பிடத்தக்கவர்கள்.

விக்கிரமபாகு தாய்வழியால் கலிங்க வம்சத்தை சேர்ந்தவன். அவன் சைவசமயச் சார்புடையவனாக இருந்து பௌத்த மதத்திற்கு எதிராக நடந்து கொண்ட சம்பவங்கள் பற்றிச் சூளவம்சம் கூறுகிறது. இந்நிலை அவனது மகனான இரண்டாம் கஜபாகு காலத்திலும் காணப்பட்டது. பொலநறுவையை ஆண்ட மன்னர்களுள் கஜபாகு காலத்திலேயே அதிக தமிழ்க் கல்வெட்டுகள் வெளியிடப்பட்டுள்ளன. அவற்றுள் சில பௌத்த மதம் தொடர்பானவை. மற்றையவை சைவசமயச் சார்புடையன. இவனது ஆட்சியில் இந்துப் பண்பாடு பொலநறுவையில் மேலோங்கியிருந்ததை அவன் காலக் கல்வெட்டுப் பொறிப்புக்களில் வரும் "லங்கேச்ᵒவரதேவர்", "தேவர்" போன்ற சொற்றொடர்கள் எடுத்துக்காட்டுகின்றன. இவன் தனது ஆட்சியில் இந்து மதத்திற்கு அதிக முக்கியத்துவம் கொடுத்தமைதான் பௌத்த மதத்தை முதன்மைப்படுத்திக்கூறும் சூளவம்சத்தில் இவன் வரலாறு முக்கியப்படுத்திக் கூறப்படாததற்கு முக்கிய காரணம் என வரலாற்று ஆய்வாளர்கள் விளக்கம் கூறுகின்றனர்.

மேற்கூறப்பட்ட கந்தளாய்ச் சாசனத்தில் "கந்தளாயாந விஜயராஜ சதுர்வேதி மங்கலம்" என்ற் தொடர் காணப்படுகிறது. இது கஜபாகு ஆட்சியில் பொலநறுவை மட்டுமன்றி கந்தளாயும் இந்துப் பண்பாட்டில் முக்கியத்துவம் பெற்றிருந்ததை எடுத்துக் காட்டுகிறது எனலாம். நான்கு வேதங்களிலும் வல்லவர்களான பிராமணர்களுக்கு மன்னர்களால் வழங்கப்பட்ட ஊர்கள் பொதுவாக பிரமதேயம் என அழைக்கப்பட்டது. இது சோழர் காலம் முதலாகப் பிரமதேயங்கள் என அழைக்கப்படுவது வழக்காக இருந்தது. கந்தளாயில் கிடைத்த சோழ இலங்கே ச்ᵒவரனது சாசனத்தில் கூட கந்தளாயில் பிராமணர் குடியிருப்புக்கள் இருந்தது பற்றியும், அது இராஜராஜ சதுர்வேதி மங்கலம் என்ற பெயரால் அழைக்கப்பட்டது பற்றியும் அறியமுடிகிறது (பத்மநாதன் 2003:24). அத்துடன் இராஜராஜ சதுர்வேதி மங்கலத்துச் சபையார் தமது எல்லைக்கு உட்பட்ட நிலப்பகுதியில் நிர்வாக ஆதிக்கம் பெற்றிருந்ததையும், கந்தளாய் நீர்ப்பாசன வசதியுள்ள வயல்

நிலங்களைக் கொண்டிருந்ததையும் அவற்றோடு தொடர்புடைய வாய்க்கால்கள் "விக்கிரமசோழ வாய்க்கால்", "வாசுதேவ வாய்க்கால்" என அழைக்கப்பட்டதையும் அச்சாசனத்தில் இருந்து மேலும் அறியமுடிகிறது (பத்மநாதன் 2003:27). கஜபாகு காலத்தில் கந்தளாயில் இருந்த இச்சதுர்வேதி மங்கலத்திற்கு உட்பட்ட நிலப்பரப்பில் எல்லைக்கல் நாட்டப்பட்டதாக கந்தளாயில் கிடைத்த கஜபாகுவின் இன்னொரு கல்வெட்டுக் கூறுகிறது. இவற்றில் இருந்து சோழர் காலத்தில் இருந்து கந்தளாயில் அறியப்படும் பிராமணர் குடியிருப்பான சதுர்வேதி மங்கலம் கஜபாகு காலம் வரை தொடர்ந்து இருந்தமை தெரிகிறது. ஆனால் சோழர் காலத்தில் ராஜராஜசதுர்வேதி மங்கலம் என அழைக்கப்பட்ட பெயர் முதலாம் விஜயபாகு காலத்தில் விஜயராஜ சதுர்வேதி மங்கலம் எனப் பெயர் மாற்றம் பெற்று அப்பெயரே கஜபாகு மன்னன் காலம் வரை தொடர்ந்து நிலைத்திருந்ததை இச்சாசனம் உறுதிப்படுத்துகிறது.

தென்கைலாசம் என அழைக்கப்பட்டு வந்த கந்தளாய் சிவன் ஆலயம் மேற்கூறப்பட்ட சாசனத்தில் "விஜயராஜேச்ஶ்வரம்" என அழைக்கப் பட்டுள்ளமை தெரிகிறது. இப்பெயர் மாற்றம் முதலாம் விஜயபாகு காலத்தில் இருந்து ஏற்பட்டதைக் கந்தளாயில் கிடைத்த அவன் காலத் தமிழ்ச் சாசனம் சுட்டிக்காட்டுகிறது. அச்சாசனத்தில் விஜயபாகு ஆட்சியில் நங்கை சானி என்னும் விதவைப் பிராமணப் பெண் தனது கணவனின் புண்ணியத்திற்காக கந்தளாயில் இருந்த விஜயராஜேச்ஶ்வரத்திற்குத் தானம் வழங்கி, அதை நிறைவேற்றி வைக்கும் பொறுப்பை வலங்கை வேளைக்காரப் படையிடம் ஒப்படைத்ததாகக் கூறுகிறது. இதில் இருந்து விஜயபாகு காலம் தொட்டு தென்கைலாசம் என்ற பெயர் விஜயராஜேச்ஶ்வரம் எனப் பெயர் மாற்றம் பெற்று அப்பெயரே கஜபாகு மன்னன் காலம் வரை தொடரப்பட்டதை அறியமுடிகிறது.

இவ்வாலயத்திற்கு அமுது படைப்பதற்காக 8000காசு தானமாகக் கொடுக்கப்பட்டதாகச் சாசனத்தில் வரும் செய்தி சிறப்பாக ஆராயத்தக்கது. இது கந்தளாயில் இருந்த ஆலயத்தோடு கஜபாகு மன்னனுக்கு இருந்த நெருங்கிய ஈடுபாட்டைக் காட்டுகிறது எனலாம். அவ்வாறான ஒரு ஆலயம் அக்காலத்தில் இருந்திருக்கலாம் என்பதற்கு உரிய கட்டிட அழிபாட்டுச் சின்னங்கள் சாசனம் கண்டெடுக்கப்பட்ட பகுதியில் இன்றும் காணப்படுகின்றன. சமகால வரலாறு கூறும் சூளவம்சம்கூட கஜபாகு மன்னன் தனது இறுதிக் காலத்தில் கந்தளாயில் அரண்மனை ஒன்றை அமைத்து அங்கு வாழ்ந்தான் எனக் கூறுகிறது. "ஸ்ரீதக்ஷிண கைலாசபுராணம்", "கோணேசர் கல்வெட்டு", "திருக்கோணாசலபுராணம்" போன்ற வரலாற்று ஆவணங்கள் இவ்வட்டாரத்தில் இருந்த சிவன் ஆலயத்திற்கு இம்மன்னன் ஆற்றிய பணிகள், நன்கொடைகள் என்பன பற்றி விரிவாகக் கூறுகின்றன. கோகர்ணத்திலே ஆராதனைகள் தடைப்பட்டிருந்த காலத்திலே அந்தணர்களை வரவழைத்து அவர்களுக்கு விருதுகள் வழங்கி அர்ச்சகராக நியமித்தமை, கோயிற் கணக்கில் ஆயிரம் பொன் இருப்பு

வைத்தமை, அடை, ஆயம், தீர்வை முதலான அரசருக்குரியவற்றை ஆலயத்திற்கு மானியமாகக் கொடுத்தமை முதலிய செய்திகள் கஜபாகு மன்னனின் திருப்பணிகளாக கேணேஸ்வரர் கல்வெட்டில் குறிப்பிடப்பட்டுள்ளன (வடிவேலு 1993 : 99-109). இவ்வாறு பிற்கால வரலாற்றிலக்கியங்களில் சொல்லபட்ட வரலாற்றுச் சம்பவங்கள் பெருமளவுக்கு உண்மை என்பதையே சாசனத்தில் சொல்லபட்ட செய்திகளும் உறுதிப்படுத்துகின்றன.

### அடிக்குறிப்புகள்


இந்திரபாலா, கா. "கந்தளாயில் கண்டுபிடிக்கப்பட்ட சோழ இலங்கேஸ்வரன் காலக் கல்வெட்டு" *பாலர் துரையப்பா நூற்றாண்டு மலர், தெல்லிப்பளை,* 1974;1-9.

குணசிங்கம், செ., 1073, *கோணேஸ்வரம்,* பேராதனை.

பத்மநாதன், செ., 2003, "கந்தளாப் பிரமதேயம்", *சிறப்பு மலர், இரண்டாவது உலக இந்து மகாநாடு,* கொழும்பு : 13-36.

புஷ்பரட்ணம், ப., "கந்தளாயில் அரிய தமிழ்க் கல்வெட்டு", *வீரகேசரி வார இதழ்,* 19.1.2003.

புஷ்பரட்ணம், ப., 2001, *பண்டைய இலங்கையில் தமிழும் தமிழரும்,* கொழும்பு தமிழ்ச் சங்க வெளியீடு.

வடிவேல், இ., 1993, (ப.ஆ.), *கோணேசர் கல்வெட்டு,* கொழும்பு.

*Culavamsa,* 1973, (ed.) Geiger, W., Colombo.

Indrapala, K., 1971, *Epigraphica Tamilica,* Jaffana Archaeological Society, Jaffana.

Paranavitana, S., "The Tamil Slab-Inscription from Pulmoddai", *EZ*.2:191-195.

Pathmanathan, S., 1074, Chola Rule in Sri Lanka (993-1070), *Fourth International Seminar Tamil Studies,* Jaffna, :19-35.

Seneviratne, S., 1984, The Baratas: A Case of Community Integration in Early Historic Sri Lanka in *Festschrift 1985 James Thevathasan Ratnam,* (ed.) Amarasinghe, A.R.E., Colombo.

Subramaniam, T.N., 1957, *South Indian Temple Inscriptions,* Madras.

Veluppillai, A., 1971, *Ceylon Tamil Inscriptions,* Pl.I and II, Peredeniya.

# 57. பாண்டியர் காலச் செப்புத் திருமேனிகள் *

மா. சந்திரமூர்த்தி, சென்னை.

தமிழகச் சிற்பக்கலை ஆராய்ச்சி வளர்ச்சிக்காக நிறுவப்பட்ட கோவிலூர் ஆதீனம் அறக்கட்டளைச் சொற்பொழிவை நிகழ்த்த எனக்கு வாய்ப்பளித்தமைக்குத் தமிழகத் தொல்லியல் கழகத்திற்கு நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறேன்.

தமிழகக் கோயில்களில் வழிபாட்டில் உள்ள உற்சவச் செப்புத் திருமேனிகளின் எண்ணிக்கை தோராயமாக இரண்டு லட்சம் எனக் கணக்கிடப்பட்டுள்ளன. குறிப்பாகப் பல்லவர் மற்றும் முற்காலப் பாண்டியர் ஆட்சியின்போது செய்தளிக்கப்பட்ட செப்புத்திருமேனிகள் எண்ணிக்கையில் குறைவே. பாண்டி நாட்டில் தற்போது எஞ்சியுள்ள செப்புப் படிமங்களின் எண்ணிக்கை சற்றேறக்குறைய 4000க்கும் மேற்பட்டவை. அவற்றில் மிகப் பழைய திருமேனிகள் மிகக் குறைவே. மேலும் கி.பி.9ஆம் நூற்றாண்டில் இருந்துதான் செப்புப் படிமங்கள் பாண்டி நாட்டில் காணப்படுகின்றன. இப்பகுதியில் கிடைத்துள்ள படிமங்களை மூன்று வகையாகப் பிரிக்கலாம். அவை: 1.சைவப் படிமங்கள் 2.வைணவப் படிமங்கள் 3. சமணப் படிமங்கள்.

சோழர் ஆட்சியின்போது உலகம் போற்றும் மிகச் சிறந்த உலோகக் கலைப்படைப்புகள் எழுந்தன. இக்காலத் திருமேனிகள் மிகவும் மென்மை வாய்ந்ததாகவும், அளவான உடல்வாகும், அளவிட முடியாத எழிலும் கொண்டவை. விசயநகர் காலத்திய சிலைகள் நெடிய தோற்றமும், வலுவான உடலமைப்புடையதாய், பருத்த தசைப்பற்று மிக்கதாயும் காணப்பட்டன.

தொடக்கக் காலத்தில் பாண்டியர் காலச் செப்புத் திருமேனிகளில் சோழர்களின் கலைச் சாயல் மிகுதியாகக் காணப்படினும் பிற்காலப் பாண்டியரது சிலைகளில் அவை குறைந்து காணப்படுகிறது. சோழர் காலத்துச் சிலைகளில் காணப்படும் முதிர்ச்சியும், மென்மையும் இவற்றில் குறைந்திருப்பினும் அளவில் சற்று பெரியதாகவும், செங்குத்தான நீண்ட மகுடங்களைத் தரித்தும், அளவான அணிகள் பூண்டும், அழகுபடுத்தப் பட்டும் அமைந்திருந்தன. பொதுவாகப் பாண்டியப் பெருவேந்தர்காலச் சிலைகள் தலையில் உயர்ந்த மகரக்குழைகள் தரித்துக் காணப்படும். கழுத்தில் மணிவடம், முத்துவடம், சவடி ஆகிய அணிகளையும் தோளில் எளிய தோள்வளையும் முழங்கையில் கடகமும் முன் கைகளில் இரு கைவளைகளையும் அணிந்து மார்பில் முப்புரிநூல் தரித்து இடுப்பில் கச்சை அணிந்து கால்களில் தண்டையும் சிலம்பும் அலங்கரிக்கக் காணப்படும்.

---

* கோவிலூர் ஆதீனம் தவத்திரு நாச்சியப்ப ஞானதேசிக சுவாமிகள் கோவிலூர் ஆண்டவர் பெயரில் ஏற்படுத்தியுள்ள அறக்கட்டளைச் சொற்பொழிவு எண்:3, இடம்:வேலூர், நாள்:19.07.2003.

திருமலாபுரம் குடைவரைக்கோயிலில் உள்ள சதுர நடனமாடும் சிவன் 7ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியர் கலைப்பாணி ஆகும். பாண்டி நாட்டில் இதுகாறும் கிடைத்தவற்றுள் இதுவே பழமையானது. திருப்பரங்குன்றம் குடைவரைக் கோயிலில் சதுரநடனமாடும் மற்றொரு சிற்பத்தைக் காணலாம். இது 8ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. இருகால்களைப் பின்னி நடனமாடும் சிற்பங்களைக் குன்றக்குடி, செவல்பட்டி ஆகிய இடங்களில் காணலாம். குன்றக்குடி சிற்பம் எண்தோள்களில் ஆயுதம் ஏந்தி ஆடுகிறது. செவல்பட்டிச் சிற்பம் முன் இடதுகையால் அபயம் காட்டி வலது கையை வீசியாடுகிறது. இது ஜடாபாரம் போன்ற தலையமைப்பைக் கொண்டு நாட்டிய மூர்த்தியாக விளங்குகிறது. இவை இரண்டும் முறையே கி.பி.8-9ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இக்காலகட்டத்தைச் சேர்ந்த செப்புப்படிமங்கள் இதுகாறும் இப்பகுதியில் கிடைக்கவில்லை. பாண்டி நாட்டில் 10ஆம் நூற்றாண்டு முதல்தான் ஆடும் கூத்தனின் படிமங்கள் கிடைத்துள்ளன. அவற்றில் பழனி, இராமேசுவரம், குற்றாலம், சுந்தரபாண்டியன்பட்டினம், பொருப்புமேட்டுப் பட்டி ஆகிய இடங்களில் கிடைத்துள்ளவை வரலாற்றுச் சிறப்பு மிக்கவை.

பழனி பெருவுடையார் கோயிலில் சிறிய உருவமாகவுள்ள ஆடும் கூத்தன் முயலகன் மீது வலது காலை ஊன்றி இடதுகாலைத் தூக்கி ஆடும் நிலையில் காட்டப்பட்டுள்ளான். கட்டி முடிக்கப்பட்ட சடையில் புனலும், பிறையும் அணி செய்கின்றன. பின்புறம் மலர் வடிவிலான சிரச்சக்கரம் உள்ளது. பக்கத்திற்கு ஐந்து சடைக்கற்றைகள் உள்ளன. வலது காதில் சிம்மகுண்டலமும், இடது காதில் பத்ரகுண்டலமும் அணிசெய்கின்றன. அனல் ஏந்திய மேல் இடக்கை தாழ்ந்துள்ளது. மேல் வலக்கையில் உடுக்கை உள்ளது. மகுடத்தின் அமைப்பும், சடைக்கற்றையின் பகுப்பும், அணியும், ஆடைக்கட்டும் முற்காலப் பாண்டியர் கலைப்பாணியை வெளிப் படுத்துகின்றன.

இராமேசுவரம் கோயிலில் உள்ள அம்பலவாணன் உருவம் மோன நிலையில் சாந்தம் தவழும் முகத்துடன் திகழ்கிறது. இதன் மேற்கைகளில் உடுக்கையும் அனலும் உள்ளன. முன்கைகள் அபயமும், வேழமுத்திரையும் காட்டுகின்றன. கட்டி முடிக்கப்பட்ட சடைகள் இறைவனது நடனத்தின் மென்மை நிலையைக் காட்டுகின்றன. சிவனின் அருகிலுள்ள முயலகன் சிற்பம் நல்லூர் நடராசரின் சிற்பத்திலுள்ள முயலகனை ஒத்துள்ளது. நிற்கும் நிலையிலுள்ள இவரது தேவி வனப்புடையவள். குற்றாலம், திருவாலீசுவரம் கோயில்களில் ஆனந்தத் தாண்டவம் ஆடுகின்ற நிலையில் விரிசடையுடன் கூத்தர்கள் காட்டப்பட்டுள்ளனர். தென்பாண்டி நாட்டிலுள்ள குற்றாலநாதர் கோயிலில் துடியும், அனலும் ஏந்தி ஆடும் கூத்தனின் செப்புத் திருமேனியொன்று உள்ளது. தலையில் உள்ள சடைமுடி தாழ்சடையாகப் பின்தோள்களில் விழுந்து சரிந்துசெல்லும் அழகு இங்கு காணத்தக்கது.

இடையில் கட்டப்பட்டுள்ள கச்சை பீடம்வரை சரிந்து நிற்க திருவாசி இன்றிக் காட்சியளிக்கிறது. இதன் காலம் கி.பி.10ஆம் நூற்றாண்டின் முற்பகுதியைச் சார்ந்தது. இதே காலத்தைச் சார்ந்த ஆடும் கூத்தனின் படிமத்தை ஆலவாய்ச் சொக்கர் ஆலயக் கருவூலத்தில் காணலாம். சுந்தரபாண்டியன்பட்டினத்தில் உள்ள படிமம் சற்று விரிந்த உதடுகளில் முறுவல் சிந்தும் நிலையில் முயலகன் மீது வலது காலை வைத்து ஆடுகிறது. இதன் வலது காதில் சிம்மக்குண்டலமும் அபயம் காட்டும் வலக்கையில் ஆடும் அரவமும் காட்டப்பட்டுள்ளது. இது கி.பி.10ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது. இதே காலத்தைச் சார்ந்த மற்றொரு படிமம் சிவகங்கை தேவஸ்தான அலுவலகத்தில் உள்ளது. இங்கு முயலகன் குறுக்காகக் கிடக்காமல் நேரே முகத்தை அமைத்துக் குப்புறக் கிடக்கின்றான்.

படிமக்கலையில் பாண்டியர் பெற்றிருந்த திறமைக்குச் சீரிய சான்றாக விளங்குவது 25 ஆண்டுகளுக்குமுன்பு மதுரை மாவட்டம் பொருப்பு மேட்டுப்பட்டியில் புதையலின்போது கிடைத்த நடராசர் திருமேனியாகும். பாண்டிய மன்னனின் வேண்டுகோளுக்கிணங்க ஆலவாய் அண்ணல் கால்மாறி ஆடியதாகத் திருவிளையாடல் புராணம் கூறும். வழக்கத்திற்கு மாறாக இடது காலை ஊன்றியாடும் கூத்தனை ஆயிரம் ஆண்டுகட்கு முன்பே ஐம்பொன்னால் வடித்த பெருமை பாண்டியர்க்கு உரியதாகும். இத்திருமேனி தற்போது சென்னை அருங்காட்சியத்தில் உள்ளது. இவ்வுருவம் முயலகன்மீது இடது திருவடியை ஊன்றி, வலதுகாலை வீசி ஆடுகிறது. வழக்கதிற்கு மாறாக வலதுகையில் அனலும் இடதுகையில் துடியும் ஏந்தியுள்ளமை இச்சிலையின் மற்றொரு சிறப்பாகும். இதுபோன்ற தனிச் சிறப்பு வாய்ந்த உருவத்தை மதுரை வெள்ளியம்பலத்திலும் காணலாம். இது சிவகங்கை மாவட்டம் பிள்ளையார்பட்டி கற்பகவினாயகர் கோயிலில் உள்ள ஆடவல்லானை (கி.பி.1000) ஒத்த அழகுடையது. பாண்டியப் பெருவேந்தர்களும் முற்காலப் பாண்டியர்களைத் தொடர்ந்து ஆடும் பெருமானைப் பல்வேறு கோலங்களில் வடித்தனர். இக்கால நடராசர் வடிவங்களை 1. மகுடத்தோடுமட்டும் கூடியவை 2. கொக்கிறகுமுடியோடுகூடியவை 3. மகுடத்தோடும் விரிசடையோடும் கூடியவை என மூன்று வகையாகப் பிரிக்கலாம். இக்கால ஆடும்பெருமானின் ஊன்றிய திருவடியின் பின்புறம் நாகத்துடன்கூடிய முயலகன் காணப்படும் மரபினையும் ஒரு சில படிமங்களில் காணலாம். சோழ நாட்டு நடராசரது சிலைகளில் விரிசடையில் காணும் கங்கையும் இளம் பிறையும் பாண்டி நாட்டுச் சிலைகளின் மகுடத்தில் அமைத்துக் காட்டியுள்ள முறை குறிப்பிடத்தக்கது.

**துர்வாசபுரம் நடராசர்**

புதுக்கோட்டை மாவட்டம் திருமயத்திற்கு மேற்கே 8 கிமீ தொலைவிலுள்ள துர்வாசபுரம் சுந்தரேஸ்வரர் ஆலயத்தில் 1991ஆம் ஆண்டு கிணற்றினைத் தூர்வாரும்போது நடராசர், சிவகாமி, நர்த்தனஞானசம்பந்தர் ஆகிய மூன்று செப்புத் திருமேனிகள் கண்டுபிடிக்கப்பட்டன. இவை

பாண்டியர் காலத்தைச் சேர்ந்தவை. உயர்ந்த பீடத்தின் மேலுள்ள வட்டமான பத்ம பீடத்தின் பக்கவாட்டில் கவிழ்ந்து கிடக்கும் முயலகனின் முதுகின் மேல் வலது காலை ஊன்றி இடது காலைத் தூக்கி நான்கு கரங்களையும் வீசி நடராசர் ஆடுகிறார். மேல் வலக்கை விரல்கள் சிறிய துடியைப் பற்றியுள்ளன. இடது உள்ளங்கையில் அர்த்தசந்திர முத்திரையில் சுடர்விட்டு எரியும் அகல் உள்ளது. இடக்கரம் மார்பின் குறுக்காகவும் வலக்கரம் அபயத்திலும் உள்ளன. இத்திருமேனியை ஜடாமகுடம், முத்துப்பட்டம், மகரக்குழை, ஓலைக்குழை, தோள்மாலை, கண்டசரம், மணிவடம், சவடி, கைவளை, புரிநூல், உதரக்கச்சை, இடைக்கச்சை, அரைப்பட்டிகை, கழல், தண்டை, காப்பு, பாதசரம் ஆகிய அணிகலன்கள் அலங்கரிக்கின்றன. திருவடியின் கீழுள்ள முகத்தைப் பக்கவாட்டில் திருப்பியுள்ள முயலகனின் இடக்கரம் நாகத்தைப் பிடித்தும், வலக்கரம் முத்திரைக் காட்டும் நிலையிலும் மிக அழகாக, சிறியதாக உள்ளது. இது கி. பி. 11 ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியைச் சார்ந்தது.

***இலுப்பைக்குடி ஆடவல்லான், சிவகாமி***

காரைக்குடி மாவட்டம் இலுப்பைக்குடி தான்தோன்றீசுவரர் கோயிலில் உள்ள ஆடவல்லான் திருமேனி முயலகன் மீது வலதுகாலை ஊன்றி இடக்காலைத் தூக்கி நான்கு திருக்கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது. ஜடாமகுடம், இதன் மேல்வலப்புறம் ஆடும் அரவம், இடப்புறம் இளம்பிறை, முன்புறம் கொக்கிறகு, கீழ்ப்புறம் ஊமத்தை, எருக்கு ஆகிய பூக்கள் மகுடத்தின் நான்கு பக்கங்களிலும் காட்சியளிக்கின்றன. ஜடாமகுடத்தின் பின்புறம் இடையிடையே மலர்கள் பொருத்தப்பட்ட விரிசடைகள் பக்கத்திற்கு ஆறாக அமைந்துள்ளன. அதில் வலப்புறம் கங்கையும் இடப்புறத்தில் அரவமும் பின்புறம் சிரச்சக்கரமும் காட்டப்பட்டு உள்ளது. மேல்வலக்கையில் உடுக்கை, இடக்கையில் அர்த்தசந்திர முத்திரையுடன் கூடிய அனல், கீழ்வலக்கை அபயத்திலும், இடக்கை வேழமுத்திரையிலும் காட்டப்பட்டுள்ளது. நெற்றியில் இரத்தினப் பட்டம், செவிகளில் மகரவட்டக் குழை, தோளில் வாகுமாலை, கழுத்தில் முத்தாரம், கண்டிகை, சரப்பளி, மேற்கையில் இலைக்கருக்கணி முகப்புடைய தோள்வளை, முழங்கையில் கடகம், முன்கையில் மூன்று வகைக் காப்பு, சிறிய மேல் அங்கி, வயிற்றைச் சுற்றிக் கச்சை, இடையிலிருந்து மேல் தொடைவரை வேலைப்பாடு மிக்க தோல் ஆடை, இடையைச் சுற்றிலும் பொன்னால் ஆன நாண், மலர்க் கச்சை, அரைப்பட்டிகை, இடைவார் ஆகியன அணிசெய்கின்றன. இடையின் பக்கங்களில் குஞ்சங்கள் சரிந்த நிலையில் உள்ளன. பாதங்களில் சலங்கை கோர்த்த கழலும், காலில் தண்டையும், கருக்கணி முகப்புடைய வளையமும் அலங்கரிக்கின்றன. அப்பெருமானின் அகன்ற நுதலும், வளைந்த புருவமும், நெற்றிக்கண்ணும், நீளமான நாசியும், விரிந்த இடையும், ஒளிமிக்க பார்வையும், நீண்டு ஒடுங்கிய முகமும், புன்னகை புரியும் அதரமும், அங்கங்களின் அசைவும் பிற்காலப் பாண்டியரின் புகழ்மிக்க ஆடவல்லானின் படைப்புகளுக்குச் சிறந்த எடுத்துக்காட்டாக விளங்குகிறது.

இடையை வலப்புறமாக ஒடித்து இடதுகாலை மடித்து முன்வைத்த நிலையில் நின்றகோலத்தில் சிவகாமியின் உருவம் சிவனுக்கருகில் தனியிருக்கையில் வடிக்கப்பட்டுள்ளது. சிவகாமியின் திருமேனியை கரண்ட மகுடம், நெற்றியைச் சுற்றி முத்துப்பட்டம், நீள்செவிகளில் மகரக் குழை, தோள்களில் மலர்மாலை, கழுத்தில் பொட்டுமணி, கண்டிகை, மணியாரம், சரப்பளி, மேற்கையில் வளை, முழங்கையில் கடகவளை, முன்கையில் முத்துவளை, செருகுவளை, மணிவளைசூடகம், விரல்களில் மோதிரம், கச்சையற்ற குவிந்த தனங்களிடையே நூல், கொடியிடையில் மேகலை, இடைவார், இடைக்கச்சை, ஆடைக்கட்டு, காலில் தண்டை, பாதங்களில் சரம் ஆகியன அணிசேர்க்கின்றன. இத்திருமேனியின் நீண்டு மெலிந்த உடல், வலப்புறம் சாய்ந்த இடை, குவிந்த மார்பு, நீண்ட கரங்கள், குனிந்த தலை, கனிவான பார்வையுடன்கூடிய இளநகை ஆகியன பாண்டியர் காலத்துப் படிமக்கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கிறது.

***இரணியூர் நடராசர்***

காரைக்குடி மாவட்டம் இரணியூர் ஆட்கொண்டநாதர் கோயிலின் நடராசர் திருமேனி ஐம்பொன் கலவையால் வடிக்கப்பட்டுள்ளது. இச்சிலை நான்கு கரங்களுடன் தாமரை இருக்கையின் மீதுள்ள முயலகன் மேல் வலதுகாலைக் குறுக்காக ஊன்றி இடதுகாலைத் தூக்கி ஆடும் நிலையில் காட்சியளிக்கிறது. மேல்வலக்கையில் உடுக்கை (டமருக முத்திரை), மேல் இடக்கையில் எரி அகல் (அர்த்தசந்திர முத்திரை), முன் கரங்கள் இரண்டும் முறையே அபய, வேழ முத்திரைகளிலும் காட்டப்பட்டுள்ளன. விரிசடைகள் இன்றி சடைமுடி உயர்ந்த மகுடம்போல் அலங்கரிக்கப்பட்டு உள்ளது. பின் தோளை ஒட்டித் தாழ்ச்சடைமுடி வனப்போடு சுருண்டு காட்சியளிக்கிறது. வலதுகாது அணியின்றி நீண்டும் சுருண்ட ஓலைக்குழையுடனும் காணப் படுகிறது.

சிவனின் அகன்ற நெற்றியில் செங்குத்தாக மூன்றாவது கண்ணும், திறந்த கண்களும், எடுப்பான நாசியும், குமிழ்சிரிப்பும், ஒடுங்கிய கன்னமும் வனப்பூட்டும் முகவாயும், திரண்டதோளும், பிற அங்கங்களும், கழுத்தில் முத்தாரமும் சரப்பளியும் வனப்போடு மிகவும் கவனமாக வடிக்கப்பட்டு உள்ளன. இச்சிலையில் திருவாசி இல்லை. இதன் காலம் கி.பி.12-13ஆம் நூற்றாண்டு. ஆடும்பெருமான் உருவத்தைச் செங்குத்தாக நிறுத்துவதற்கு அவருடைய திருவடியில் முயலகனுடன் ஆடும் நாகத்தை இணைத்து வடிக்கும் முறை பாண்டியர்கால படிமக்கலைப்பாங்கிற்கு உரியது. இது சோழர்காலப் படிம வார்ப்பிலிருந்து பாண்டியரது வார்ப்பு முறையினைத் தனித்து அடையாளம் காண வகை செய்கிறது. பிற்காலப் பாண்டியர் நடராசர் சிலையினைத் திருவாசியோடும், திருவாசியில்லாமலும் வடித்துள்ளமைக்கு கோட்டூர் இரணியூர் சிலைகளை எடுத்துக்காட்டாகக் கூறலாம்.

இராமநாதபுரம் மாவட்டம் உத்தரகோசமங்கை மங்களநாதப் பெருமாள் கோயிலிலும் திருநெல்வேலி நெல்லையப்பர் கோயிலிலும் உள்ள

கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கூத்தபிரானின் உருவங்களில் விரிசடைகள் காணப்படவில்லை. கட்டி முடித்த சடைதான் உள்ளது. சோழர்காலப் படிமங்களில் முகம் உருண்டு திரண்டு விளங்க பாண்டிய நாட்டு படிமங்களில் அது நீண்டு ஒடுங்கி உள்ளது. இதேபோன்ற படிமங்கள் வீரபாண்டி, பெரியகுளம், கீரனூர், விராச்சிலை போன்ற இடங்களில் காணப்படுகின்றன. ஸ்ரீவைகுண்டம் கைலாசநாதர் ஆலயத்தில் உள்ள உற்சவத்திருமேனி கி.பி.15ஆம் நூற்றாண்டில் வடிக்கப்பட்டது. தூக்கிய பாதத்தின் அடியில் பாம்பின் படம் காணப்படுவது இதன் தனிச்சிறப்பாகும். பெரியகுளம் ஸ்ரீபாலசுப்பிரமணியசுவாமி கோயிலில் உள்ள கி.பி.15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த நடராசர் சிற்பம் ஊன்றிய திருவடியுடனும் நல்ல ஒடிப்புள்ள முழந்தாளுடனும் காட்டப்பட்டுள்ளது. அம்பாசமுத்திரம் வட்டம் பிரமதேசம் கைலாசநாதசுவாமி கோயிலிலுள்ள கி.பி.15ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கூத்தனின் இடையிலிருந்து தொங்கும் ஆடைக்கட்டு பத்மபீடத்தில் இணைவதுபோல வடிக்கப்பட்டுள்ளது. ஸ்ரீவில்லிபுத்தூர் மடவார்வளாகம் வைத்தியநாதசுவாமி கோயிலிலுள்ள கி.பி.15ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பிரபையுடன்கூடிய கூத்தனின் உடுக்கை நாகத்தால் சுற்றப்பட்டுள்ளது போல வடிக்கப்பட்டுள்ளது. இது சேர நாட்டு பாணியைச் சேர்ந்தது.

**விநாயகர்**

பாண்டி நாட்டில் விநாயகரது படிமங்கள் கி.பி.9-10ஆம் நூற்றாண்டு முதல் கிடைக்கின்றன. இவை நின்றகோலத்தில் நான்கு கரங்களுடன் யானை முகமும், மனித உடலும் கொண்டு காணப்படுகின்றன. கரங்களில் அங்குசம், பாசக் கயிறு, தந்தம், மோதகம், மாம்பழம், கதாயுதம் ஆகியவற்றைக் காணலாம். இராமேஸ்வரம் இராமநாதசுவாமி கோயிலில் உள்ள கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த விநாயகரின் திருமேனி கதாயுதம் ஒன்றினை ஊன்றியவாறு காணப்படுகிறது. புதுக்கோட்டை அருள்மிகு சித்திவிநாயகர் ஆலயத்திலுள்ள திருமேனி கி.பி.11ஆம் நூற்றாண்டைச் சார்ந்தது. இது அங்குசம், பாசம், தந்தம், மோதகம் கொண்டுள்ளது. மோதகத்தை துதிக்கையால் பற்றிநிற்கும் திருவரங்குளம் விநாயகர் படிமமும் (கி.பி.12-13ஆம் நூற்றாண்டு) அங்குசம், பாசம் முதலிய எடுப்பான ஆயுதங்களுடன் துதிக்கையை இடம்புரியாகக் கொண்டு நிற்கும் வெல்லலூர் அகத்தீஸ்வரர் ஆலயத்து விநாயகரும் (கி.பி.14ஆம் நூற்றாண்டு) குறிப்பிடத்தக்கவை. இம்மாவட்டத்து கீழக்குறிச்சி சோமீஸ்வரர் கோயிலிலுள்ள செப்புப்படிமம் பாண்டிரின் இறுதிக் காலத்தைச் சேர்ந்தது. மேலப்பனையூர் ஞானபுரீஸ்வரர் கோயிலிலுள்ள வல்லபை கணபதியின் செப்புத்திருமேனி (கி.பி.12-13ஆம் நூற்றாண்டு) எண்கரங்களில் ஆயுதங்கள் தாங்கி தாமரை இருக்கையில் அமர்ந்த கோலத்தில் வடிக்கப்பட்டுள்ளது. இடதுதொடையின் மீது அவரது தேவியான வல்லபை அமர்ந்துள்ளாள். தேவதானம், இலுப்பைக்குடி, மதுரை, சோமவனம், திருப்பத்தூர், திருநெல்வேலி ஆகிய ஊர்களில் உள்ள புகழ் பெற்ற விநாயகர்

(கி.பி.12-13ஆம் நூற்றாண்டு) திருமேனிகள் பாண்டியர் காலப் படிமக் கலைக்கு எடுத்துக்காட்டாகத் திகழ்கின்றன.

முருகன்

பாண்டிநாட்டு ஆலயங்களில் முருகனின் திருவுருவங்களை இரு கோலங்களில் காணலாம். ஒரு முகமும் நான்கு கைகளும் கொண்டது ஒரு வகை. ஆறுமுகங்களும் பன்னிரண்டு கைகளும் கொண்டது மற்றொரு வகையாகும். இவை நின்ற கோலத்தில், தனித்தோ அல்லது மயில் வாகனத்தில் அமர்ந்த கோலத்திலோ காணப்படுகிறது. முருகனின் ஆறுபடை வீடுகளில் ஒன்றான ஆவினங்குடி என்னும் பழனியில் உள்ள முருகனின் செப்புத் திருவுருவம் பிற்காலப் பாண்டியர் கலைக்குச் சிறப்புச் சேர்ப்பதாகும். ஒரு முகம் இரண்டு கைகளையுடைய இப்படிமத்தின் உருவமைப்பு, நிற்கும் நிலை, தலைக்கோலம், ஆடைகளின் தன்மை யாவும் கொண்டு இதை கி.பி.13ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியாகக் கருதலாம். முதலாம் மாறவர்மன்சுந்தரபாண்டியனின் கல்வெட்டுகளில் "வைகாவூர் நாட்டு ஆவினங்குடி பழனிமலை மீது நின்றருளிய சுப்பிரமணிய சுவாமிகள்" எனக் குறிக்கக் காண்கிறோம்.

புதுக்கோட்டை மாவட்டம் ஆலங்குடியில் உள்ள சுப்பிரமணியர் திருமேனி நான்கு கரங்களுடன் தாமரை பீடத்தில் நின்றபடி வடிக்கப்பட்டுள்ளது. மேற்கரங்கள் இரண்டிலும் வஜ்ரப்படைகள் கத்தரி முத்திரையில் காட்டப்பட்டுள்ளன. கீழ்கரங்கள் இரண்டும் அபய முத்திரையிலும், சிம்மகர்ண முத்திரையிலும் உள்ளன. கரண்ட மகுடம், மகர குண்டலங்கள், முத்துவடம், சன்னவீரம், இடைக்கச்சை யாவும் இச்சிலையை அலங்கரிக்கின்றன. பொதுவாக முருகனின் மேலிருகரங்கள் சக்திப் படையையும், வஜ்ரப்படையையும் பற்றிய நிலையில் காட்டப்படுவது சோழர் மரபு. இங்கு மாறாக மேற்கரங்கள் இரண்டிலும் வஜ்ரப்படைகள் காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. மேலும் பாண்டிய நாட்டு ஆலயங்களில் முருகனின் செப்புப்படிமங்கள் மயில் வாகனத்தின் முன் நின்ற கோலத்திலும், வள்ளி, தெய்வானை ஆகிய இரு தேவியர் சூழ நின்ற கோலத்திலும் (கி.பி.12-13ஆம் நூற்றாண்டு) மிகுதியாகக் காணப்படுகின்றன.

சந்திரசேகர மூர்த்தி

தாமரை இருக்கையின் மீது நான்கு கரங்களுடன் நின்ற கோலத்தில் காணப்படும் சிவனின் மேற்கரங்கள் மழுவையும், மானையும் பற்றி நிற்க கீழ்கரங்கள் இரண்டும் அருள் கரமாகவும், வழங்கும் கரமாகவும் காணப்படுவது மரபு. உமையின் வலக்கரம் கடக முத்திரையிலும் இடக்கரம் லோல முத்திரையில் தாழ் கரமாகவும் அமைந்துள்ளது. இவற்றிற்கு எடுத்துக்காட்டாகப் பாண்டி நாட்டில் பிள்ளையார்பட்டி, திருநெல்வேலி, பாபநாசம், தேவதானம், மதுரை, வீரபாண்டி ஆகிய இடங்களில் உள்ள செப்புத் திருமேனிகளைக் (கி.பி.12-13ஆம் நூற்றாண்டு) கூறலாம்.

கோவிலூர்ச் சந்திரசேகரர்

இப்படிமம் (கி.பி.13ஆம் நூற்றாண்டு) நான்கு கரங்களுடன் தாமரை இருக்கையின் மீது நின்றகோலத்தில் வார்க்கப்பட்டுள்ளது. இளம்பிறையுடன் கூடிய நீண்ட சடைமுடி தலையை அலங்கரிக்கிறது. மழுவையும், மானையும் மேற்கரங்கள் பற்றி நிற்க கீழ்க்கரங்கள் இரண்டும் அபய-வரத முத்திரையில் காணப்படுகின்றன. மகரக்குண்டலம், ஓலைக்குழை, கழுத்துச்சரம், மணிவடம், முத்துவடம், தோள்வளை, வயிற்றுக்கச்சை, இடைக்கச்சை, வீரமணி, பாதசரம் ஆகிய அணிகள் இச்சிலையை அலங்கரிக்கின்றன. தாமரை இருக்கைகளின் மீது நான்கு கைகளுடன் சிவனும் இவனது இடப்புறத்தில் உமையும் தனித்தனியாக நின்ற கோலத்தில் வடிக்கப்பட்ட படிமம் ஒன்று காரைக்குடி மாவட்டம் இலுப்பைக்குடி தான்தோன்றீஸ்வரர் கோயிலில் உள்ளது. சிவனின் மேல்வலக்கை, இடக்கை முறையே கத்தரி முத்திரையில் மழுவையும், மானையும் தாங்கி நிற்க கீழ்வலக்கை அபயம் அளிக்கிறது. இடக்கை அழைத்து வழங்கும் ஆகுயமுத்திரைக் காட்டுகிறது. உமையின் வலக்கை கடகமுத்திரையில் அல்லி மலரைப் பிடித்தும் இடக்கை தாழ் கையாகவும் அமைந்துள்ளது. இருவரின் தலையையும் முறையே பிறையுடன் கூடிய கடமகுடமும் சிறிய கரண்ட மகுடமும் அலங்கரிக்கின்றன.

**சோமாஸ்கந்தர்**

பல்லவரைப் போன்று பாண்டியர்களும் குமரனுடன் சிவனும் உமையும் தோன்றும் சோமாஸ்கந்தர் படிமங்களை கி.பி.10ஆம் நூற்றாண்டு முதற்கொண்டே வடித்துள்ளனர். காட்டாக, காலத்தால் முந்தைய விராச்சிலை சோமாஸ்கந்தர் படிமத்தைக் குறிப்பிடலாம். இதில் சிவனும் உமையும் நீண்ட இருக்கையில் அமர்ந்திருக்க முருகன் தாமரை இருக்கையின் மீது பக்கவாட்டில்நின்று நடைபயில்வதுபோல காட்சியளிக்கிறது. கி.பி.11-12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சூரக்குடி சோமாஸ்கந்தர் படிமத்தில் சிவனது விரிந்த நெற்றியில் மூன்றாவதுகண் செங்குத்தாகக் காட்டப் பட்டுள்ளது. இதில் உமையாள் சிவனது இடப்புறம் பிரியா விடையாளாக அமர்ந்த கோலத்தில் அழகே உருவாகக் காட்சியளிக்கிறார். குமரன் ஆடையற்ற திருவுருவாய்ச் சிற்றிளம் குழந்தையாக நடனம் ஆடும் கோலத்தில் பாங்குறத் தோன்றுகிறார். மதுரை மீனாட்சி சுந்தரேசுவரர் கோயிலில் காணப்படும் கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சோமாஸ் கந்தரின் திருமேனியில் குமரவேலின் முன்புறம் அவரது வாகனமான மயில் காட்டப்பட்டுள்ளமை குறிப்பிடத்தக்கது. சோழர் படைப்புகளிலும் காண முடியாத இவ்வரிய செப்புத் திருமேனி பாண்டியப் பெருவேந்தரின் கலைப்படைப்பிற்குச் சான்றாக விளங்குகிறது.

கி.பி.12ஆம் நூற்றாண்டைச் சார்ந்த கங்கைகொண்டான் கைலாசநாதர் கோயிலில் உள்ள சோமாஸ்கந்தர் படிமக்குழுவில் சிவனது உருவம் உயர்ந்த தாமரைப் பீடத்தின் மீது சுகாசனத்தில் நான்கு கைகளுடன் வடிக்கப்பட்டுள்ளது. மேற்கரங்கள் இரண்டும் மழுவையும், மானையும்

பற்றியுள்ளன. கீழ்க்கரங்கள் காக்கும் கரமாகவும், சிம்மகர்ண முத்திரையிலும் அமைந்துள்ளன. திருமேனியின் எடுப்பான தோற்றமும் அதன் தலையை அணிசெய்யும் மகரக்குழைகளும் அளவான அணிகளும் ஆடையும் இச்சிலையினைப் பாண்டியர் காலத்தியதாக அடையாளம் காட்டுகிறது. இதன் அருகில் உமையன்னையின் அமர்ந்த கோலம் காட்டப்பட்டுள்ளது.

புதுக்கோட்டை மாவட்டம் பேரையூர் நாகநாதசாமி கோயிலில் உள்ள சோமாஸ்கந்தர் படிமக்குழு தனித்தனிப் பீடங்களில் வார்க்கப்பட்டுள்ளது. சோமாஸ்கந்தர் தாமரை இருக்கையின் மீது இடது காலை மடித்து வலது காலைத் தொங்கவிட்டு சுகாசனத்தில் நான்கு கரங்களுடன் காட்டப்பட்டுள்ளார். சிவனது மேற்கரங்கள் இரண்டும் கத்தரி முத்திரையில் மழுவையும், மானையும் பற்றிய நிலையில் காட்டப்பட்டுள்ளன. கீழ் வலக்கரம், இடக்கரம் முறையே அபய - சிம்மகர்ண முத்திரையில் அமைந்துள்ளது. ஜடாமகுடத்துடன் காணப்படும் சிவனது வலது காதில் மகரக்குழை, இடது காதில் வட்டக்குழையுடன்கூடிய மகரகுண்டலம், கழுத்தில் மணிவடம், முத்துவடம், மார்பில் பூணூல், மேல் வயிற்றில் உதரபந்தம், முன் கையில் காப்பு, இடையிலிருந்து கீழ்த் தொடைவரைக் கச்சை, இடையைச் சுற்றிக் கீர்த்தி முக அரைப்பட்டிகை, வலது முழங்காலின் கீழ் வீரமணி, கால்களில் பாதசரம் ஆகியன அலங்கரிக்கின்றன. சிவனது பரந்த முகம், தூக்கிய புருவம், மலர்ந்த விழிகள், எடுப்பான மூக்கு, குவிந்து விரிந்த திருவாய், நீண்ட அழகிய அங்கங்கள் யாவும் இச்சிலைக்கு மேலும் மெருகூட்டுபவை. இடப்புறத்தில் தாமரை இருக்கையில் அமர்ந்துள்ள உமையின் வலக்கை சிம்ம கர்ணமுத்திரையிலும், இடக்கை வரதமுத்திரையிலும் உள்ளன. உமையை செங்குத்தான மகுடம், மகரக்குழைகள், நெற்றிப்பட்டம், முத்துவடம், மணிவடம், தோள்வளை, கைவளை, புரிநூல், இடைக்கச்சை, பாதசரம் ஆகிய அணிகலன்கள் அலங்கரிக்கின்றன.

வீரபாண்டி சோமாஸ்கந்தர் படிமத்தில் சிவன், முருகன், உமை ஆகிய மூவரும் செவ்வகப் பீடத்தின் மேலுள்ள பத்மாசனத்தில் அமர்ந்துள்ளனர். மேலிருகரங்களில் மானும், மழுவும் கீழிருகரங்களில் அபய-வரதமும் கொண்ட சிவபிரானின் வலதுகால் கீழே தொங்கியும், இடதுகால் பீடத்தின் மீதும் உள்ளன. அமர்ந்திருக்கும் உமையம்மையின் வலதுகரம் குமுதத்தைத் தாங்கியுள்ளது. விருதுநகர் மாவட்டம் தேவதானம் நச்சாடை தவிர்த்த கோயிலில் கி.பி.13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சோமாஸ்கந்தர் படிமம் ஒன்று உள்ளது. இதில் சிவன், உமை நீண்ட பீடத்தில் அமர்ந்து நடுவில் கந்தனுடன் காட்சியளிக்கிறார்கள். இதுபோன்ற படிமங்கள் காரைக்குடி மாவட்டம் தேவகோட்டை விஸ்வநாதசுவாமிகோயில், கோவிலூர் கொத்தவாலீஸ்வரர்கோயில் திருப்பத்தூர் வட்டம் கண்டரமாணிக்கம் கைலாசநாதர்கோயில், கானாடுகாத்தான் சிவலோகநாதசாமிகோயில், புதுக்கோட்டை மாவட்டம் திருவரங்குளம்கோயில் ஆகியவற்றில் காணப்படுகின்றன.

**வைணவப் படிமங்கள்**

ஆழ்வார்கள் மங்களாசாசனம் செய்த திருப்பதிகள் 108. அவைகளில் ஒன்று பரமபதம். மற்றொன்று திருப்பாற்கடல். எஞ்சிய 106 திருப்பதிகளில் பாண்டி நாட்டில் உள்ளவை ஐந்தாகும். இங்கெல்லாம் வைணவ சமயச் சார்புடைய பல்வகை படிமங்களைப் பாண்டியப் பெருவேந்தர்கள் செய்தளித்துள்ளனர். அவற்றை நின்ற கோலத் திருமேனி, இருந்த கோலத் திருமேனி, கிடந்த கோலத் திருமேனி என மூன்று நிலைகளில் காணலாம்.

நின்றகோலத்திருமேனிகளின் மேலிரு கைகளில் சங்கு சக்கரமும், கீழிருகைகளில் ஒன்று காக்கும் கரமாகவும், மற்றொன்று இடைமீது அல்லது தொடைமீது அமைந்த கரமாகவும் அமைக்கப்பட்டுள்ளன. இருந்த கோலத்திருமேனிகள் மேற்கரங்களில் சங்கு சக்கரத்தையும் கீழ்கரங்களில் அபய-வரத முத்திரைகளையும் கொண்டுள்ளன. கிடந்தகோலத்தில் பெரும்பாலும் கண்ணனது குழந்தைப் பருவப் படிமங்களைக் காணலாம். மிகச் சில இடங்களில் பள்ளிகொண்டப் பெருமாளாக காட்டப்படுவது உண்டு. கிடந்தகோலத்தில் ஆலிலைக் கண்ணன், சந்தானகோபாலன் போன்ற திருமேனிகள் காணப்படுகின்றன.

பாண்டிநாட்டில் கி.பி.10ஆம் நூற்றாண்டிலிருந்து வைணவச் சார்புடைய செப்புத்திருமேனிகள் வழிபாட்டில் இருந்தமை பழனி, திருத்தங்கல் போன்ற தலங்களில் கிடைத்த திருமால், திருமங்கைமன்னன் படிமங்கள் மூலம் அறியலாம். திருமோகூர், அழகர் கோயில், ஆழ்வார் திருநகரி, சேரமாதேவி, ஸ்ரீவில்லிபுத்தூர், திருக்கோட்டியூர், ஸ்ரீவைகுண்டம், திருத்தங்கல், திருமயம், நான்குனேரி, சேரன்மாதேவி, கங்கைகொண்டான், ஆத்தூர், திருக்கோளூர், திருமாலிருஞ்சோலை ஆகிய தலங்களில் காணப்படும் வைணவ மரபில் வந்த திருமேனிகள் பாண்டியர் காலக் கலைவளத்திற்குச் சான்றுகளாக விளங்குகின்றன. இவையாவும் கி.பி.13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

புதுக்கோட்டை வரதராசப்பெருமாள் கோயிலிலுள்ள செப்புத் திருமேனியின் தலையில் செங்குத்தாகச் செல்லும் அழகிய கிரிடமகுடமும் காதுகளிலுள்ள மகர குண்டலங்களும், கழுத்தில் மணிவடம், முத்துவடமும், இடதுதோளில் புரிநூலும், மேற்கைகளில் ஆழியும், சங்கமும், வயிற்றில் கச்சையும், இடையில் பீதாம்பரமும், ஆடைக்கட்டில் முத்துச் சரங்களும் காணப்படுகின. பொன்னமராவதி கோயிலில் உள்ள திருமால், திருமகள், நிலமகள் ஆகியன இப்படிமத்தை ஒத்துள்ளன.

இராமநாதபுரம் மாவட்டம் திருப்புல்லானி ஜெகநாதப் பெருமாள் கோயில் வழிபாட்டிலுள்ள ஜெகநாதர், ஸ்ரீயாகபேரர், சேனைமுதலி, கருடாழ்வார், விஷ்ணு, பூதேவி, பத்மாவதி, நர்த்தன கண்ணன் ஆகியோரது செப்புப்படிமங்கள் கி.பி.14ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியரது படிமங்களில் குறிப்பிடத்தக்கவை.

கங்கைகொண்டான் ஆடும் கண்ணனின் படிமம் தாமரை இருக்கை மீது வலதுகாலைப் பக்கவாட்டில் ஊன்றி இடதுகாலை மெல்ல தூக்கி ஆடும் நிலையில் இரண்டு கைகளுடன் வார்க்கப்பட்டுள்ளது. தலையில் செங்குத்தாக உயர்ந்த கொண்டையும் உள்ளங்கையில் வெண்ணெய் உருண்டையும் உள்ளது. இதுபோன்ற திருமேனிகள் பாண்டி நாட்டில் அழகர்கோயில், திருக்கோட்டியூர், ஸ்ரீவில்லிபுத்தூர், திருநெல்வேலி ஆகிய ஊர்களிலும் காணப்படுகின்றன. இதன் காலம் கி.பி.13ஆம் நூற்றாண்டின் தொடக்கப் பகுதியாகும்.

திருநெல்வேலி மாவட்டம், சேரமாதேவி இராமசுவாமிகோயிலில் உள்ள இராமன், சீதை, இலக்குவன், அனுமன் ஆகியோரது படிமங்கள் புகழ் பெற்றவையாகும். இதுபோன்ற படிமத் தொகுப்பு இராமநாதபுரம் மாவட்டம், ஜகநாதப்பெருமாள்கோயில், இராமேசுவரம் இராமநாதசுவாமி கோயில், தூத்துக்குடி மாவட்டம், கொற்கையை அடுத்துள்ள ஆத்தூர் சோமநாதேஸ்வரர் கோயில் போன்றவற்றிலும் காணப்படுகின்றன. இதில் இராமேஸ்வரத்தில் காணப்படும் படிமத்தின் காலம் கி.பி.10ஆம் நூற்றாண்டாகும். மற்றவை யாவும் கி.பி.13-14ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவை.

பாண்டிய மன்னர்கள் சைவ சமயத்தை ஆதரித்தது போன்று வைணவத்தையும் போற்றிவந்துள்ளனர் என்பதையும் ஆழ்வார்களை ஆதரித்ததோடு அவர்களது சிலைகளையும், படிமங்களையும் ஆலயத்தில் வைத்து வழிபட ஏற்பாடு செய்தனர் என்பதையும் இதன்வழி அறிய முடிகிறது.

# 58. செய்தித் திரட்டு

## 58:1 துர்கை

செஞ்சி வட்டம், மேல் மலையனூரின் ஏரிக்கரையின் வடக்குக் கோடியில் உள்ள கலிங்கிற்கு அருகில் இந்த கற்சிலை உள்ளது. நின்ற கோலம். தலையில் கிரிட மகுடம். நான்கு கைகளுள் மேல் கைகளில் சக்கரம், சங்கு உள்ளன. வலது கீழ்க்கை அபயத்திலும் இடது கீழ்க்கை இடுப்பிலும் காணப்படுகின்றன. எருமைத் தலையில் துர்க்கை நிற்கிறாள். வலது பக்கத்தில் ஒரு பக்தன் தன்னுடைய தலையைத் தானே வாளால் வெட்டுகிறான். இடது பக்கத்தில் ஊர்தியாகிய மான் நிற்கிறது. சிலையின் உயரம் 142 செ.மீ. அகலம் 76 செ.மீ. காலம் கி.பி.9ஆம் நூற்றாண்டு.



## 58:2 யோக தட்சிணாமூர்த்தி மற்றும் வராகி

திருப்பத்தூர் வட்டம், மடவாளம் என்ற ஊரில் ஆலங்காயம் சாலையின் வடக்கில் செல்லியம்மன் கோயிலில் இரண்டு கற்சிலைகள் அதிகமாக சிதையாமல் இருக்கின்றன. 1. யோக தட்சிணாமூர்த்தியின் தலையில் ஜடாபாரம் காணப்படுகின்றது. இரண்டு கால்களும் யோக பட்டத்தால் கட்டப்பட்டுள்ளன. 2. வராகியின் வாயில் கோரைப்பல் நன்கு வெளியில் காட்டப்பட்டிருக்கிறது. நான்கு கைகள் உள்ளன. இடது மேல்

கையில் கலப்பை [ஏர்] உள்ளது. இரண்டு சிலைகளும் அமர்ந்த கோலத்தில் செதுக்கப்பட்டிருக்கின்றன. இவை கி.பி.10ஆம் நூற்றாண்டைச் சேர்ந்தது எனலாம்.





### *58:3* துர்கை

போளூர் வட்டம், புல்லூர் என்ற ஊர் செய்யாற்றின் தென்கரையில் இருக்கிறது. இங்குள்ள கி.பி.8ஆம் நூற்றாண்டைச் சார்ந்த துர்கை கற்சிலை



நின்ற கோலத்தில் உள்ளது. தலையில் சிறிய மகுடம். எட்டு கைகள் உள்ளன. கைகளில் சங்கு, சக்கரம், வில், அம்பு, வாள், கேடயம் ஆகியன உள்ளன. இரண்டு கைகள் அபயத்திலும் இடுப்பிலும் காணப்படுகின்றன. துர்கைக்குப்

பின் பக்கத்தில் பீடத்தில் துர்கையின் உயரத்திற்கு அவருடைய ஊர்தி மான் செதுக்கப்பட்டிருக்கிறது. காதுகளிலிருந்து தொங்கும் மிக அழகிய குண்டலங்கள் தோள்களில் நிற்கின்றன. வலது பக்கத்தில் ஒரு பக்தன் மண்டியிட்டு வணங்க இடது பக்கத்தில் ஒருவர் தடியைத் தரையில் ஊன்றி நிற்கிறான்.

ம. காந்தி, வேலூர்.

## 58:4 முசிறித்துறைமுகம் பற்றிய புதிய தொல்லியல் சான்றுகள்

சங்க இலக்கியங்களில் பேரியாற்றின் கரையில் இருந்ததாகக் கூறப்படும் முசிறித்துறைமுகம் பழம் கிரேக்க, ரோமானிய கடற்பயணிகள் குறிப்புகளிலும் பெரிதும் பேசப்படுகிறது. சேரநாட்டுக்குரிய அந்த கடற்பட்டினத்தின் பெயர் காலப்போக்கில் மறைந்துவிட்டது. இப்பொழுது அதை எந்த இடத்தில் பொருத்துவது என்பதில் பல கருத்து வேறுபாடுகள் உள்ளன. பல வரலாற்று ஆசிரியர்களும், தொல்லியலாளர்களும் இன்று பெரியாற்றின் வடகரையில் இருக்கும் கொடுங்கல்லூருக்கு அருகில் பழைய முசிறி இருந்திருக்கலாம் என்பர். இருப்பினும் இப்பகுதியில் இடைக்காலத்தைச் சேர்ந்த தொல்லியல் சான்றுகளே இதுவரை கண்டறியப்பட்டுள்ளன. நிலவியல் மாற்றங்கள் காரணமாக அதற்கு முந்திய பழம்பொருள்கள் நிலத்துக்கடியில் மிக ஆழத்தில் புதையுண்டிருக்கலாம் என்று இதற்கு விளக்கம் அளிக்கப்படுகிறது. கடந்த சில ஆண்டுகளாக கோட்டயம் மகாத்மாகாந்தி பல்கலைக்கழக சமூக அறிவியல் பள்ளியைச் சேர்ந்த கே.பி. ஷாஜன் திருப்புனித்துறை மரபியல் ஆய்வு மையத்தைச் சேர்ந்த பி.ஜே. செரியன் ஆகியோர் பெரியாற்று கழிமுகப் பகுதியில் மேற்கொண்ட கள ஆய்வின் மூலம் சில புதிய செய்திகள் கிடைத்துள்ளன. பெரியாற்றின் தெற்கில் சுமார் 4 கிமீ தொலைவில் உள்ள பரூர் என்ற நகரத்தை ஒட்டியுள்ள பட்டணம் என்ற ஊரில் சுமார் இரண்டு சதுர கிலோமீட்டர் பரப்பில் பண்டைக் காலத்தைச் சேர்ந்த கறுப்பு சிவப்பு ஓடுகள், செங்கற்கள் மற்றும் ரோமானிய மண்சாடித்துண்டுகள் சிதறிக் கிடக்கின்றன. இப்பொருள்கள் தமிழ்நாட்டில் அரிக்கமேடு, அழகன்குளம், கொடுமணல் முதலிய பழம் வரலாற்று முக்கியத்துவம் வாய்ந்த இடங்களில் கிடைத்துள்ள தொல்பொருள்களை ஒத்துக் காணப்படுகின்றன. இவற்றில் ரோமானிய மண்சாடித் துண்டுகள் இரண்டு கி.பி. முதல் நூற்றாண்டைச் சேர்ந்தது என்று தெரிகிறது. மேலும் அண்மையில் மேற்குறிப்பிட்ட குழுவினர் மேற்கொண்ட அகழாய்வில் ஒரு சங்ககாலச் சேரர்காசும் கிடைத்துள்ளது. இதுவரை கேரளப்பகுதியில் பல பெருங்கற்படைச் சின்னங்கள் கண்டறியப்பட்டிருந்தாலும் இவ்வளவு பழம் ஊரிருக்கைப் பகுதி காணப்படவில்லை. பட்டணம் இப்போது கரையிலிருந்து 3.5 கிமீ தொலைவிலும், பெரியாற்று கடல்முகத்திலிருந்து 4.5 கிமீ தொலைவிலும் உள்ளது. இந்த இருப்பிடச் சூழல் முசிறித் துறைமுகம் பற்றிய வருணனையோடு ஒத்துவருகிறது. காலப்போக்கில் முசிறிப்பட்டினத்தின் பெயர் சுருக்கமாக பட்டினம் என மருவியிருக்க வாய்ப்புண்டு. ஆகவே

பெரியாற்றின தென்கரையில் உள்ள இன்றையப் பட்டணமே பழைய முசிறித் துறைமுகத்தின் பகுதியாக இருக்கக்கூடும் என்ற முடிவுக்கு வரவேண்டி உள்ளது. இவ்விடத்தின் முக்கியத்துவம் கருதி விரைவில் இங்கு ஒரு பெரிய அகழாய்வு மேற்கொள்ளத் திட்டமிடப்பட்டுள்ளது (முனைவர் ஷாஜன் முதலியோரின் கட்டுரை வரைவின் சுருக்கம்).

**எ. சுப்பராயலு, தஞ்சாவூர்.**

## 58:5 திருத்தம்

*ஆவணம் இதழ் 14இல் கா.சந்தானலெட்சுமி 'கல்வெட்டில் ஐகாரம்' என்ற தலைப்பில் எழுதியிருந்தார். முதன் முதலாகத் திருநாதர்குன்று வட்டெழுத்துக் கல்வெட்டில் காணப்படும் [ஐ] வடிவிலிருந்து சற்று வளர்ச்சியடைந்த நிலையில் கொடும்பாளூர் கி.பி.10ஆம் நூற்றாண்டு தமிழ்க் கல்வெட்டில் ஐகாரம் காணப்படுகிறது. 'கொடும்பாளூர் திரு ஐந்தளி' என்று குறிக்க வருமிடத்தில் இவ்வெழுத்து [ஐ] என்ற வடிவில் உள்ளது.*

## 58:6 பாண்நாடும் - பெரும்பாணப்பாடியும்

*விண்ணமங்கலம் என்ற ஊரில் படியெடுக்கப்பட்ட கல்வெட்டுகள் 1899 ஆம் ஆண்டு ஆண்டறிக்கையில் (எண்கள்:21-24) மாவட்டம்/வட்டம் குறிப்பில்லாது வெளியிடப்பட்டுள்ளன. முன்னுரைப் பகுதியில் வட ஆர்க்காடு என்று குறிக்கப்பட்டுள்ளது. இது தொடக்க கால கல்வெட்டறிக்கைகளில் பொதுவாகக் காணப்படும் முறை. 1928 ஆம் ஆண்டு இக்கல்வெட்டுகளின் பாடங்கள் தென்னிந்தியக் கல்வெட்டுத் தொகுதி 6இல் (எண்கள்:457-460) வெளியிடப்பட்டபோது வட ஆர்க்காடு மாவட்டம் ஆரணி வட்டம் என்று குறிக்கப்பட்டுவிட்டது. வட ஆர்க்காடு மாவட்டத்தில் ஆரணி, செய்யாறு, வாணியம்பாடி ஆகிய மூன்று வட்டங்களிலும் ஒவ்வொரு விண்ணமங்கலங்கள் உள்ளன. இங்கு ஆரணி என்று குறிக்கப்பட்டது தவறாகும். வாணியம்பாடி வட்டத்தில் உள்ள விண்ணமங்கலத்தில் தான் 1899ல் படியெடுத்த கல்வெட்டுகள் உள்ளன. இங்குள்ள கல்வெட்டில் 'ஜயங்கொண்ட சோழமண்டலத்து பெரும்பாணப்பாடி ஐயம்புழுகூர் நாட்டு விண்ணமங்கலமான விக்கிரம சோழச்சருப்பேதி மங்கலம்' என்று குறிப்புள்ளது. இக்கல்வெட்டுகள் கி.பி.11ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த இரண்டாம் இராசேந்திரன் மற்றும் வீர இராசேந்திரன் காலத்தியவை. ஆரணிவட்ட விண்ணமங்கலம் செஞ்சிப் பகுதியில் உள்ளது. பாணநாடும் பெரும்பாணப்பாடியும் வெவ்வேறு என்றும் பெரும்பாணப்பாடி வாணியம் பாடிப் பகுதியில் உள்ளது என்றும் எ.சுப்பராயலு தெரிவித்த கருத்தும் இங்கு குறிப்பிடத்தக்கது.*

**சு. இராசகோபால், சென்னை.**

## 58:7 பிலிக்கல்பாளையம் சிற்பங்களும் கல்வெட்டும்

நாமக்கல் மாவட்டம் ஜேடர்பாளையம் வழி கொடுமுடி எதிர் கரையில் உள்ளது பிலிக்கல்பாளையம். இங்கு காவிரிக் கரையில் அகத்தியர் பாறை என்ற உயர்ந்த பாறை முகட்டில் சுமார் 6 அடி நீளம் 1½ அடி அகலத்தில் சிற்பத் தொகுதிகள் காணப்படுகின்றன. இதில் வினாயகர், தவத்தில் அகத்தியர், அகத்தியர் கமண்டலத்தின் மீது அமர்ந்துள்ள காகம் எனப் புடைப்பு சிற்பங்களாக உள்ளன.



## 58:8

இவ்வூரின் மத்தியில் கணேசன் அவர்களின் வீட்டிற்கு எதிரில் உள்ள தென்னந்தோப்பில் 7, 8 ஆம் நூற்றாண்டைசே சேர்ந்த பல்லவர் காலத்து சேட்டை தேவி சிலை உள்ளது.



இவ்வூரின் வாய்க்கால் கரையில் தமிழில் தெலுங்கு நடையில் கல்வெட்டு ஒன்று உள்ளது.



1 1867
2 வி ப ஸ்ரீ
3 சிறாங்காப
4 ட்டணம்
5 கந்திபேட்ட
6 வருசின்னி
7 னாயுடு குமாறா
8 டூசுப்பராயு
9 லுனாயுடூ

## 58:10 தோட்டக்குறிச்சி ஐயனார் சிலை

கரூர்-புகளூர் சாலையில் 15 கிமீ தொலைவில் தோட்டக்குறிச்சி உள்ளது. இவ்வூரிலுள்ள மலையம்மன் கோவிலில் 2 அடி அகலம், 3 அடி உயரம் கொண்ட 7, 8 ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த பல்லவர் காலத்து ஐயனார் சிற்பம் உள்ளது.



ஓவியர் வெ. ராஜீ, கரூர்.

## 58:11 விரகனூர் திருமால் மற்றும் கருடாழ்வார் சிற்பங்கள்

மதுரைக்கருகில் விரகனூர் அணைக்கட்டில் 4 அடி உயரமுள்ள திருமால் மற்றும் 3.5 அடி உயரமுள்ள கருடாழ்வார் கற்சிலைகள் கண்டுபிடிக்கப்பட்டு மதுரை அரசு அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. இவற்றின் காலம் 10-11 ஆம் நூற்றாண்டு.





பா. சாம் சத்தியராஜ், மதுரை.

## 58:12 பள்ளபாளையம் திட்டைக்கல்

கரூரிலிருந்து தென்மேற்கு 12 கிமீ தொலைவில் உள்ள பள்ளபாளையம் என்ற ஊரில் பெருங்கற்படைக் காலத்தைச் சார்ந்த திட்டைக்கல் ஒன்று



உள்ளது. இதுபோன்ற திட்டைக்கற்கள் இப்பகுதியில் வெல்லக்கவுண்டன் பட்டி, மண்மங்கலம், காருடையான் பாளையம், திருக்காம்புலியூர் போன்ற இடங்களிலும் உள்ளன.

இல. பரணன், கரூர்

## 58:13 பருத்திப்பள்ளி சமண எல்லைக்கல்

நாமக்கல் மாவட்டம், பருத்திப்பள்ளி ஒரு சமணத்தலம். அங்கு கிடைத்த பார்சுவநாத தீர்த்தங்கரரின் உருவச்சிலை சேலம் அரசு அருங்காட்சியகத்தில் உள்ளது. அங்கு உள்ள கிணற்றுமேட்டில் தலையற்ற மற்றொரு தீர்த்தங்கரர் சிலை கிடக்கிறது. இங்கு கள ஆய்வு செய்தபோது சமணப் பள்ளிக்குப் பள்ளிச்சந்தமாக விடப்பட்ட நிலத்தின் எல்லைக்கல் ஒன்று சமணச் சின்னமான முக்குடையுடன் (சகல பாஷணம், சந்திராதித்யம், நித்ய விநோதம்) கண்டுபிடிக்கப்பட்டது. அதன் அருகே கலப்பை உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. நில எல்லையை உழுது கல்லும் கள்ளியும் நாட்டக் கலப்பை பயன்பட்டது போலும். இவைபோன்று எல்லைக் கற்களில் கலப்பைச் சின்னம் பொறிக்கும் வழக்கம் பிற இடங்களிலும் உண்டு. இலங்கையில் கொடை நில எல்லையில் யானையைப்பூட்டிக் கலப்பையால் உழும் ஓவியம் கிடைத்துள்ளது.



செ. இராசு, ஈரோடு.

# 59. புதிய வெளியீடுகள்

**59:1**

***ச. கிருஷ்ணமூர்த்தி, தமிழ்நாட்டுச் செப்பேடுகள், மெய்யப்பன் தமிழாய்வகம், சிதம்பரம், 2002, தொகுதி-1:368 பக்கங்கள், தொகுதி-2:376 பக்கங்கள்.***

இரு தொகுதிகளாக வெளியிடப்பட்டுள்ளன. முதல் தொகுதியில் செப்பேடு குறித்துப் பொதுவாகத் தெரிந்துகொள்ள வேண்டிய செய்திகள் ஏராளமாக இடம் பெற்றுள்ளன. இத்தொகுதியின் இறுதிப் பகுதியில் பல்லவர், பாண்டியர், சோழர் காலச் செப்பேடுகள் பற்றிய செய்திகள் காட்டப்பட்டுள்ளன. தொகுதி இரண்டில் சேர நாட்டில் கிடைக்கப்பெற்ற செப்பேடுகள், விசயநகர மற்றும் நாயக்கர் காலச் செப்பேடுகள் என தமிழகத்தில் தற்காலம் வரை வெளியிடப்பட்ட செப்பேட்டுச் செய்திகள் காணப்படுகின்றன. இத்தொகுதிகளில் வெளியிடப்பட்டுள்ள செப்பேடுகள் பல வரலாறு, கல்வெட்டு சார்ந்த இதழ்களில் அரசு சார்ந்த துறைகளாலும், பிற அமைப்புகளாலும், தனிநபர்களாலும் ஏற்கனவே வெளியிடப் பட்டவையாகும். புதியனவும் இடம்பெற்றுள்ளன. காட்டாக: புதுக்கோட்டை வட்டார நிலத்தரசுச் செப்பேடுகள்.. இச்செப்பேடுகள் தனிநபர் சேகரிப்பில் இருப்பவை. பொதுவாக மூலபாடங்களுக்கு ஆசிரியர் முக்கியத்துவம் கொடுக்கவில்லை. குறிப்பாக, செப்பேடுகளின் வாயிலாக இதுவரை ஆய்வாளர்களால் அறியப்பட்ட அல்லது இதுகுறித்து ஆசிரியரின் பார்வைக்கு வரப்பெற்ற செய்திகள் இத்தொகுதிகளில் இடம்பெற்றுள்ளன.

முதல் தொகுதியில் 'செப்பேடுகள் ஓர் அறிமுகம்' என்னும் முதல் இயலின் இறுதியில் 'தமிழ் எழுத்துக்களின் வளர்ச்சி' என வரைபடங்கள் கொடுக்கப்பட்டுள்ளன. வரைபடம் II முதல் X முடிய இடம்பெற்றுள்ளன. வரைபடம் I விடுபட்டுள்ளது. அனைத்து எழுத்துக்களின் வளர்ச்சியையும் இவ்வரைபடங்கள் காட்டவில்லை. மேலும், இவ்வரைபடங்கள் சேகரிக்கப்பட்ட நோக்கீட்டு நூலின் பெயர் குறிப்பிடப்பட்டிருந்தால் நன்றாக இருந்திருக்கும். காரணம்: வரைபடங்களில் காட்டப்பட்டுள்ளவை கி.பி.4-5ஆம் நூற்றாண்டு முதல் கி.பி.10ஆம் நூற்றாண்டு வரை தமிழகத்தில் வழக்கத்திலிருந்த தமிழ், வட்டெழுத்து ஆகியவற்றின் வரிவடிவங்களின் பரிணாம வளர்ச்சியை ஒப்பீட்டு நோக்கில் விளக்குபவை. இந்நூலில் வட்டெழுத்து பற்றி ஏதும் பேசப்படாதபோது அதன் ஒருசில எழுத்துக்களின் வளர்ச்சி நிலை மட்டும் கொடுக்கப்பட்டுள்ளமை நூலின் செய்தியோடு தொடர்பில்லாமல் நிற்கிறது. ஆசிரியரின் கடின உழைப்பால் வெளிவந்துள்ள இவ்விரு தொகுதிகளும் தமிழக வரலாற்றிற்குச் சிறந்த ஆதாரமாகத் திகழும் செப்பேடுகள் குறித்த பல வகையான செய்திகளைக் கொண்டுள்ளன.

***பா. ஜெயக்குமார், தஞ்சாவூர்.***

**59:2**

***பா. அன்பரசு, திருமணிமுத்தாற்றுத் திருத்தலங்கள், விஜயம் பதிப்பகம், சேலம், 2003, 144 பக்கங்கள்.***

ஒரு காலத்தில் சேலம் நகருக்குள் பெருக்கெடுத்து ஓடி அந்நகரின் குடிநீர்த் தேவையை நிறைவுசெய்து இன்று வற்றி வறண்டு நகரச் சாக்கடையாகத் திகழும் ஓர் ஓடையை - அன்றைய 'திருமணிமுத்தாறு' என அடையாளம் கண்டு ஆய்வு செய்து நூலாக வெளிக்கொணர்ந்துள்ளார் நூலாசிரியர். இவ்வாற்றின் தோற்றம் தொடங்கி அதன் நெடுகிலும் ஆங்காங்கு அமைந்துள்ள பெருங்கோயில்களையும், சிறுகோயில்களையும் முடிந்தவரை கள ஆய்வு செய்து வெளிப்படுத்தியுள்ள ஆசிரியரின் முயற்சி பாராட்டத்தக்கது. கள ஆய்வு அனுபவங்களைச் சுவைபடச் சொல்வது இந்நூலை தொய்வில்லாமல் படிப்பதற்குத் தூண்டுகிறது. ஒவ்வொரு கோயிலைப் பற்றியும் புராணக்கதை, வரலாற்றுச் செய்திகள், செவிவழிச் செய்திகள் என அனைத்தையும் தொகுத்து வழங்கியுள்ளார். ஒரு சில இடங்களில் காலக் குறிப்புகளைச் சரிபார்க்க வேண்டியது அவசியம் (பக்.59). நீர் வளங்களை இழந்து வரும் இந்நாளில் இத்தகைய ஆய்வு மிக அவசியமானதும் நாடு முழுவதும் மேற்கொள்ளப்படவேண்டுவதும் ஆகும்.

**59:3**

***எம். இராஜகோபாலன், மருந்தீஸ்வரர் எனும் நல் மருத்துவர், A4 ஆனந்த், சென்னை, 2003, 224 பக்கங்கள்.***

சென்னை திருவான்மியூரில் அமைந்துள்ள பாடல்பெற்ற சிவத்தலமாகிய மருந்தீசர் கோயில் பற்றிய ஆய்வாக இந்நூல் வெளிவந்துள்ளது. கி.பி.7ஆம் நூற்றாண்டு முதல் அண்மைக்காலம் வரை இக்கோயில் வளர்ந்துள்ள பாங்கு விரிவாகப் பேசப்படுகிறது. திருவான்மியூர் ஆலய வரலாறு என்னும் தலைப்பின் கீழ் அமைந்துள்ள பகுதி இக்கோயிலும், பிற இடங்களிலும் கிடைத்த கல்வெட்டுகளைக் கொண்டு மேற்கொள்ளப்பட்ட ஆய்வாகத் திகழ்கிறது. இது ஆய்வாளரின் உண்மை தேடும் நோக்கத்திற்குக் கிடைத்த வெற்றியாகும். தல வரலாறு என்னும் பகுதி முற்றிலும் புராணச் செய்திகளைக் கொண்டுள்ளது. தேவார காலம் தொடங்கி இன்றைய நாள் வரை இக்கோயில் தொடர்பாக எழுந்துள்ள இலக்கியங்களை நல்ல முறையில் தொகுத்துக் கொடுத்துள்ளார் நூலாசிரியர். கலைச்சிறப்பு என்னும் பகுதியில் தெய்வ உருவங்களை வரிசைப்படுத்திச் சொல்லியுள்ளார். அவற்றின் உருவ அமைதிகளைச் சற்று விரிவாக ஆய்வுசெய்து அதனைக் கொண்டு அவற்றின் கால நிர்ணயத்தையும் செய்திருக்கலாம்.

**சொ. சாந்தலிங்கம், மதுரை.**

## 59:4

***சி. பத்மநாதன், இலங்கைத் தமிழர் தேசவழமைகளும் சமூக வழமைகளும், குமரன் புத்தக இல்லம், கொழும்பு மற்றும் சென்னை, 2001, 396 பக்கங்கள்.***

இலங்கையில் வாழும் தமிழர்களின் சமூக நடைமுறை, பழக்க வழக்கங்கள், நீதிமுறை, தொழில்கள் ஆகியவற்றைப் பற்றிய தமிழ் ஆவணங்களின் தொகுப்பு நூல் இதுவாகும். கி.பி.18,19ஆம் நூற்றாண்டுகளில் இவற்றைத் தொகுத்து பலர் வெளியிட்டனர். பழமையான சட்ட நெறியாக இது அக்கால ஆட்சியாளரால் அறிவிக்கப்பட்டுள்ளது. இவ்வாவணங்கள் பிரிட்டிஷ் ஆவணச் சுவடிகள் நிலையத்தில் உள்ளவற்றை ஆதாரமாகக் கொண்டுள்ளன. யாழ்ப்பாண தேசத்துத் தேசவழமை, புத்தளம்-கற்பிட்டிப் பகுதி தமிழரின் தேசவழமைகள், திருகோணமலைப் பகுதி தமிழரின் வழமைகள், மட்டக்களப்பு தேசத்து முக்குவர் சட்டம், கரையோரப் பகுதிகளிலுள்ள இசுலாமியர் உலாந்தாக்காரர் தொகுத்த இசுலாமியர் சட்டம், தூத்துக்குடி பரதவர் சாதி வழமை என்று ஆறு பகுதிகளாக ஆவணங்கள் இந்நூலில் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. இவற்றைப் புரிந்துகொள்ளும் முறையில் அருஞ்சொல் விளக்கமும் விரிவான ஆய்வு முன்னுரையும் நூலில் இடம் பெற்றுள்ளன. நூலின் இறுதியில் மூல ஆவணங்களின் புகைப் படங்களும், சொல்லடைவும் கொடுக்கப்பட்டுள்ளன. தென்னிந்தியாவில் உள்ள பரதவர்களின் சொத்துரிமை சமூக நடைமுறை குறித்த இலங்கைத் தமிழ் ஆவணங்கள் முதன்முதலில் இந்நூலில் இடம் பெற்றுள்ளமை குறிப்பிடத்தக்கது.

இந்நூலில் இடம்பெற்றுள்ள ஆவணங்கள் தமிழரின் தமிழ்மொழி வழக்காறுகளை அறிந்து ஆய்வு செய்வதற்குப் பயன்படும். மேலும் இந்நூலாசிரியர் குறிப்பிடுவது போல் இலங்கை, தென்னிந்திய தமிழர்களுக்கிடையே நிலவி வந்துள்ள வரலாற்று ரீதியான தொடர்புகளை ஒப்பீட்டு முறையில் காண்பதற்கு இவ்வாவணங்கள் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை. இந்நூலில் இடம் பெற்றுள்ள ஆவணங்கள் சமூக வரலாற்றிற்கு உதவும் அரிய வரலாற்றுச் சுவடுகளாகும்.

## 59:5

P. Visalakshy, Nandinagari Script, Dravidian Linguistics Association, Tiruvananthapuram, 2003, pp.282.

தென்னிந்தியாவில் சமஸ்கிருத மொழியை எழுதப் பயன்படுத்தப்பட்ட எழுத்துக்களில் ஒன்று நாகரி. நந்திநாகரி என்ற பெயரில் விசயநகர-நாயக்கர் காலங்களில் இது பெருமளவில் ஓலைகள், செப்பேடுகளில் எழுதப்பட்டன. கல்வெட்டுகள், பழங்காசுகள் ஆகியவற்றிலும் இவ்வெழுத்து முறையைப் பயன்படுத்தி வடமொழியை எழுதினர். எனவே தென்னக அரசியல், பண்பாட்டு வரலாற்றைப் புரிந்துகொள்வதற்கு இவ்வெழுத்து முறையை அறிந்துகொள்வது

அவசியமாகும். இரண்டாம் தரச் சான்றுகளைக் கொண்டு வரலாற்று மூலங்களின் ஆவணங்களைப் புரிந்துகொள்ளாமல் அவற்றை நேரடியாகக் கண்டு படிப்பதன் மூலம் உண்மையான வரலாற்றை மாணவர்களும் வரலாற்று ஆர்வலர்களும் அறிந்துகொள்ள முடியும் என்ற முறையில் இந்நூலை அரும்பாடுபட்டு நூலாசிரியர் உருவாக்கியுள்ளார். இந்நூலில் நாகரி எழுத்துகளில் உயிர், மெய், உயிர்மெய், வடிவங்களோடு அவற்றின் கூட்டெழுத்துக்களும், குறைந்த வேறுபாடுகளுடன் ஒத்துக் காணப்படும் எழுத்துக்களின் வடிவங்களும் பட்டியலிட்டுக் காட்டப்பட்டுள்ளமை இந்நூலின் சிறப்பாகும். ஒவ்வொரு நந்திநாகரி எழுத்துக்கு இணையான தேவநாகரி எழுத்தும், அவற்றை எவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்பதற்கு உச்சரிப்புக் குறியீடுகளுடன் ரோமானிய எழுத்துக்களின் வரிவடிவங்களும் தரப்பட்டுள்ளன. மேலும் நந்திநாகரி எழுத்துக்களை அறிந்து அவற்றை சொற்களாக்கிப் படிக்கும் பயிற்சியும் இந்நூலில் கொடுக்கப்பட்டுள்ளது. நூலின் இறுதியில் நந்திநாகரியில் அமைந்த பண்டைய மூல ஆவணங்கள், படங்கள் அவற்றிற்குரிய மூலபாடங்களோடு தற்காலத் தேவநாகரி வரிவடிவங்களில் கொடுக்கப்பட்டுள்ளன.

இந்நூலின் முன்னுரையில் சிந்துவெளி நாகரிகத்திலிருந்து அண்மைகாலம் வரை இந்திய நாட்டில் எழுத்துக்கள் வளர்ந்த வரலாறும், நந்திநாகரி எழுத்து முறையின் விரிவான வரலாறும் தரப்பட்டுள்ளன. பண்டைய ஆவணங்களை எல்லோரும் படிக்க வேண்டும் என்ற நோக்கில் படைக்கப்பட்ட இந்நூலின் ஆசிரியரை வரலாற்று உலகம் பாராட்டத்தான் வேண்டும்.

***59:6***

P. Visalakshy, The Grantha Script, Dravidian Linguistics Association, Tiruvananthapuram, 2003, pp.320.

தென்னிந்தியாவில் குறிப்பாகத் தமிழ்நாடு, கேரளப் பகுதிகளில் வடமொழியை எழுதப் பயன்படுத்தப்பட்ட எழுத்து கிரந்தமாகும். பல்லவர், சோழர், பாண்டியர் செப்பேடுகளின் வடமொழிப் பகுதியும், முக்கிய கல்வெட்டுகளும் கிரந்த எழுத்துகளிலேயே எழுதப்பட்டுள்ளன. தமிழ் கல்வெட்டுகளும் கிரந்த எழுத்துக்கள் விரவியே எழுதப்பட்டுள்ளன. தமிழகத்திலும் கேரளத்திலும் ஓலையில் எழுதப்பட்ட கிரந்தச் சுவடிகள் ஏராளம். பண்டைய ஆவணங்களைப் படிப்போர் எண்ணிக்கை இன்று குறைந்து வரும் நிலை உள்ளது. இதனை உணர்ந்து மாணவர்களும் வரலாற்றில் ஈடுபாடு கொண்டவர்களும் கிரந்த எழுத்துக்களைக் கற்றுக் கொள்ள வேண்டும் என்ற நோக்கில் இந்நூலினை ஆசிரியர் படைத்துள்ளார். இந்நூலில் கிரந்த எழுத்துக்களின் அனைத்து வடிவங்களும் அவற்றிற்கு இணையான தேவநாகரி வடிவங்களோடு பட்டியலிட்டுத் தரப்பட்டுள்ளன. அவற்றை எவ்வாறு உச்சரிக்க வேண்டும் என்பதற்குத் துணையாக ரோமானிய

வரிவடிவங்களும் கொடுக்கப்பட்டுள்ளன. மேலும் கிரந்த எழுத்துக்களில் அமைந்த சொற்கள் பயிற்சிக்காகப் பட்டியலிட்டுத் தரப்பட்டுள்ளன. நூலின் இறுதியில் கிரந்த எழுத்துக்களில் அமைந்த மூல ஆவணங்கள் அவற்றிற்கு இணையான தேவநாகரி எழுத்து முறையில் கொடுக்கப்பட்டுள்ளன.

நூலின் முன்னுரையில் இந்திய நாட்டில் பல்வேறு எழுத்துக்கள் தோன்றி வளர்ந்த வரலாறு எடுத்துக் கூறப்பட்டிருக்கிறது. இதில் தென்னிந்திய 'எழுத்துக்களின் வளர்ச்சி பற்றி நன்கு கூறப்பட்டுள்ளது. குறிப்பாக வட்டெழுத்தும் அதன் வேறுபட்ட வடிவங்களான கோலெழுத்து, மலையாண்மா பற்றியும் விரிவாக எடுத்துரைக்கப்பட்டுள்ளது. தென்னக எழுத்துமுறை பற்றிய வரலாற்று ஆய்வில் இந்நூலாசிரியரின் நாகரி, கிரந்த எழுத்துக்கள் பற்றிய நூல்கள் இடம் பெறத் தக்கவையாகும்.

**வெ. வேதாசலம், மதுரை.**

***59:7***

***நடன. காசிநாதன், தமிழர் தெய்வங்கள், தென்றல் நிலையம், மேல சன்னதி, சிதம்பரம், 2003, 192 பக்கங்கள்.***

இந்நூலாசிரியர் முன்பு பல இதழ்களில் வெளியிட்ட கட்டுரைகள் ஒரு சேர இந்நூலில் தரப்பட்டுள்ளன. கன்னியர் எழுவர், சாத்தன், கணபதி, சக்தி, ஐந்திணைத் தெய்வங்கள், இந்திரன், இலிங்கோத்பவர் ஆகிய ஏழு தெய்வங்கள் பற்றிய கட்டுரைகளும்; சீராளன், சுந்தரர், நந்தனார், மனுநீதிச் சோழர் ஆகிய அடியார்கள் பற்றிய நான்கு கட்டுரைகளும்; தக்கன்-பைரவர் பற்றி ஒரு கட்டுரையும் உள்ளன. கலைக் கூறுகளான கோயில்கள், சிற்பங்கள், செப்புச் சிலைகள், சுடுமண் உருவங்கள் நடனம் பற்றிய ஐந்து கட்டுரைகளும் இதில் அடங்கும். நூலாசிரியரால் அறியப்பட்ட தகவல்களும், கல்வெட்டு, இலக்கியம், புராணம், சிற்பங்களின் அடிப்படையிலான செய்திகளும் மேற்கோள்களும் நிறையக் காணப்படுகின்றன. சில கட்டுரைகள் அடிக்குறிப்புகள் ஏதுமில்லாமலும், சில கட்டுரைகள் நாற்பதுக்கும் மேற்பட்ட குறிப்புகளைக் கொண்டும் விளங்குகின்றன. ஆய்வாளர்கள் மூலநூல்களையும், துணை நூல்களையும் அறிந்து கொள்ளவும் நீண்ட ஆய்வுகள் மேற்கொள்ளவும் இக்குறிப்புகள் உதவக் கூடியவை. எழுத்துநடை எளிமையாக உள்ளது. எனினும் எளியவர்கள் தெய்வ உருவங்களை அறிந்துகொள்ள படங்களே இல்லை என்பது ஒரு குறை. நூலின் தலைப்பிற்கேற்ப கட்டுரைகள் தமிழர், தமிழகம் என்ற கோணத்திலேயே அமைந்துள்ளன.

**சு. இராசகோபால், சென்னை.**

**வ. குருநாதன், *புறநானூறு மூலமும் உரையும்: முன்செம்பாகம் (1-200)*, வடிவேல் பதிப்பகம், தஞ்சாவூர், 2003, 403 பக்கங்கள்.**

சங்க இலக்கிய எட்டுத்தொகை நூல்களுள் ஒன்றாய், பழந்தமிழ் மக்களின் வாழ்வியல், அரசியல், சமூகவியல் வரலாறு, பண்பாட்டுப் பழக்க வழக்கங்களையும் அறிய உதவும் அரும் பெட்டகம் *புறநானூறு*. இதன் பழையவுரையுடன் முதலில் பதிப்பித்தவர் உ.வே. சாமிநாதையர். இதன்பிறகு பல உரைகள் வெளிவந்துள்ளன. இப்புதியவுரை ஆய்வாளர் அனைவரும் புரிந்து பயன்கொளத்தக்க விளக்கங்களோடும் ஆய்வுக் குறிப்புக்களோடும் அமைந்துள்ளது. புறநூனூற்றுப் பாடல்களுக்குப் பெரும்பாலும் பாடப்பட்டோர் பெயர்களும் அவை இல்லாத இடங்களில் பாடல் தொடர்களும் தலைப்புக்களாகத் தரப்பெற்றுள்ளன. பாடல்களின் திணை, துறைபாடினோர், பாடப்பட்டோர், பெயர்க்குறிப்புக்கள் முந்தைய பதிப்புக்களில் இல்லாத முறையில் அவ்வப் பாடல்களின் அடியிலேயே வெளிப்படக் கொடுக்கப்பட்டுள்ளன. பாடல் சொற்கள் வேண்டுமளவு .பிரிக்கப்பட்டும் நிறுத்தற்குறிகள் இடப்பெற்றும் அமைந்துள்ளது. பாடல்களின் உரை பொருள்முறையிலும், விளக்கவுரை பாடற் சூழல்களை எடுத்து அறிமுகப்படுத்தியும், அருஞ்சொற் பொருளுரைத்தும், வரலாற்று விளக்கங்கள் காலமுறைக்குறிப்புக்கள், பண்பாட்டு மரபுரைகள் மொழிந்தும் தெளிவுறுத்துகின்றது.

**கா. ராஜன், தஞ்சாவூர்.**

# 60. தமிழகத் தொல்லியல் கழக 13ஆம் ஆண்டுக் கருத்தரங்க அறிக்கை

தமிழகத் தொல்லியல் கழகத்தின் 13ஆம் ஆண்டுக் கருத்தரங்கம் மற்றும் ஆவணம் இதழ்-14 வெளியீட்டு விழா 2003 ஜூலைத் திங்கள் 19, 20 ஆகிய இரு நாட்கள் வேலூர் கோட்டையில் உள்ள இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறையின் அருங்காட்சியக வளாகத்தில் நடைபெற்றது. இக்கருத்தரங்கின் உள்ளூர்ச் செயலர்களாக திரு. ம. காந்தி (காப்பாட்சியர், அரசு அருங்காட்சியகம், வேலூர்), திரு சு.இராசவேலு (கல்வெட்டாய்வாளர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, சென்னை) ஆகியோர் செயல்பட்டனர்.

19.7.2003 அன்று காலை 10.00 மணிக்கு தொடக்கவிழா நடைபெற்றது. முனைவர் ஆ.சி.மோகன்தாஸ், இ.ஆ.ப., (மாவட்ட ஆட்சியர், வேலூர்) தலைமையேற்றார். கொடுமுடி ச. சண்முகன் (தலைவர், தமிழகத் தொல்லியல் கழகம்) வரவேற்புரை வழங்கினார். பழமையான கல்வெட்டுகள் இருக்கும் இடங்களைப் பாதுகாக்க உள்ளூர் மக்களிடையே விழிப்புணர்வை ஏற்படுத்த வேண்டியதன் அவசியத்தையும் தமிழ் எழுத்து வளர்ச்சி பற்றிய பாடத்தை தொடக்க, உயர்நிலைப் பள்ளிகளில் கற்றுத் தர வேண்டியதன் அவசியத்தையும் வரவேற்புரையில் எடுத்துரைத்தார். திரு. டி. சத்தியமூர்த்தி (தொல்லியல் கண்காணிப்பாளர், இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை, சென்னை வட்டம்) விழாவைத் தொடங்கி வைத்து சிறப்புரை நல்கினார். அரசே எல்லாவற்றிற்கும் உதவ முடியாத சூழலில் இதுபோன்ற அமைப்புகளால் மட்டுமே தொல்லியல் - கல்வெட்டியல் துறை சார்ந்த பணிகளைச் செய்ய முடியும் எனக் கூறினார். கல்வெட்டறிஞர் திரு. ஐராவதம் மகாதேவன் (இ.ஆ.ப. ஓய்வு) ஆவணம் 14ஆவது இதழை வெளியிட்டுத் தொடக்கவுரை ஆற்றிச் சிறப்பித்தார். ஆய்வுக் கட்டுரைகள் எழுதும் வரலாற்று ஆய்வாளர்கள் முன்பு ஆங்கில நூல்களையே நோக்கீட்டு நூல்களாகப் பயன்படுத்தினர்; ஆனால், இன்று ஆங்கிலத்தில் கட்டுரை எழுதும் ஆய்வாளர்கள்கூட ஆவணம் இதழை நோக்கீட்டு நூலாகப் பயன்படுத்துவதைப் பார்க்கும்போது ஆவணம் இதழின் முக்கியத்துவம் வெளிப்படுகிறது எனக் குறிப்பிட்டு கழகம் ஆற்றிவரும் பணியைப் பாராட்டினார். இதழைப் பெற்றுக்கொண்டு முனைவர் ரா. கண்ணன், இ.ஆ.ப. (ஆணையர், அரசு அருங்காட்சியகங்கள் மற்றும் வேளாண்மைத் துறை) உரையாற்றினார். தொல்லியல்மீது அவருக்கு ஏற்பட்ட ஈடுபாட்டை தனது அனுபவத்தைக் கொண்டு விளக்கியதோடு தொல்லியல் எச்சங்களைப் பாதுகாப்பதில் அருங்காட்சியகங்கள் முக்கியப் பங்கு வகிப்பதையும் சுட்டிக் காட்டினார். முனைவர் செ. இராசு (முன்னாள் தலைவர், கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக்கழகம்), முனைவர் கோ. தங்கவேலு (முன்னாள்

தலைவர், வரலாற்றுத் துறை, மதுரை காமராசர் பல்கலைக்கழகம்), திரு.க.இலக்குமி நாராயணன் (உதவி இயக்குநர், அருங்காட்சியகங்கள் துறை, சென்னை) ஆகியோர் வாழ்த்துரை வழங்க திரு. சு. இராசவேலு ஆற்றிய நன்றியுரையுடன் தொடக்கவிழா நிறைவடைந்தது. தொடர்ந்து கருத்தரங்கின் முதல் அமர்வு நடைபெற்றது.

பிற்பகல் அறக்கட்டளைச் சொற்பொழிவுகள் நடைபெற்றன. திரு.ஐராவதம் மகாதேவன் அவர்கள் நிறுவிய தி.நா. சுப்பிரமணியம் அறக்கட்டளைச் சொற்பொழிவை முனைவர் பரமு. புட்பரட்ணம் (முதுநிலை விரிவுரையாளர், வரலாற்றுத் துறை, யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம், இலங்கை) **இலங்கைத் தமிழ்ச் சாசன ஆராய்ச்சியும் கந்தளாய்ச் சாசனமும்** என்ற தலைப்பில் ஆற்றினார். இச்சொற்பொழிவு நிகழ்விற்கு முனைவர் எ.சுப்பராயலு தலைமை வகித்தார். கோவிலூர் ஆதின அறக்கட்டளைச் சொற்பொழிவை திரு மா.சந்திரமூர்த்தி (முன்னாள் துணை இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை) **பாண்டியர் காலச் செப்புத் திருமேனிகள்** என்ற தலைப்பில் உரை நிகழ்த்தினார். இப்பொழிவிற்கு முனைவர் ச. மெய்யப்பன் தலைமையேற்றார். அறக்கட்டளைச் சொற்பொழிவுகளுக்குப் பிறகு நடைபெற்ற சிறப்புச் சொற்பொழிவில் தேசிய கடல்வள தொழில்நுட்ப நிறுவனத்தைச் (National Institute of Ocean Technology, Chennai) சேர்ந்த முனைவர் எஸ். பத்ரிநாத் (ஆலோசகர், கடல்சார் தொல்லியல்) **காம்பே வளைகுடாவில் பண்டைய நாகரிக எச்சங்கள்** என்ற தலைப்பில் ஒளிப்படங்களுடன் உரையாற்றினார். மாலை 6.45 மணி முதல் 8.30 வரை செயற்குழுக் கூட்டம் நடைபெற்றது.

20.7.2003 அன்று காலையில் பேராளர்கள் திருமலை (அரஹந்தகிரி)யில் (போளூர் வட்டம், திருவண்ணாமலை மாவட்டம்) காணப்படும் சமணக்கோயில் கலைச் செல்வங்களையும் குறிப்பாக **ஸ்ரீநேமிநாதரின் 18 அடி** உயரமுள்ள சிலையையும் பார்வையிட்டனர். முனைவர் இரா. பூங்குன்றன் (உதவி இயக்குநர், தமிழ்நாடு அரசு தொல்லியல் துறை) திருமலையின் வரலாற்றுச் சிறப்பு குறித்து பேராளர்களுக்கு உரை நிகழ்த்தினார். சமணர்களின் செயல்பாடுகள் தமிழகத்தில் பொதுவாக கி.பி.3ஆம் நூற்றாண்டு முதல் சிறப்பாகக் காணப்பட்டதென்றாலும் திருமலையில் காணப்படும் சமண எச்சங்கள் கி.பி.7ஆம் நூற்றாண்டிலிருந்து தொடங்குவதாகத் தெரிவித்தார். குறிப்பாக சோழர் ஆதிக்கத்தின் கீழ் திருமலை சிறந்து விளங்கியதை அங்கு கிடைக்கின்ற கல்வெட்டுகளில் இருந்து அறியமுடியும் என்பதோடு குந்தவை ஜினாலயம் ஒன்றும் அங்கு உருவாக்கப்பட்டிருந்ததையும் கல்வெட்டுச் சான்றுடன் எடுத்துக் காட்டி திருமலையின் வரலாறு இடைக்காலம் வரை சிறப்புற்றிருந்தது என்பதை அவரது உரையில் குறிப்பிட்டார். திருமலையில் தமிழகத் தொல்லியல் கழகத்தின் பொதுக்குழு கழகத் தலைவர் கொடுமுடி ச.சண்முகன் தலைமையில் நடைபெற்றது. பொதுக்குழுவில் நடைபெற்ற தேர்தல் மூலம்

அடுத்த மூன்றாண்டுகளுக்குப் புதிய செயற்குழு உறுப்பினர்கள் பதவி ஏற்றுக்கொண்டனர்.

திருமலையில் குருகுலம் அமைத்து அப்பகுதி மக்களின் மேம்பாட்டிற்குத் துணையாகப் பல சமூகப் பணிகளை நடத்திவரும் **பட்டாரக சிந்தாமணி ஸ்வஸ்தி ஸ்ரீ தவளகீர்த்தி சுவாமிகள்** பேராளர்கள் அனைவரையும் வரவேற்று சிற்றுண்டி அளித்து, பரிசளித்துச் சிறப்பித்தார். முன்னதாக கல்வெட்டறிஞர் திரு. ஐராவதம் மகாதேவன் ஆற்றியுள்ள கல்வெட்டுப் பணிகளைப் பாராட்டி அவருக்கு சுவாமிகள் முதன்மைச் சிறப்பு அளித்தார். அப்பொழுது ஸ்வஸ்திஸ்ரீ தவளகீர்த்தி சுவாமிகள் பரிசளித்த சுமார் 110 கிராம் எடையுள்ள வெள்ளியினாலான விளக்கு/குடையை திரு ஐராவதம் மகாதேவன் தமிழகத் தொல்லியல் கழகத்துக்கு அன்பளிப்பாக வழங்கினார் என்பது குறிப்பிடத்தக்கது.

இக்கருத்தரங்கின் 3 அமர்வுகளில் 15 கட்டுரைகள் படிக்கப்பட்டன. அவை பின்வருமாறு :

நாள் : 19.07.2003 | அமர்வு - 1 | நேரம் : 12.00 - 13.00

**தலைவர் : முனைவர் கோ. விசய வேணுகோபால்**

1. க. பன்னீர்செல்வம் - தமிழ்க் கல்வெட்டுகளில் மணவிலையும் மக்கட்பேறும்
2. முத்து எத்திராசன் - மல்லம்பாடி மட்பாண்டக் குறியீடுகள்

நாள் : 20.07.2003 | அமர்வு - 2 | நேரம் : 14.00 - 15.00

**தலைவர் : கி. ஸ்ரீதரன்**

3. ஜெ.இராஜாமுகமது, கரு. இராசேந்திரன் - முன்னூற்றுவர்
4. செ. சாந்தலிங்கம் - மதுரைப் பகுதியில் அண்மைக்காலக் கண்டுபிடிப்புகள்
5. க. பன்னீர்செல்வம் - முடியூர் நாடு வரலாற்றுப் பெயராய்வு
6. எம். இராமகிருஷ்ணன் - வரலாற்றிற்கு முற்பட்ட விரிஞ்சிபுரம்
7. நாக. கணேசன் - செக்குகளும் செக்காரும்
8. கோ. திருமூர்த்தி - பிரம்மதேசத்து துர்க்கை

நாள் : 20.07.2003 | அமர்வு - 3 | நேரம் : 15.00 - 16.30

**தலைவர் : முனைவர் இரா. பூங்குன்றன்**

9. செ. இராசு - சாகாட நக்கன்
10. சி. வீரராகவன் - விழுப்புரம் மாவட்டத்தில் வீரக்கல் மற்றும் தூம்புக்கல்
11. அ. சந்திரபோஸ் - தானவர் குமிழிக் கல்வெட்டு
12. ப. வெங்கடேசன் - நரியாட்டுதலும் புலியாட்டுதலும் - ஒரு கள ஆய்வு
13. ச. இரவி - காளப்பட்டி (கோவைக்கருகில்) தொல்லியல் சான்றுகள்

14. பா. சாம்சத்தியராஜ் - விரகனூர் (மதுரைக்கருகில்) அணைக்கட்டில் கண்டெடுக்கப்பட்ட திருமால் மற்றும் கருடாழ்வார் சிற்பங்கள்

15. செ. கோவிந்தராஜ் - தமிழகக் கோயில் கட்டடக்கலை கூறுகள் சிலவற்றின் தோற்றம் - ஓர் ஆய்வு

மாலையில் நிறைவு விழா நடைபெற்றது. இவ்விழாவிற்கு கழகத்தின் புதிய தலைவர் முனைவர் செ. இராசு தலைமை வகித்தார். கழக முன்னாள் தலைவர் கொடுமுடி ச. சண்முகன் வரவேற்புரை நல்கினார். முனைவர் சொ. சாந்தலிங்கம் (மாவட்ட தொல்லியல் அலுவலர், மதுரை மாவட்டம்) அளித்த நூல் அறிமுகவுரையுடன் கழக உறுப்பினர்கள் எழுதிய

1. அ. சந்திரபோஸ் - தானவநாட்டு வரலாறு
2. ஆர். மணி - செஞ்சிக்கோட்டை வரலாறு
3. பரமு. புட்பரட்ணம் - தொல்லியல் நோக்கில் ஈழத்தமிழரின் பண்டையகால மதமும் கலையும்
4. R. Mani - History of Vellore Fort

ஆகிய நூற்களை முனைவர் அ. சுசிலாதிருமாறன் (துணைவேந்தர், திருவள்ளுவர் பல்கலைக்கழகம், வேலூர்) வெளியிட முனைவர் கே.ஜி. தஞ்சி (முன்னாள் முதல்வர், அரசு கல்வியியல் கல்லூரி, வேலூர்) பெற்றுக் கொண்டார். சிறப்புரை ஆற்றிய முனைவர் கே.ஜி. தஞ்சி உள்ளூர் வரலாற்றை அப்பகுதியைச் சேர்ந்த ஆய்வாளர்கள் வெளிக்கொணர வேண்டியதின் முக்கியத்துவத்தை எடுத்துரைத்தார். நிறைவுரை நல்கிய முனைவர் அ.சுசிலாதிருமாறன் உலகளவில் தொல்லியல் பெற்றிருக்கும் சிறப்பிடத்தை வெளிப்படுத்தினார். திரு. ம.காந்தி நன்றிகூற கழக 13ஆவது கருத்தரங்க விழா நாட்டுப்பண்ணுடன் இனிதே நிறைவுற்றது.

பா. ஜெயக்குமார்
செயலர்

# கட்டுரையாளர்கள்


**முனைவர் சு. இராசகோபால்**
இராஜாஜி இல்லம்
8, முதல் தெரு,
வெங்கடேஸ்வரா நகர்
அடையாறு, சென்னை - 600 020.

**முனைவர் சு. இராசவேலு**
முதுநிலைக் கல்வெட்டாய்வாளர்
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை
புனித ஜார்ஜ் கோட்டை
சென்னை - 600 009.

**முனைவர் செ. இராசு**
64/5, டிபிஜி காம்ப்ளக்ஸ்
பாலக்காட்டுத் தோட்டம்
புதிய ஆசிரியர் குடியிருப்பு அருகில்
ஈரோடு - 638 011.

**திரு. கரு. இராசேந்திரன்**
மேலப்பனையூர் (அஞ்சல்)
விராச்சிலை (வழி)
புதுக்கோட்டை - 622 420.

**திரு. பொ. இராசேந்திரன்**
கல்வெட்டாய்வாளர்
தமிழக அரசு தொல்லியல் துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை - 625 001.

**திரு. இரா. இராமமூர்த்தி**
கைக்குறிச்சி (அஞ்சல்)
திருமலைராயசமுத்திரம்
புதுக்கோட்டை - 622 303.

**திரு. பெ. இலெனின்**
இந்தியத் தொல்லியல் அளவீட்டுத் துறை
14, 3வது குறுக்குத்தெரு
அண்ணா நகர், நெல்லித்தோப்பு
பாண்டிச்சேரி - 605 005.

**திரு. ஐராவதம் மகாதேவன்**
பி1, நறுமுகை அபார்ட்மெண்ட்ஸ்
இரண்டாவது தெரு
பிருந்தாவன் நகர் விரிவாக்கம்
ஆதம்பாக்கம்
சென்னை - 600 088.

**திரு. நாக. கணேசன்**
தமிழக அரசு தொல்லியல் துறை
கரூர் - 639 001.

**முனைவர் தெ. கல்யாணி**
முதுநிலை விரிவுரையாளர்
பாரதி மகளிர் கல்லூரி
சென்னை - 600 108.

**திரு. ப. காசிலிங்கம்**
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
கரூர் - 639 002.

**திரு. ம. காந்தி**
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
வேலூர் - 632 004.

**திரு. சா. கிருஷ்ணமூர்த்தி**
தொல்லியல் அலுவலர்
தமிழக அரசு தொல்லியல் துறை
சிபிடி வளாகம், தரமணி
சென்னை - 600 113.

**திரு. கி. குமார்**
இ/103, தாடண்டர் நகர்
சைதாப்பேட்டை
சென்னை - 600 015.

திரு. தெ. கோபாலன்
36/121, செந்தில் இல்லம்
கல்படி தெரு
நாகராசா கோயில் அருகில்
நாகர்கோயில் - 629 001.

முனைவர் கொடுமுடி சண்முகம்
11-பி, இரண்டாம் அவின்யு
இந்திரா நகர்
சென்னை - 600 020.

முனைவர் அ. சந்திரபோஸ்
விரிவுரையாளர்
டாக்டர் அம்பேத்கர் சட்டப்
பல்கலைக்கழகக் கல்லூரி
செங்கல்பட்டு - 603 001

திரு. மா. சந்திரமூர்த்தி
17, போயஸ் சாலை முதல் தெரு
தேனாம்பேட்டை
சென்னை - 600 018.

முனைவர் சொ. சாந்தலிங்கம்
தொல்லியல் அலுவலர்
தமிழக அரசு தொல்லியல் துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை - 625 001.

திரு. பா. சாம் சத்தியராஜ்
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
மதுரை - 625 020.

திரு. ஆ. சீதாராமன்
12, ராஜராஜன் நகர்
மானோஜிபட்டித் தெற்கு
தஞ்சாவூர் - 613 004.

முனைவர் எ. சுப்பராயலு
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

திரு. செந்தீ நடராசன்
36/121, செந்தில் இல்லம்
கல்படி தெரு
நாகராசா கோயில் அருகில்
நாகர்கோயில் - 629 001.

திரு. பு.சி. தமிழரசன்
30/1, ஆசிரியர் குடியிருப்பு
மணிப்பள்ளம் சாலை
புதுக்கோட்டை - 622 005.

ஓவியர் த.த.தவசிமுத்து
36, பூவரசூர் மெயின் ரோடு
ஆறுமுகநேரி - 628 202
தூத்துக்குடி மாவட்டம்

முனைவர் இல. தியாகராஜன்
பேராசிரியர், வரலாற்றுத் துறை
அரசுக் கலைக்கல்லூரி
அரியலூர் - 621 713.

திரு. வெ. இரா. துரைசாமி
கோயில்காடு
வெள்ளக்கல்பட்டி (அஞ்சல்)
நாமகிரிப்பேட்டை (வழி)
பின்கோடு 637 406.

திரு. ஆ. துரைரங்கம்
தலைவர், தத்துவம் யோகம் மற்றும்
பண்பாட்டுச் சுற்றுலா துறை
தாகூர் கலைக்கல்லூரி
பாண்டிச்சேரி - 605 001.

திரு ஆ. துளசேந்திரன்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

முனைவர் கி. நாச்சிமுத்து
தலைவர், தமிழ்த் துறை
கேரளப் பல்கலைக்கழகம்
காரியவட்டம்
திருவனந்தபுரம் - 695 681.

திரு. இல. பரணன்
யாசிக்கா ஸ்டுடியோ
12, முருகநாதபுரம் வடக்கு
கரூர் - 639 002.

முனைவர் மா. பவானி
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

திரு. இரா. பாஸ்கரன்
46, சங்கரமடம் வீதி
புதுக்கோட்டை - 622 005.

முனைவர் ப. புஷ்பரட்ணம்
முதுநிலை விரிவுரையாளர்
யாழ்ப்பாணப் பல்கலைக்கழகம்
இலங்கை.

திரு. ப. பூபாலன்
9, பாட்டைத் தெரு
நவல்பூர்
இராணிப்பேட்டை- 632 402.

திரு. முத்து எத்திராசன்
128, காமராசர் குடியிருப்பு
தெற்கு உசுமான் சாலை
தியாகராயர் நகர்
சென்னை - 600 017.

முனைவர் கா. ராஜன்
இணைப்பேராசிரியர்
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

முனைவர் ஜெ. ராஜாமுகமது
காப்பாட்சியர்
அரசு அருங்காட்சியகம்
புதுக்கோட்டை - 622 001.

ஓவியர் வெ. ராஜூ
26/18, வஞ்சியம்மன் கோவில் தெரு,
கரூர் - 639 001.

திரு. மு. ராஜேஷ்
முனைவர் பட்ட ஆய்வாளர்
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

திரு. சி. லெட்சுமணன்
எண்.5-1, 33, நியூ காலனி
சிங்கம்புணரி -630 502.

திருமதி அர. வசந்தகல்யாணி
கல்வெட்டாய்வாளர்
தமிழக அரசு தொல்லியல் துறை
சிபிடி வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

முனைவர் கோ. விசயவேணுகோபால்
பிரெஞ்சு நிறுவனம்
11, புனித லூயி தெரு
பாண்டிச்சேரி - 605 001.

திரு. வீரராகவன்
ஜே.ஜி.எம். பள்ளி
66, முத்துவேல் லே அவுட்
கே.கே. சாலை
விழுப்புரம் - 605 602.

திரு. பா. வெங்கடேசன்
ஆசிரியர், 3/178, கம்பர் தெரு
பெல்லியப்பா நகர்
வாலாஜாபேட்டை - 632 513.

திரு. எம். வெங்கடேசன்
22, வேட்டை ராமசாமி ராஜா தெரு
தென்காசிச் சாலை
இராஜபாளையம் - 626 117.

திரு. ந. வேங்கடேசன்
11, கிழக்கு சந்நிதி வீதி
வில்லியனூர்
பாண்டிச்சேரி - 605 110.

முனைவர் வெ. வேதாசலம்
கல்வெட்டாய்வாளர்
தமிழக அரசு தொல்லியல் துறை
திருமலை நாயக்கர் அரண்மனை
மதுரை - 625 001.

முனைவர் பா. ஜெயக்குமார்
கல்வெட்டியல் & தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 005.

திரு. கி. ஸ்ரீதரன்
பதிவு அலுவலர்
தமிழக அரசு தொல்லியல் துறை
சிபிடி வளாகம், தரமணி,
சென்னை - 600 113.

Thiru K. Panneer Selvam
Epigraphist
O/o, The Director of Epigraphy
Archaeological Survey of India
Old University Office Building
Mysore - 570 005.

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### RECEIPTS AND PAYMENTS ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2004

| | | | |
|---|---|---|---|
| Opening Balance: | | Printing | 25,685.00 |
| Cash in hand | 432.68 | Xerox & Stationary | 4,402.85 |
| Cash at Bank<br>Indian Bank,<br>Thanjavur | 820.00 | Audit Fees | 750.00 |
| SBI, Thanjavur | 38,403.11 | Salary | 1,000.00 |
| Sale of Books | 7,453.00 | Indian Bank FD | 10,000.00 |
| Membership fees | 25,500.00 | Honorarium | 4,000.00 |
| Interest | 8,759.52 | Postage | 5,148.00 |
| Donation | 4,050.00 | Transport & freight Charges | 1,475.00 |
| | | Bank Charges | 100.00 |
| | | General Expenses | 1,843.60 |
| | | **Closing Balance** | |
| | | SBI, Thanjavur | 16,070.23 |
| | | Indian Bank, Thanjavur | 14,806.00 |
| | | Cash in hand | 137.63 |
| | **85,418.31** | | **85,418.31** |

(Sd.) V. Ramasamy
Chartered Accountant
951, East Main St., Thanjavur-1.

## TAMIL NADU ARCHAEOLOGICAL SOCIETY, THANJAVUR

### INCOME AND EXPENDITURE ACCOUNT FOR THE YEAR ENDED 31.03.2004

| | | | |
|---|---|---|---|
| To Printing Charges | 25,685.00 | By Sales of Books | 7,453.00 |
| To Xerox & Stationary | 4,402.85 | By Membership Fees | 25,500.00 |
| To Audit Fees | 750.00 | By Interest | 8,759.52 |
| To Salary | 1,000.00 | By Donation | 4,050.00 |
| To Honorarium | 4,000.00 | | |
| To Postage | 5,148.00 | | |
| To Transport (Freight) | 1,475.00 | | |
| To Bank Charges | 100.00 | | |
| To General Expenses | 1,843.60 | | |
| To Excess of Income Over Expemditure | 1,358.07 | | |
| | **45,762.52** | | **45,762.52** |

### BALANCE SHEET AS ON 31.03.2003

| LIABILITIES<br>FUND ACCOUNT: | | ASSETS | |
|---|---|---|---|
| Opening Balance | 2,10,655.79 | Fixed Deposit | 1,70,000.00 |
| Add Income | 1,358.07 | Furniture | 11,000.00 |
| | | Cash at Bank: | |
| | 2,12,013.86 | Indian Bank, Thanjavur | 14,806.00 |
| | | SBI, Thanjavur | 16,070.23 |
| | | Cash in hand | 137.63 |
| | **2,12,013.86** | | **2,12,013.86** |

(Sd.) V. Ramasamy
Chartered Accountant
951, East Main St., Thanjavur-1.

# அஞ்சலி

## 'பதிப்புச் செம்மல்' முனைவர் ச. மெய்யப்பன்



***பிறப்பு : 21.06.1933*** ***மறைவு : 28.6.2004***

புதுக்கோட்டை மாவட்டம், திருமயத்திலிருந்து 4கிமீ தொலைவில் அமைந்துள்ள கடியாபட்டியில் பிறந்தார். இயற்பெயர்:சத்தியமூர்த்தி. பெற்றோர் : குங்கிலியம் சண்முகனார் - மீனாட்சி. கல்வி : தொடக்க, உயர்நிலைக் கல்வியை கடியாபட்டியில் உள்ள பூமீஸ்வரர் தொடக்கப்பள்ளி மற்றும் உயர்நிலைப் பள்ளியிலும், கல்லூரிக் கல்வியைக் காரைக்குடி அழகப்பாக் கல்லூரியிலும், முதுகலைப் பட்டத்தை(தமிழ்) அண்ணாமலைப் பல்கலைக்கழகத்திலும் பயின்றார். "நூறு ஆண்டுகளில் தமிழ்நூல் பதிப்புமுறை வளர்ச்சி (1850-1950)" என்னும் ஆய்விற்காக 1988இல் முனைவர் பட்டம் பெற்றார். பணி: அண்ணாமலைப் பல்கலைக்கழகத்தில் 1957இல் விரிவுரையாளராகப் பணியில் சேர்ந்து பல நிலைகளில் 36 ஆண்டுகள் ஆசிரியப் பணியாற்றி 1993இல் ஓய்வு பெற்றார். பிற பணிகள் : வள்ளுவம் இதழின் சிறப்பாசிரியர், தமிழக அரசின் தமிழ்ச் சங்கப் பலகை குறள் பீடத்தின் பொதுக்குழு உறுப்பினர், தமிழகப் புலவர் குழுவின் துணைத்தலைவர், அண்ணாமலைப் பல்கலைக்கழகப் பேரவை, தமிழ்ப் பல்கலைக்கழகப் பேரவை மற்றும் ஆட்சிக்குழு உறுப்பினர் எனப்பல. பல ஆய்வு அமைப்புகளோடு தொடர்புடையவர். பதிப்புப்பணி: 1961இல் மணிவாசகர் (நூலகம்) பதிப்பகத்தை நிறுவி பல்வேறு துறைசார்ந்த நூல்களை வெளியிட்டப் பெருமைக்குரியவர். இவரது வெளியீட்டில் மலர்ந்த "வெற்றித் துணைவன்" மிகவும் குறிப்பிடத்தக்கது. பதிப்பிப்பதோடு இவர் பல நூல்களையும் எழுதியுள்ளார். "தாகூர்" என்ற நூல் அரசு விருது பெற்றது. விருதுகள் : 'தமிழ்வேள்', 'செந்தமிழ்க்காவலர்' போன்ற பட்டங்களை முறையே குன்றக்குடி அடிகளார், தருமபுரம் ஆதீனம் ஆகியோரிடமிருந்து பெற்றார். திருச்சித் தமிழ்ச் சங்கத்தின் 'மீனாட்சிசுந்தரம்பிள்ளை விருது', நகரத்தார் மன்றத்தின் (மதுரை) 'திருப்பணிச் செம்மல்' போன்ற பல விருதுகளைப் பெற்றுள்ளார். சமூகப் பணி : தமிழகப் பல்கலைக்கழகங்கள் பலவற்றில் ஆய்வுக்காகப் பல அறக்கட்டளைகள் நிறுவியுள்ளார். ஆய்வு மாணவர்கள், பொதுமக்களின் பயன்பாட்டிற்காக சிதம்பரத்தில் 2002இல் 40,000க்கும் மேற்பட்ட நூல்களைக் கொண்டு 'மெய்யப்பன் தமிழாய்வகத்தை' நிறுவினார். இப்பெருமகனாரின் மறைவு அன்னாரின் குடும்பத்தினருக்கும் தமிழ் உலகிற்கும் பேரிழப்பாகும்.

# ஆவணம்

*தமிழகத் தொல்லியல் கழகத்தின் ஆண்டு இதழ்*

**ஆவணம்** தமிழக வரலாற்றை வளப்படுத்தும் எல்லா அடிப்படைச் சான்றுகளையும் வெளியிடும் நோக்கம் கொண்டது. இதுவரை வெளியிடப்படாத கல்வெட்டுகள், செப்பேடுகள், ஓலைச்சுவடிகள், காகித ஆவணங்கள், தொல்பொருள்கள், காசுகள், கலைப்பொருள்கள் ஆகியவற்றைப் பற்றிய செய்திகளையும், கட்டுரைகளையும் ஏந்தி வருகிறது. இது தமிழக வரலாற்றில் ஈடுபாடுடைய யாவருடைய நூலகங்களுக்கும் இன்றியமையாத வரலாற்றுக் கருவூலம்.

| | |
|---|---|
| **ஆவணம் 1 - 2** | இருப்பு இல்லை |
| **ஆவணம் 3 - 14** | ரூ.100/- (இதழ் ஒன்றுக்கு) |
| **ஆவணம் 15** | ரூ.150/- (இதழ் ஒன்றுக்கு) |

நொபொரு கராஷிமா, ***வரலாற்றுப்போக்கில் தென்னகச் சமூகம்*** - ரூ.100/-

தமிழகத் தொல்லியல் கழக இதழ்களைப் பெற விழைவோர், சரியான தொகையை வரைவோலை, காசோலை அல்லது பணவிடை மூலம் பொருளாளர் முகவரிக்கு அனுப்ப வேண்டும்.

கழகத்தின் வாழ்நாள் உறுப்பினர் கட்டணம் ரூ.1000/-

நிறுவனங்களுக்கு உறுப்பினர் கட்டணம் ரூ.2000/-

புதிய வெளியீடுகள் பகுதியில் நூல்களைச் சேர்க்க விரும்புவோர் ஒவ்வொரு நூலுக்கும் மூன்று படிகளையும், அஞ்சல் செலவுக்கு ரூ.50/-ம் செயலாளருக்கு அனுப்பி வைக்க வேண்டும்.

வரைவோலை, காசோலை, பணவிடைகள் தமிழகத் தொல்லியல் கழகம் என்ற பெயரில் இருத்தல் வேண்டும். காசோலையாக இருந்தால் கூடவே வங்கிப் பிடித்தம் ரூ.25/-ஐச் சேர்த்து அனுப்ப வேண்டும்.


## முகவரி

செயலர்/பொருளாளர்
தமிழகத் தொல்லியல் கழகம்
(மே/பா) கல்வெட்டியல் மற்றும் தொல்லியல் துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம், தஞ்சாவூர் 613 005.

Contact Address
Secretary/Treasurer
Tamil Nadu Archaeological Society
C/o Department of Epigraphy and Archaeology
Tamil University, Thanjavur - 613 005


---


*அச்சிட்டோர்: **விஜய் ஆப்செட் பிரிண்டர்ஸ்,** T B. ரோடு, மதுரை - **625 016***

# AVANAM

## Annual issue of the Tamilnadu Archaeological Society

Avanam aims at bringing to lime light all kinds of primary sources, which unravel the history of Tamilnadu. It carries reports on the hitherto unpublished epigraphs, copper plate records, palm leaf manuscripts, paper documents, archaeological artifacts, coins, art objects and articles. It is a treasure house of original resources to be adorned in the library of each and every one, who is interested in the history of Tamilnadu.

**Avanam** 1–2 not available

**Avanam** 3–14 Rs. 100/- (per copy)

**Avanam** 15 Rs. 150/- (per copy)

Those who wish to buy the back volumes of the **Avanam** may send a D.D. or Cheque for Rs.100/- (per copy), drawn in favour of the **Tamilnadu Archaeological Society**, to the Treasurer, C/o Department of Epigraphy and Archaeology, Tamil University, Thanjavur - 613 005. Cheques should be sent with an additional amount of Rs.25/- to meet the Bank commission.

Those who wish to become life members may send Rs.1000/- to the Treasurer.

Those who want to get their newly published books reviewed in the **Avanam** should send three copies of the book to be reviewed, along with a sum of Rs.50/- for postal expenditure, to the Secretary.

Noburu Karashima, **Varalarruppokkil Thennagacchamugam**, Rs.100/-

Address to be contacted

Secretary / Treasurer
Tamilnadu Archaeological Society,
C/o. Department of Epigraphy and Archaeology,
Tamil University, Thanjavur - 613 005.

